கழக வெளியீடு: ௲௮௫

பண்டைத் தமிழர்

# இன்பியல் வாழ்க்கை




கழகப் புலவராயிருந்த
திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளை யவர்கள்
(இளவழகனார்)
எழுதியது.






திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

உலக மக்களியாவர்க்கும் நாகரிகங் கற்பித்தோர் பண்டைத் தண்டமிழ் மக்களாவர். உண்மை யுணராத பிற நாட்டினரேயன்றி நஞ் செந்தமிழ்நாட்டுச் சீரியோர் சிலருங்கூட இதனை ஆய்ந்து கூறும் அறிஞர்களைக் குறித்து நகையாடுவாராயினர்.

'தமிழெனவொரு தனிமொழி யுளதா' வெனக் கேட்கப்படும் காலம் மாறி, 'தமிழும் உயர்தனிச் செம்மொழியே' என்றும், 'உயர்தனிச் செம்மொழிகள் யாவற்றினும் தமிழ் தலை சிறந்தது' என்றும்; 'உலக மொழிகளனைத்திற்கும் தமிழ் தாய்மொழி' என்றும் உவந்து கூறுங் காலமன்றோ விது !

இற்றைநாள் ஆராய்ச்சியாளர் இம்முடிபுக்கு வர ஏதுவாயிருந்தன புதைபொருளாய்வும், மொழி மூல ஆய்வுமேயாகும். தண்டமிழ்ப் பண்டைப் பனுவல்களும் இவ்வாய்வுக்கு மேற்கொள்ளப்படின் பெரிதும் சிறந்து காட்டும்

ஆகவே, பண்டைத் தமிழ்மக்களின் நாகரிக வாழ்வை மக்கட்குக் காட்டுதற் பொருட்டும், பண்டைத் தமிழ்நாடு, மக்கள், மொழி ஆய்வுகட்குப் பண்டைத் தமிழ்ப் பனுவல்கள் பெரிதும் பயன்படும் என்பதை விளக்குதற் பொருட்டும், பண்டைத் தமிழ்நூல்கள் கற்கும் அவாவை மக்கட்கு ஊட்டுதற் பொருட்டும், அவை கற்பதற்கு இஃது ஓர் ஏணியாக உதவுதற் பொருட்டும் இந்நூல் எழுதப்பெற்றுள்ளது.

இது பண்டைத் தமிழரின் இல்லற வாழ்வினை இனிது விளக்கும். புறத்தார்க்கு இத்தகைத்தென எடுத்துக்கூற வியலாததாய், ஒத்த தலைவனுந் தலைவியும் தம்முட் கூடி நுகர்ந்து இன்புறத் தக்கதாய் உள்ள

பொருளை அகப்பொருளென ஆன்றோரருளினர். அதனை விளக்கும் இலக்கியம் அகப்பொருளிலக்கியமென்றும், இலக்கணம் அகப்பொருளிலக்கணமென்றும் பெயர்பெறும்.

பிறமொழிகட்குப் பொருளிலக்கணம் இதுவரை எழவில்லை. தமிழ்மொழி யொன்றற்கே பண்டைக் காலந் தொட்டு இவ்விலக்கணம் சிறப்புடைமையாகும்.

ஒருவன் ஒருத்தியைக் காணுதல் முதல் அவர்கள் மணந்து கூடி இல்லறம் நடாத்தி இன்பமடைதல் முடிய வுள்ள வாழ்வியற் குறிப்புக்களைச் சுருக்கிப் பன்னிரண்டு தலைப்புக்களில் இந்நூல் இனிது விளக்குகின்றது. இலக்கண இலக்கியங்களை ஆய்ந்து கோவைப்படுத்தி உரை நடையில் இத்தகைய தொருநூல் இதுவரை வெளியிடப் படவில்லை. ஆதலின் செந்தமிழ்ச் செல்வி சு-ஆம் சிலம்பில் வெளிவந்த கட்டுரைகளைத் தொகுத்து அரிய திருத்தங்களுடனும், அவ்வத் தலைப்புக்களை விளக்கும் குறிப்புக்களுடனும் இந்நூல் வெளியிடப் பெறுகின்றது. இதனை எழுதியுதவியவர் கழகப் புலவராயிருந்த, திருவாளர் இளவழகனாரவர்களாவர். பன்னிரு பகுதிகளை விளக்கும் படங்களும் இதன்கண் சேர்க்கப்பட்டுள்ளன.

தமிழ்மக்கள் இதனைப் போற்றி எங்கட்கு மேலும் ஊக்கமளிப்பார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

---




உ. பாங்கற் கூட்டம்



ச. மடற்றிறம்




சு. பகற்குறி



அ. ஒருவழித்தணத்தல்



௯. அறத்தோடு நிற்றல்



க௦. திருப்பொன்னூசல்



கக. பொருள்வயிற் பிரிவு



கஉ. இல்லற வாழ்க்கை

## பண்டைத்தமிழர்

# இன்பியல் வாழ்க்கை

### க. இயற்கைப் புணர்ச்சி

[ஊழ்கூட்ட, வேறு ஆராச்சியின்றி, ஒரு நல் இளைஞனும் ஒரு நங்கையும் ஒத்த அன்பினால் உள்ளங் கலந்து உறவு கொள்ளுதல்.]

திருவளர் தாமரை, சீர்வளர்
காவிகள், ஈசர் தில்லைக்
குருவளர் பூங்குமிழ், கோங்கு,பைங்
காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலை,ஓர் வல்லியின்
ஒல்கி அனநடைவாய்ந்து
உருவளர் காமன்றன் வென்றிக்
கொடிபோன்று ஒளிர்கின்றதே.

—திருச்சிற்றம்பலக் கோவையார், க.

காட்சி:

அழகு மிகுந்த தாமரைப் பூவினையும், சிறப்பு மிகுந்த நீலப்பூக்களையும், சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தில்லைக்கண் உண்டாகிய நிறம் மிகுந்த அழகிய குமிழம் பூவினையும், கோங்கின் அரும்புகளையும், செவ்விய காந்தட் பூக்களையுங் கொண்டு மேம்பட்ட தெய்வ மணம் மிகுந்த மாலை, ஒரு வல்லிக்கொடி போல வளைந்து அன்னநடை பொருந்தி, அழகு மிகுந்த காமனது வெற்றிக்கொடியை யொத்து விளங்குகின்றதே! ஆ, இவ் வியப் பென்னே!

இது தலைமகன் தலைமகளை முதன்முதலிற் கண்ட போது வியந்தெண்ணியது.

திரு, கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம் என்று உரை கூறினர் பேராசிரியர். தாமரை காவிகள் குமிழ் கோங்கு காந்தள் என்னும் செடிப்பெயர்கள் அவ் வவற்றின் பூக்களை உணர்த்தி ஆகுபெயர்களாய் நின்றன. முறையே அவை மருதம், நெய்தல், முல்லை, பாலை, குறிஞ்சி என்னும் ஐந்து நிலங்களின் பூக்களுமா மாதலால் ஊடல், இரங்கல், இருத்தல், பிரிதல், புணர்தல் என்னும் ஐந்து ஒழுக்கங்களும் இங்குத் தலைவனுந் தலைவியும் தலைப் பட்டுக் கூடி மறைவதற்குட் குறிப்பாய் நிகழ்தலைக் குறிப் பாற் சுட்டியவாறாயிற்று. அன்றி ஐந்திணை யொழுக்கத் துக்குந் தலைமகள் உரியவள் என்பதைக் குறிப்பித்தவாறு மாம். தாமரை நெய்தல் குமிழ் கோங்கு காந்தள் என் னும் பூக்களால் தொடுக்கப்பட்ட மணமுள்ள மாலை யொன்று காமனுடைய வென்றிக் கொடி போல ஒளிர்கின் றது என்பது இதன் கருத்து. பூக்களால் தொடுக் கப்பட்ட மாலை தலைமகளுக்கு உருவகம். எனவே விரும் பத்தக்க மலர்ச்சியுடைய அவள் முகத்துக்குத் தாமரைப் பூவும், கருமையான சிறிய கண்களுக்கு நீலப்பூக்களும், நீண்டு மெலிந்து நிலைத்த சின்னஞ் சிறு மூக்குக்குக் குமிழம் பூவும், துனி குவிந்த சிறு சிறு கொங்கைகளுக்குக் கோங்கின் அரும்புகளும், மெல்லியவாய் விரிந்த செவ்விய கைகளுக்குக் காந்தட் பூக்களும் உருவகமாமென்க. இக் கோவைச் செய்யுள் அப் பெண்ணரசியின் தலைமுதற் கால் களீறாகப் புனைந்துரை செய்கின்றது.

மற்ற உறுப்புக்களை விடப் புணர்ச்சிக்குச் சிறந்த தான கொங்கைக்குக் கோங்கினரும்பு உருவகமாக வருத லால், அதற்கு மற்றைப் பூக்களைப்போல அடைமொழி கொடுத்துச் சிறப்பிக்கவேண்டிய தின்றாயிற்று. இனிப் பாலைநிலம் மற்ற நிலங்களைப் போலத் தனிநில மாகாமை யால், அதனைச் சுட்டிவந்த கோங்கினரும்பும் அடைமொழி கொடுத்து மற்றவற்றைப் போலச் சிறப்பிக்கப்படாத

தாயிற்று என்றலுமாம். ஐந்து திணைகளையும் ஒருமிக்கக் கூறினாரேனும், இறுதியிற் குறிஞ்சித் திணையையே நிறுத்தினாராதலின் அக் குறிஞ்சித் திணையே 'சொல்லின் முடிவின் அப்பொருண் முடித்தல்' என்னும் உத்திப்படி இங்குக் கூறப்பட்ட முதன்மையான திணையாம் என்பதும், மற்றைய நான்கும் இதனையே சிறப்பிக்கவந்த துணையான திணைகளாம் என்பதும் பெறப்படும். ஆசிரியர் தொல்காப்பியனார் புணர்ச்சிக்குரிய வெளிப்படையான மெய்ப்பாடு "இருகையும் எடுத்தல்"* என்பாராதலால், அவ்வொழுக்கமாகிய குறிஞ்சித் திணையை இங்குக் கைகளுக்கு உருவகமாக வருங் காந்தண் மலர் குறித்துநிற்பது வியந்து மகிழத் தக்கது. 'உருவளர் காமன்றன் வென்றிக்கொடி' என்றது தலைமகனின் வேட்கை மிகுதியையும், அவன் ஆண்மை நெஞ்சத்தை இழுத்து வெற்றிகொண்ட தலைமகளின் பெண்மைத் தன்மையின் திறத்தையுங் குறித்தது. 'உருவளர் காமன்' என்றார், அவள் வடிவம் வளர்ந்தமைந்து முதிர முதிர அவள் அழகும் வளர்ந்தமைந்து முதிர்ந்து காட்டும் என்பதற்கு. முகம், கண், மூக்கு முதலாக இங்குக் கூறப்பட்ட உறுப்புக்களால் நெஞ்சம் இழுப்புண்டதென்றது அவ்வுறுப்புக்களின் வாயிலாக ஒளிரும் பெண்மைத் தன்மையாகிய சாயலழகினால் இழுப்புண்டதென்றற்கு. இவ்வுண்மையினை, 'உறுப்புக்களாலன்றி அவற்றின் வாயிலாக ஒளிரும் சாயலழகினாற்றான் தலைமகன் நெஞ்சம் மயங்கிற்று? என்னும் பொருளில் ஓர் உறுப்பினையேனுங் கூறாது வெறும் இயல்நலங் கனிந்த அவள் சாயலழகினையே வைத்து நாயனார்,

"அணங்குகொல்† ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்‡ என் நெஞ்சு" (திருக்குறள் : ௧௦௮௧)

என்று அருளிச் செய்தமையாற் றெளியலாம். 'மாலை ஒளிர்கின்றதே' என்று இக்கோவைச் செய்யுளிற் காணப்படுஞ் சொற்பொருட் குறிப்புகளும் இது.

---

* தொல். மெய்ப்பாட்டியல், ௧௫. † அணங்குகொல்-தெய்வமகளோ? ‡ மாலும் - மயங்கும்.

'ஈசர் தில்லை' என்றது இக் களவொழுக்கம் வீடு பேற்றிற் கேற்ற அன்புவளர்ச்சியினையும் விளைவிக்கும் என்பதற்குப் பேராசிரியரும் இதனைக் 'களவொழுக்க மென்னும் பெயர் பெற்று வீடுபேற்றின் பயத்ததாய் அன்பினானிகழுகின்ற காமப்பொருள்' என்று நன்கு சிறப் பிப்பர் என்க.

## இயற்கைப் புணர்ச்சியின் இயல்பு :

இனித் தலைமகன் இங்ஙனமெல்லாம் தலைமகளைக் கண்ணுற்ற அந்த நேரத்திலேயே அதனை அடுத்து எண்ணும் ஏதொரு சிறு நினைப்பும் இல்லாதவனாய்த் தன்னிலை யிழந்து அவளோடு இசைவுபட்டமையும், அங்ஙனமே தலைமகளும் அத் தலைமகனைக் கண்ணுற்றுக் கண்ணுற்ற அந்த நோத்திலேயே அதனை அடுத்து எண்ணும் ஏதொரு சிறு நினைப்பும் இல்லாதவளாய்த் தன்னிலை யிழந்து அவ னோடு இசைவு பட்டமையுமே இயற்கைப் புணர்ச்சி யெனப் படுஞ் சிறப்புடைத்தாம் என்று அறிதல் வேண்டும். இவள் பால் அன்புவைப்பது முறையாகுமா அல்லது முறையாகா தொழியுமா என்றும், அதற்கு அழகு, அறிவு, கல்வி, செல்வம் முதலியவற்றான் அவள் தகுதியுடையவள் ஆவளா அல்லது அவள் தகுதியில்லாதவ ளாய்விடுவளா என்றும் இவ்வாறெல்லாம் ஆராய்ந்து பார்க்கும் ஆராய்ச்சி அறிவும் ஆற்றலும் தலைமகளைக் கண்ணுற்ற அந்தத் தலைமகனுக்கு இருக்குமானாலும், அங்ஙனமே தலை மகளுக்கும் அவ்வெண்ணம் தலைமகனை நோக்கி இருக்கு மானாலும், அவரது கூட்டம் 'இயற்கைப் புணர்ச்சி' யாகாது. மற்று, இங்ஙனம் இருவரும் தமக்குத்தாமே தம் மறிவால் ஆராய்ந்து செயற்கையாய்ச் சேராது அல்லது தமக்குள்ள சுற்றத்தார் அறிவால் ஆராய்ந்து அவர் சேர்க் கச் செயற்கையாய்ச் சேராது ஒருவரை யொருவர் கண் ணுற்றபோது, அவரிருவருடைய ஆராய்ச்சியும் எண்ண மும் செயலும் நிகழாமலே அவை நிகழுதற்கு முன்பே முற் பிறப்புக்களில் தொன்றுதொட்டதாய் வரும் ஊழ்வினை, இருந்தவாறு கடவுளருளால் அவர்தம் உள்ளம் இசைவு

படுதலால், அஃது 'இயற்கைப் புணர்ச்சி' என்பதற்கு உரித்தாயிற்றென்க.

கற்பு இதன் வழியதே:

இறைவன் அம் மக்களை ஒத்த நிலையிலும் ஒரே இடத்திலும் பிறப்பித்து அவர்களை ஒன்று கூட்டுதலிலேயே கருத்துடையனாய் முயன்று நிற்ப, அவன்றன் விழுமிய திருக்குறிப்பை அறியாதும், ஆண் பெண் உயிர்கட்குள்ள இயற்கை யொற்றுமையையும் காதலையும் அவைதாம் பிறந்து உழன்றுவரும் உண்மை வரலாற்றையும் ஆராயாதும் இஞ்ஞான்று பெற்றோர் சுற்றத்தார் எனப்படுவோர், தம் பெண்மக்களுக்கும் ஆண்மக்களுக்கும் உரியரல்லாத, உண்மைக்காதலிசைவு இயற்கையே பொருந்தாத வேறு பிறரான ஆண்மக்களையும் பெண்மக்களையும் உறவு பணம் முதலிய தத்தம் நலங்களை நோக்கி வலிந்து தேடிக் கூட்டிக்கொண்டுவந்து ஆடுமாடுகளைப் பிணைப்பதுபோலச் செயற்கையில் உறவு செய்விப்பாராயினர். இஃது உண்மைக்கு மாறுபடுவதேயா மாதலால்,

* "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று" (திருக்குறள் : கூகங)

† "நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்" (திருக்குறள் : கூகஎ)

என்று 'அன்பினல்லாதாரைத் தழுவியவர் பிணத்தைத் தழுவியவராவர்; கற்பிழந்தவராவர்' என்னும் பொருளில் வரும் திருவள்ளுவர்தம் வாய்மை யுரைக்கும் இலக்காயிற்றுக் காண்க. உண்மையில் வேறொருவருக்கு உரிய பெண்மகளொருத்தியை அவள் பெற்றோர் உறவினர் முதலியோர் உரியனல்லாத ஆண்மகனொருவனைத் தாம் வலிந்து தேடி அவனுக்குப் பல்லோரறியத் திருமணமே செய்து கொடுத்தாரானாலுங்கூட அவனும் அவளும் உண்மைக் கற்புடையோராய் விடுவரோ வென்க.

---

* முயக்கம் - கூட்டம். ஏது இல் - தொடர்பில்லாத; அயல் என்னும் பொருட்டு. † பேணி - போற்றப்பட்டு.

## இது பிறவித் தொடர்பு:

ஆகவே இயற்கையே ஒருவருக்கொருவர் உரியவரான ஆண் பெண் என்னுங் காதன்மக்கள், ஒருவரையொருவர் திடீரென்று கண்டு முன் பின் பார்த்துப் பழகியவரைப் போல மகிழ்ந்து உள்ளமும் உடம்பும் உறவுறுதலால், அவ்வியற்கை மக்கட்புணர்ச்சி 'இயற்கைப் புணர்ச்சி' யென்னும் பெயர் பெற்றதென்று கொள்க. அவர் முற்பிறப்புக்களிலெல்லாம் பழகியவராதலால் இங்குக் கண்டபொழுது, நினைந்துபார்க்கும் ஆராய்ச்சி யறிவும் எண்ணமுமே யின்றித் திடீரென்று ஒருவருக்கொருவர் உள்ளம் வீழ்ந்துகொள்வரென்க. வேட்கைமிகுந்த இவர்கள் இயற்கைப்புணர்ச்சியை 'வீழும்' என்னுஞ் சொல்லாற் பெறவைத்து,

> * "கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
> திருநுதற்கு இல்லை இடம்" (திருக்குறள் - ககஉங)

என்று கூறும் பகுதி இங்குக் காணத்தக்கது. மற்றையோர் கூட்டம் செயற்கைப் புணர்ச்சியதாம் என்பது.

---

## உ. பாங்கற் கூட்டம்

[தன் காதற் கிழத்தியை மீண்டுங் காண்பதற்கு ஒரு வாயிலாகும்படி தலைவன் தன் பாங்கனோடு கூடுதல்.]

எலுவ! சிறாஅர் ஏம்உறு நண்ப!
புலவர் தோழ! கேளாய் அத்தை;
மாக்கடல் நடுவண் எண்நாள் பக்கத்துப்
பசுவெண் திங்கள் தோன்றி யாங்குக்
கதுப்புஅயல் விளங்கும் சிறுநுதல்
புதுக்கோள் யானையின் பிணித்தற்றால் எம்மே.

—குறுந்தொகை - கஉகூ.

---

* வீழும் - விரும்பும்.

இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் தன் தலைவியைப் பிரிந்த பிறகு, தன்னை எதிர்ப்பட்டு உற்றது கேட்ட பாங்கனுக்கு,

> "தோழ! சிறுவர்கட்குப் பாதுகாவலாய் உள்ள அன்ப! புலவர் பெருமக்களின் நண்ப! அதனைக் கேள்: கரிய கடலின் நடுவிலே வளர்பிறைப் பக்கத்து எட்டா நாளின் கொழுந்தனைய வெள்ளைத் திங்கள் தோன்றினாற்போலக் கூந்தலின் பக்கத்தே விளங்குகின்ற ஒருத்தியின் சிறிய நெற்றி, புதிதாகப் பிணிக்கப்படுகின்ற யானையைப்போல் என்னைப் பிணித்திட்டது"

என்று கூறியதாக உள்ளது இப் பாட்டு.

அறிவுரை கூறிச் சிறுவர்களை நல்வழிப்படுத்தி, அவர்கட்குப் பாதுகாவலாய் இருப்பவன் என்பது புலப்படச் 'சிறாஅர் ஏமம்உறு நண்ப' என்றான். அத்தை - முன்னிலையசையுமாம். மா, கருமைப் பொருளில் வருதலை *"இரும்பு திரித்தன்ன மா †இரு மருப்பின்" என்பதிற் காண்க. கரிய கடல் கூந்தலுக்கும் அரைவட்டம்போன்ற எட்டாம் பிறைத்திங்கள் நெற்றிக்கும் உவமைகள். சிறுநுதல் ஆகுபெயராய் அதனையுடைய பெண்ணை யுணர்த்திற்று. சிறுநுதலைச் சுட்டினான், இதற்கே இத்துணைத் துன்பமுண்டாகுமானால் இன்னும் பெருந்தோள் பெருங்கண் முதலியவற்றுலெல்லாம் எத்துணைத் துன்பம் உண்டாயிருத்தல் வேண்டுமென்று தான் படுந் துன்பத்தின் பேரளவைப் பாங்கன் உணர்ந்துகொள்ளுதற் பொருட்டு. புதிதாகக் கொள்ளப்படுகின்ற யானை எழுந்து தன்வழிச் செல்லமாட்டாதவாறு ஒரு குழியினுள் அகப்பட்டுக்கொள்ளுதல்போல நானும் உணர்ச்சிதெளிந்து அறிவு நிறை ‡ஓர்ப்பு கடைப்பிடி என்னும் என் அறிவு ஒழுக்கங்களிற் செல்லமாட்டாதபடி அவள் சூழலில் அகப்பட்டுக்கொண்டேனென்பான்,

* அகநானூறு, ச. † இரு - பெரிய. ‡ ஓர்ப்பு - ஆராய்ச்சி.

'புதுக்கோள் யானையின் பிணித்தற்றால் எம்மே' என்றான். கண்டவுடன் அறிவு மயங்குதல் பெரிதன்று; மற்றுப் புணர்ச்சி நீங்கிய பின்னரும் அறிவு தெளிதலின்றித் தன்வழிப்பட்டுக் கிடக்குமாறு அவ்வியற்கைக் காதலன்பு பிணித்திடுதலின் இங்ஙனங் கூறினானென்பது.

கூடிய காதலர் :

இவ்வாறு காமப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன், உடனே அப் பெண்ணினல்லாளைத் திருமணஞ் செய்து கொள்ளுதல் சிறப்பு. அஃதியலாதானால் அவனும் அவளும் திரும்பவும் ஒருவரையொருவர் கண்டு கூடுதலையே விரும்புவார்களாதலின், மீண்டு மீண்டும் அவர்கள் இயற்கைப் புணர்ச்சியைப் போன்ற களவொழுக்கத்திலேயே கண்ணுங் கருத்துமாய் நிற்பார்கள். உடனே திருமணஞ் செய்து கொள்வோர் கற்பொழுக்கத்தில் நிற்பவராமாதலால், அவர்தங் கற்பொழுக்கத்தைக் கூறுதற்கு முன்பு, அவரொழிந்த ஏனைய திருமணம் ஏலா மக்கள் நிற்குங் களவொழுக்கப் பகுதிகளை யெல்லாங் கூறிவிடுதல் அகப்பொருள் நூல்கட்கு மரபு. அங்ஙனங் கூறப்படும் அக் களவுப் பகுதிகளில் இப் பாங்கற்கூட்டமும் ஒன்றாய், இயற்கைப் புணர்ச்சியை அடுத்து நிகழ்வதாய் உள்ளது.

பாங்கற்கூட்டமென்பது, தலைமகன் தன் தலைவியோடு முதற்கூட்டம் பெற்றுப் பிரிந்த மறுநாள், மீண்டும் அவளைக் காண்பதற்கு விழைந்து அதற்குத் துணையாய் நிற்கும்படி வேண்டிக்கொள்ளுதற்காகத் தன் பாங்கனோடு கூடுதலாகும்.

அக் கூட்டம் ஆமாறு: பள்ளத்துவழி வெள்ளம் போல முதற்புணர்ச்சியால் உள்ளங் கலந்து ஒழுகிய தலைமகனுந் தலைமகளும், பிரிந்ததன் பின்னர் மிகவும் உள் உளைந்து வருந்துவார்கள். புணர்ந்து பிரிந்த இவர்தம் உள்ள நிலைமையை ஆசிரியர் தொல்காப்பியனார்,

* "வேட்கை, ஒருதலை உள்ளுதல், மெலிதல்,
ஆக்கம்செப்பல், நாணுவரை இறத்தல்,
நோக்குவ எல்லாம் அவையே போறல்,
மறத்தல், மயக்கம், சாக்காடு என்றுஅச்
சிறப்புடை மரபினவை களவுஎன மொழிப."†

என்னும் நூற்பாவால், புணர்தற்கு முன்னிருந்த வேட்கையே அதன் பின்னுமிருத்தல், இடைவிடாது ஒருவரை யொருவர் நினைத்துக்கொண் டிருத்தல், அங்ஙனம் நினைத்து ஒரே ஏக்கமாய் இருத்தலால் உடம்பு இளைத்திடுமாறு உள்ளம் மெலிதல், தங்கள் காதற்களவொழுக்கத்துக்கு எவையேனும் இடையூறுகள் தோன்றுமானால் அவைகளும் நன்மைக்காகத்தான் தோன்றினபோலுமென்று தமக்கு ஆக்கமாகச் சொல்லிக்கொள்ளுதல், தம் அவாவைப் பொறுக்குமளவும் பொறுத்து நாணத்தோடிருந்து பொறுக்கமாட்டாத பொழுது அந் நாணத்தைக் கடந்து விடுதல், பிறர் தம்மைப் பார்த்த காலங்களிலெல்லாம் தாமொழுகுங் களவொழுக்கத்தைத் தெரிந்துகொண்டுதான் இவர்கள் இவ்வாறு பார்க்கிறார்கள் போலுமென்று அவர்கள் பார்வையைத் தங் கருத்துக் கேற்பத் திரியக்கொள்ளுதல், இடைவிடாத இக் காதல் நினைவினால் வருந்தி விளையாட்டு முதலியவற்றை யெல்லாம் மறந்துவிடுதல், செய்வது இன்னதென்றறியாமலே தம் அன்பினையும் அதன் வழியவான அவா ஆற்றாமைகளையும் எதிர்மொழிதானுங் கூறுதல் இயலாத பறவை விலங்கு முதலியவற்றோடெல்லாம் கூறிக்கொள்ளுதல், ஆற்றமுடியாமையினாலும் தம் எண்ணம் விரும்பியவாறு நிறைவேறாமையினாலும் இதனினும் இறத்தலே நன்றென்று கூறிக்கொள்ளுதல் முதலியவைகளா மென்பர்.

இவற்றுள் இக் காதன் மக்கட்குத் தோன்றும் இடையூறுகளாவன பிரிவு முதலாயினவா மாதலின் அப் பிரிவும்

---

* ஒருதலை - உறுதியாக: இடைவிடாமல் என்னும் பொருட்டு. நாணுவரை - நாணத்தின் வரம்பு. களவு - களவொழுக்கத்து அன்பின் நிகழ்ச்சிகள். † தொல். கள. ௯.

அன்பினாலன்றோ நிகழ்ந்தது என்றிங்ஙனங் கூறிக்கொள்ளு தல் ஆக்கஞ்செப்பலா மென்றும், தலைவனும் தலைவியும் தன் பாங்கனுக்கும் தோழிக்கும் தங்கள் ஒழுக்கத்தைக் கூறி உதவிசெய்யுமாறு வேண்டுதலே நாணத்தைக் கடத் தலா மென்றும், தலைவன் வேட்டை மேலிட்டுக் காட்டில் திரிதல் முதலியன செய்யாதொழிதலும் தலைவி கிளியும் பந்தும் முதலியன கொண்டு விளையாடுதலைத் தவிர்ந்தாளா தலும் விளையாட்டு மறத்தலாமென்றும், தலைவன் மலை பாய்வேனென்பது முதலாகக் கூறுதலும், தலைவி இப் பிறப்பை யொழித்து மறுபிறப்பிலாயினும் என் கணவனை யடைவேனென்று கூறுதலும் அவர்கட்குச் சாக்காடா மென்றும் அறிதல் வேண்டும்.

## இடந் தலைப்பாடு:

இங்ஙனமெல்லாம் வருந்திக்கிடக்கும் இவர் தம்முள் தலைமகன் எண்ணுமாறு: "நாம் நம் தலைவியை இயற்கைப் புணர்ச்சியுற்றுப் பிரிந்தபோது 'நின்னிற் பிரியேன்; பிரி யின் ஆற்றேன்' என்று அவட்குச் சொன்னோ மல்லமோ! மீண்டும் நாம் அவளைக் காணாமையால் அக் காதல் நோயை அவள் பொறுத்துக் கொள்வளோ, அல்லது பொறுக்க மாட்டாமல் உள் உளைந்து வருந்துவளோ? ஒரு கால் பொறுக்க முடியாதாயின் அதனைப் பிறர்க்குத் தெரிய வொட்டாதவாறு மறைத்தல் அவட்குக் கூடுமோ அல்லது கூடாது போகுமோ? கூடாதாயின், அவள் அதன் பொருட்டு எவ்வாறெல்லாம் வருந்துகின்றாளோ? ஆ! என்னே, நாம் நம் தலைவிக்குச் செய்திட்ட பொறுக்க லாகாத் துன்பங்கள்," என்றிவ்வாறெல்லாம் முன்பு பிரிந்த நாளில் தான் கூறிய சொற்களை நினைந்து நினைந்து உருகு வான். ஆகவே மீண்டுங் கூடுவது எவ்வாறென்று எண்ணு வான், முன்பு முதற்கூட்டம் பெற்றபொழுது நமக்கு யாரும் துணைசெய்யாததுபோகத் திருவருளுதவியால் வினை யன்றோ நம்மை அவளோடு கூட்டிற்று; அங்ஙனமே அருள் வழிப்பட்ட அவ்வினை இன்னுங் கூட்டுவிக்கும்

என்று நினைத்து அவ் வினைவழியே சென்று அப் பொழி லிடத்தைச் சேர்ந்து அவட் கண்டு கூடி மகிழ்ந்திடுவான். அவ்விடத்தில் அவனும் அவளும் வினையினால் தலைப்படுத லால், இங்ஙனங் கூடியது இடந் தலைப்பாடு எனப்படும்.

இவ்வாறு நினைத்து இடந்தலைப்படுவார் பெரும்பாலும் பாங்கனை இல்லாதாரும், பாங்கனை உடையராயினும் நாணத்தைக் கடவாமல் அதன்கண் நிற்கும் நிறையுடை யாரும், அல்லது அப்பாங்கனிடத்துக் கூறினால் அவன் மறுத்துக்கூறுவானே என்றெண்ணும் அச்சமுடையாரும், பாங்கனுமிருந்து நாணமுமில்லாரானவிடத்தும் வினை வழியே நிற்றல் வேண்டுமென்று நினைக்கு நீருமாகவே இருப்பரென்க. இவரல்லாத ஏனையோரே பாங்கற் கூட்டம் பெறுவர்.

பாங்கனோடு கூடுதல் :

இயற்கைப்புணர்ச்சியின் இறுதியில் தனக்குத் தலைவி யாவாள் தன்னைப் பிரிந்து தோழியரோடு சேர்ந்து அள வளாவியபோழ்து அவட்குச் சிறந்தாளென்று தன்னாலறி யப்பட்ட அவள் உயிர்த்தோழி ஏதேனும் உதவி செய்வளா வென்று நினைந்து பார்த்து, ‘அத் தோழியாவாள் அவட் கன்றே சிறந்த துணையாம், நமக்கு அங்ஙனம் ஆகா தன்றே; ஆதலால் நம் தலைவியை மீண்டுங் கூடுதற்கு நமக்குச் சிறந்த துணைவனாயுள்ள நம் பாங்கனுக்கு இது காறும் நிகழ்ந்தவற்றை யெல்லாம் எடுத்துக் கூறினால் பின்பு அவளைச் சென்றெய்தக்குறையில்லை,’ என்றுஉன்னி, தன் பாங்கன்பாற் கூற விரும்பித் தலைமகன் அவனை நினைப்பான். இது திருச்சிற்றம்பலக்கோவையாருள் ‘பாங்கனை நினைதல்’ என்னுந் துறையாகக் கூறப்படும். பின்னர் நினைந்தவாறே தலைவன் பாங்கனோடு கூடி அவன் துணை பற்றி அப் பொழிலகத்தில் அவளைக் கண்டு கூடி அளவ ளாவி மகிழ்வனென்ப.

இனி இவ்விரண்டனுள், பெரும்பான்மையாக நிகழ் வது பாங்கற் கூட்டமோ அல்லது இடந் தலைப்பாடோ

வெனின், உலகத்தோர் இடுக்கணுற்றால் விதியானே தீரு மென்று இராமல், முன்னம் தீர்த்தற்குச் சுற்றத்தாரையும் நட்டாரையும் நினைப்ப ராதலாலும், பாங்கனையுடைய வரும் நிறையழிந்தவருமே பெரும்பாலாராதலாலும், இடந் தலைப்பாட்டைவிடப் பாங்கற் கூட்டமே பெரும்பான்மை யாய் நிகழுமென்க. ஆதலாலன்றோ,

* "ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் தன்வயின்
பாங்க னோரின் குறிதலைப் பெய்தலும்
பாங்கிலன் தமியோள் இடந்தலைப் படலும்என்று
ஆங்குஅவ் விரண்டே தலைப்பெயன் மரபே†"

என்று இறையனாரகப்பொருள் முதலிற் பாங்கற் கூட்டத்தை யும் பின்னர் இடந் தலைப்பாட்டையுங் கூறி நிறுத்திற் றென்பது. அதற்கு நுண்ணுரை கூறிய நக்கீரனாரும் "பெரும்பான்மையும் பாங்கனோடென்பது சிந்திக்கும்; சிறுபான்மை விதியினோ டென்பது சிந்திக்கும்; அதனால் அவன் சிந்திக்குமாற்றாலே சூத்திரஞ் செய்யப்பட்டது." என்று உண்மை கிளத்தியதூஉங் காண்க. ஆங்ஙனமாகல் ஆசிரியர் தொல்காப்பியனார், 'மெய்தொட்டுப் பயிறல்' முதலாகப் 'பேராச்சிறப்பின் இரு நான்கு கிளவியும்' என்பதீறாக வரும் இடந் தலைப்பாட்டுத் துறைகளை முதலிற் கூறி நிறுத்தி, அதன் பின்னரே 'பெற்ற வழி மகிழ்ச்சி யும்' என்பது முதலாக 'வாயில் பெட்பினும்' என்பது ஈறாக வரும் பாங்கற் கூட்டத்தின் துறைப்பொருள்களைக் கூறுதல் என்னையோவெனின், இறையனார், ஆசிரியர் தொல்காப்பியனார் என்னும் இவ்விரு பேராசிரியன்மாரும் இவ்வாறு முற்றும் நேர்மாறாகக் கூறும் பொருண்முறை யுண்மையை இனிது இணக்கி உண்மைப்பொருள் கிளந்து மயக்கந் தெளிவிப்பார் பேராசிரியரொருவராகவே காணப் படுதலின் மற்று அவருரை கொண்டு அதனைத் தெளிதல் வேண்டும். ஆசிரியர் தொல்காப்பியனார் ஈங்குக் களவிய

* குறி - குறித்த இடம். தலைப்பெய்தலும் - கூடுதலும். தமியோள் - தனித்திருக்குந் தலைவியை.

† இறைய. ௩.

வில் நிறுத்தியது போலவே, மேற்செய்யுளியலிலும் செய்யுளிற் கூறப்படும் பொருள்வகைகளைப்பற்றிக் கூறல் வேண்டி வந்தவிடத்து, இடந்தலைப்பாட்டை முன்னும் பாங்கற் கூட்டத்தைப் பின்னுமாக நிறுத்தி,

> *" காமப் புணர்ச்சியும், இடந்தலைப் பாடும்,
> பாங்கொடு தழாஅலும், தோழியிற் புணர்வுமென்று
> ஆங்கநால் வகையினும் அடைந்த சார்பொடு
> மறையென மொழிதல் மறையோர் ஆறே" †

என்றொரு நூற்பா இயற்றுவர். இதனுரையில் அவ்விறையனார் நூற்பாவையும் எடுத்துக்கொண்டு ஒப்ப நிறுத்தி இணக்கிப் பொருளெழுதும் பேராசிரியர்,

> " காமப் புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடுநிகழாதெனவும், அவ் விடந்தலைப்பாடு பிறர்பயத்தால் அரிதென்பது அவள் ஆயத்தொடுங் கூடிய கூட்டத்தான் அறிந்த தலைமகன் பாங்கனை உணர்த்தி அவனாற் குறைமுடித்துக் கோடலும், தன்வயிற் பாங்கன் அவள்வயின் பாங்குசெய்யானாகலின் அதன் பின்னர்த் தோழியாற் குறைமுடித்துக் கோடலுமென இன் நான்கும் முறையான் நிகழுங் களவொழுக்கமென்றவாறு"

என்று உரை கூறினார்.

இதனுள், காமப்புணர்ச்சி நிகழ்ந்தன்றி இடந்தலைப்பாடு நிகழாது என்றொன்று காணப்படுமாறுபோல, அதன் பின்பு இடந்தலைப்பாடு நிகழ்ந்தன்றிப் பாங்காற் கூட்டம் நிகழாது என்பதொன்று காணப்பட்டிலது. ஆகவே, இடந்தலைப்பாடு நிகழாமலே பாங்கற்கூட்டம் நிகழ்தலும் ஆம் என்பது பெறப்படுமன்றோ? மேலும், காமப்புணர்ச்சியை அடுத்து நிகழ்வதென்று கூறப்பட்ட அவ் விடந்தலைப்பாட்டினைத் தலைவன் தன் பாங்கனைக் கொண்டு குறைமுடித்துக்கொள்வான் என்றொன்று அதன்கட் காணப்படுதலால், பாங்கன் என்பவன் அவ் விடந்தலைப்பாட்டுக்கு வாயிலாவானென்பது தெளிவாகின்றது. பாங்கன் வாயிலாகவே, அவ்வாற்றான் அவன் கூட்டமாகிய

---

* காமப்புணர்ச்சி - இயற்கைப் புணர்ச்சி. பாங்கொடு - பாங்கனோடு. மறை - களவு. † தொல். செய்யுளியல், கஅசு.

பாங்கற்கூட்டமும் அதற்கு வாயிலாயிற்றென்பது உடன் தெளிவாகின்றது. தெளிவாகவே, பாங்கற்கூட்டம் நிகழ்ந் தாலும் அக்கூட்டம் ஒரு கருவியின் அளவாகவே நிற்ப, ஆண்டும் நிகழ்வது இடந் தலைப்பாடேயா மென்பது விளங்காநிற்கும். ஆகவே, இப்பொழுது 'காமப் புணர்ச் சியை அடுத்து இடந்தலைப்பாடு நிகழும்: அவ்விடந் தலைப் பாடு பாங்கன் துணையின்றி விதியே துணையாக நிகழ்ந்தா லும் நிகழும்; அங்ஙனம் நிகழாதானால் அவ்விடந் தலைப் பாடு என்பது விதித்துணையோடு பாங்கன் துணையும் பற்றி நிகழும்' என்பது பெறப்படுகின்றது.

## இடந்தலைப்பாடு இருவகை:

பாங்கன் துணையே இல்லாமல் விதியே துணையாக நிகழ்வதும், விதித் துணையோடு பாங்கன் துணையும் பற்றி நிகழ்வதும் என்னும் இரண்டு வகையுமே இடந்தலைப் பாடாமாயினும், அவ்விரண்டனுக்கும் வேற்றுமை விளங் குமாறு முன்னதை மட்டும் இடந்தலைப்பாடு என்றும், பின்னதைப் பாங்கற் கூட்டமென்றும் அகப்பொருளாசிரி யன்மார் வரைந்து கூறுவராயினர். இங்ஙனம் வேறு வேறு பிரித்து ஒரேதுப் பொருட்டு அவைதாம் வரைந்து கூறப்பட்டனவாயினும், உண்மையான் நுனித்து நோக்குவார்க்கு அவ்விரண்டுமே இடந்தலைப்பாடாமென் பது விளங்கும். "எனவே, இடந்தலைப்பாடு இரண்டா யிற்று"* என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறியதும் இங்கு நினைவுகூரற்பாலது.

ஆகவே இயற்கைப்புணர்ச்சி புணர்ந்ததன்பின் இடந் தலைப்படுவான் வேண்டுந் தலைமகன், தானாகவேனும் இடந் தலைப்படுவான்; இல்லையானால் பாங்கனோடு கூடியேனும் இடந்தலைப்படுவானே யல்லது, இவ்வகை யொழுக்கங்கள் இரண்டையுமே அவன் மேற்கொள்ளமாட்டானென்று அறிந்துகொள்க. ஈது அறிவித்தற்கே, பேராசிரியர் திருச் சிற்றம்பலக் கோவையாருரையுள்,

---

* தொல். கள. கக.

"பாங்கற்கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப்பாடு நிகழும்;
இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற் கூட்டமும் நிகழும்"*

என்று கூறுவர். இவரோடொப்பவே தெய்வப் புலமை நக்கீரனாரும் இறையனார் களவியலுரையுள்,

"பாங்கற் கூட்டம் நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது;
இடந்தலைப்பாடு நிகழின் பாங்கற் கூட்டம் நிகழாது"†

என்று கூறுதலுங் காண்க. ஆனால், ஆசிரியர் நச்சினார்க்கினியர்மட்டும் இவ்விருபேருரையாசிரியர்களின் கருத்தோடு முரணி, இடந்தலைப்பாடும் பாங்கற் கூட்டமும் என்னும் இரண்டு வகையுமே ஒருவற்கு நிகழுமென்னுங் கருத்துடையராய்த் தொல்காப்பியக் களவியலுரையுள்,

"இரண்டாங் கூட்டத்தினும்,.....மூன்றாவதாய் மேல் நிகழும்
பாங்கற் கூட்டத்தின் பின் நிகழும் இடந்தலைப் பாட்டினும்"‡

என்பது போன்ற உரைமொழிகளை அங்கங்குங் கூறுகின்றார். தொல்காப்பியர் கருத்து அஃதன்மையாதல் முன்னும் பின்னுமாக இங்குத் தெளியப்படுதலின், மற்ற அவருரை ஈங்குக் கொள்ளற்பாலதன்றென்க. அவ்வாறாயினல், 'காமப் புணர்ச்சியும்' என்னும் அச் செய்யுளியல் நூற்பாவில், 'என்று ஆங்கு நால்வகையினும்' என்று இத்தனையென்னுந் தொகுப்பெண் கொடுத்துக் கூறியதற்கு வழிவிடுமாறியாதோவெனின், ஆங்குக் களவொழுக்க வகைகள் நான்கென்று ஆசிரியன் கூறியதேயன்றி மற்று அந் நான்கும் அஃது ஒழுகினானொருவனுக்கே நிகழுமென்று கூறியதன்மையால், அதனால் ஆவதோர் இழுக்கிங்கு இல்லையென்று கொள்கவென்பது.

கருத்தோற்றுமை:

இனிக் 'காமப் புணர்ச்சியும்' என்னும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாப்பொருளையும் 'ஆங்ஙனம் புணர்ந்த' என்னுங் களவியல் நூற்பாப் பொருளையும் ஒத்திட்டுப் பார்ப்போமாயின், அவற்றுள் தினைத்தனையும்

* திருச்சிற். இடந்தலைப்பாடு. † இறைய. ‡ தொல். கள. கக.

முரண்பாடு காணப்படாது போக, தொல்காப்பியர் காமப்புணர்ச்சியையும் அதனை அடுத்து நிகழும் இடந் தலைப்பாட்டினையுங் கூறி அவ்விடந்தலைப்பாடு விதித்துணை பற்றியே நிகழாதாயின் பாங்கற்கூட்டத்தால் நிகழ்ந் திடுமென்றும், அதன் பின்னர் இன்னுந் தன் குறைகளை யெல்லாம் முடித்துக்கொள்ளுதற் பொருட்டுத் தோழியிற் கூட்டமும் நிகழுமென்று கொண்டு, இங்ஙனம் ஒன்றன் பின் ஒன்றாய்க் கூறுமிடத்துப் பாங்கற்கூட்டத்துக்குமுன் இடந்தலைப்பாட்டினை வைத்துக் களவொழுக்கத்தை நான்குவகையாக்கி நூற்பா இயற்றினர். ஆசிரியர் இறை யனாரோ வெனின், காமப்புணர்ச்சி புணர்ந்த தலைமக னுக்கு அதனையடுத்து நிகழ வேண்டுவதான இடந்தலைப் பாடுதானும் பெரும்பான்மையும் உலகத்தில் பாங்கன் துணைபற்றியே நிகழ்தலன்றி விதித்துணையே பற்றி நிகழ் தல் அரிதாகிச் சிறுபான்மையாய் முடிதலின், அப் பெரும் பான்மை சிறுபான்மை வேற்றுமை தெரித்தற் பொருட் டுப் பாங்கற்கூட்டத்தை முன் நிறுத்தி அது நிகழாதாயின் விதித்துணையே பற்றிய இடந்தலைப்பாடேனும் நிகழுமென் னுங் கருத்துடன் இடந்தலைப்பாட்டினைப் பின் நிறுத்தி நூற்பா யாத்திட்டார்; ஆதலால், காமப்புணர்ச்சியின் பின் இடந்தலைப்பாட்டினை நிறுத்திய தொல்காப்பியர் நூற் பாவால், அக் காமப்புணர்ச்சியை அடுத்து இடந்தலைப் பாடே நிகழ்வதாம் என்பதும், காமப் புணர்ச்சியின் பின் பாங்கற் கூட்டத்தை நிறுத்தி அதன் பின்னர் இடந்தலைப் பாட்டினை யெடுத்துக் கூறிய இறையனார் நூற்பாவால் காமப்புணர்ச்சியை அடுத்துநிகழும் இடந்தலைப்பாடு பெரும்பான்மையும் பாங்கற்கூட்டத்தி னுதவியினாலேயே நிகழ்வதாமென்பதும் புலப்படுகின்றனவன்றி மற்றவற்றுள் தினையளவேனும் முரண்பாடு புலப்படாமையின், இவ்விரு பேராசிரியன்மாரின் நூற்பாக்களும் ஒரே முகமான கருத் துடையனவா மென்று உணர்ந்துகொள்க. ஏனைப் பிற வற்றையும் இங்ஙனமே இணக்கிப் பொருளுரைத்துக் கொள்ளுதல் அவற்றை நோக்குவார் கடனும்.

இடந்தலைப்பாடு பாங்கற்கூட்டம் என்னும் இரண்டனுள் ஏதேனும் ஒன்றுமட்டுமே தலைவனுக்கு நிகழுமாதலால், இவற்றுள் எது முன் நிகழ்வது, எது பின் நிகழ்வது என்னும் ஐயப்பாடு எழுதற்கே இனிச் சிறிதும் இடமில்லையென்பதும் ஈண்டே கருத்திருத்தற்பாலது.

இனி, இடந்தலைப்பாடென்பது பாங்கற்கூட்டத்தின்கண் அடங்கிய அதனொரு பகுதியாய் நிகழ்தலால், அப்பாங்கற்கூட்டத்தைக் கூறவே இடந்தலைப்பாடும் விளங்கிவிடுமாதலின், அப்பாங்கற்கூட்டமே இறையனாரகப்பொருள், திருச்சிற்றம்பலக்கோவையார் முதலான அகப்பொருணூல்களில் விரிவாகக் கூறப்பட்டதெனக.

இங்குப் பாங்கன் என்பவன் பார்ப்பனனாவான். நச்சினார்க்கினியர் 'இவன் பெரும்பான்மை பார்ப்பான'*மென்றலின், சிறுபான்மை மற்றையோரும் பாங்கனாதல் உண்டென்று கொள்க.

---

## ௩. மதி யுடம்படுத்தல்

[தன் தலைவியை அடிக்கடி காண்பதற்கு உதவி புரியும்படி தலைவன் அவள் தோழியினிடஞ் சென்று குறையிரந்து அவள் மதியைத் தன் கருத்துக்கு ஒத்து வரும்படி உடம்படுத்துதல்.]

நறைபடர் சாந்தம் அறஎறிந்து நாளால்
உறைஎதிர்ந்து வித்தியஊழ் ஏனல்—பிறைஎதிர்ந்த
தாமரைபோல் வாள்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ
ஏமரை போந்தன ஈண்டு.

—திணைமாலை நூற்றைம்பது: க.

'பிறைத் திங்களை ஏற்றுக்கொண்டதொரு தாமரையைப் போலும் ஒளிமிக்க முகத்தினையும் நீண்ட கூந்தலினையும் உடைய பெண்டிரே! நறைக்கொடி படர்ந்த சந்தன மரங்களை அடியோடு வெட்டியெறிந்து, தக்க நாட்களில்

* தொல். களவு. கக.

மழை நீரை ஏற்று விதைத்து முதிர்ந்த இந்தத் தினைப் புனத்தில், ஓடி வந்தனவாகிய அம்புண்ட மரைகளை நீங்கள் கண்டீர்களோ?'

'நறை' என்பது ஒருவகைப் படர்கொடியின் பெயர். இது "நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி"* என்னும் புறநானூற் றடியானும், 'நறைக்கொடியின் நாராற் றொடுக்கப்பட்ட வேங்கைப் பூமாலையினும்' என்னும் அதன் உரையானும் நன்கு விளங்கும். நாளால் உறை யெதிர்தல் - காலத்தில் மழையை எதிர்நோக்கிப் பெறுதல். 'நாளால்' என்னுமிது "காலத்தி னாற்செய்த நன்றி"† என்பதிற்போல ஏழாம் வேற்றுமைக்கண் வந்தது. ஊழ்த் தல் - முதிர்தல். 'எறிந்து எதிர்ந்து வித்திய ஊழ் ஏனல்' என்னுமிது,

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே"‡

என்பதனான் முடிந்தது. பிறை - இங்கு எட்டாம் பிறை. இது முன் கட்டுரையிலுங் கூறப்பட்டது. ஏ - அம்பு. மரை - மான். இங்கு அம்புண்டமானென்றது உண்மை யான மானினையன்று. தலைவியின் கண்ணம்பு தைத்த தன்னையே மானென்று னென்க. இவ்வாறே தன்னை வேழ மெனக் கூறி வேழம் வினாதலும் உண்டு. இது குறிப்புப் பொருள். இக் குறிப்புப்பொரு ளுண்மையைத் திருச்சிற் றம்பலக் கோவையாரில் வரும் 'வேழம் வினாதல்' 'கலை மான் வினாதல்' என்னுந் தலைப்புகட்குப் பேராசிரியர், 'தன் காதல் தோன்ற இவ்விடத்தொரு மதயானை வரக் கண்டீரோவென வேழம் வினவா நிற்றல்' என்றும், 'வேழம் வினவி உட்புகுந்தபின் தான் கண்ணா லிடர்ப்பட் டமை தோன்ற நின்று நம்முடைய கண்கள் போலுங் கணைபொருதலா லுண்டாகிய புண்ணோடு இப்புனத்தின் கண் ஒரு கலைமான் வரக் கண்டீரோவென்று 'கலைமான்

* புறநானூறு, கசுஅ : கரு. † திருக்குறள், கக : உ.
‡ தொல். வினையியல், சக.

வினுவா விற்றல்' என்றுங் கூறுமாற்றால் நன்கு விளங்கும், இங்குக் 'கலைமான்' என்று ஆண்மானைக் குறித்துக் கூறு தலும் மேற்கருத்தினை வலியுறுத்துதல் காண்க.

## தோழியின் உதவி நாடுதல்:

காமப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் விதித்துணை பற்றியேனும் பாங்கன் துணை பற்றியேனும் இடந்தலைப் பட்டதன் பின்னுந் திருமணஞ் செய்துகொள்ளானாயின் மீண்டுங் கூட்டம் பெறுதற்காகத் தன் தலைவியின் காதற் றோழியை வழிபட்டுச்சென் றெய்துவான்.

*"புணர்ந்த பின்றை ஆங்ஙன மொழுகாது
பணிந்த மொழியால் தோழி தேஎத்து
இரந்துகுறை யுறுதலுங் கிழவோன் மேற்றே"†

என்று வரும் இறையனாரகப்பொருள் நூற்பாவுக்கு அதன் கண் உள்ள 'புணர்ந்த பின்றை' என்பதற்கு இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்றை எனவும், 'ஆங்ஙனமொழு காது' என்பதற்குப் பாங்கற்கூட்டத்திலேனும் இடந்தலைப் பாட்டிலேனும் நின்றொழுகாது எனவும் பொருள்கொண்டு, இயற்கைப்புணர்ச்சியாகிய முதற்கூட்டம் பெற்ற தலைமகன், இடந்தலைப்படுத லில்லானாய் இரண்டாங் கூட்டம் பெறு தற்குத் தோழியினிடத்து இரந்து குறையுறுதலும் உண்டு என்று உரை கூறுமுகத்தால், தலைமகனுக்கு இயற்கைப் புணர்ச்சியை அடுத்து நிகழ்வது 'மதியுடம்படுத்த'லெனப் படுந் தோழியிற் கூட்டமே யாம் என்று சொல்லுவாரு முளர். ஆனால் அதன் உரையாசிரியர் நக்கீரனாரே, இயற் கைப் புணர்ச்சியுற்ற தலைமகன் அதன் மறுநாளே மீண்டுங் கூடுதற்குத் தனக்குத் துணைவனாயுள்ள பாங்கனொடு கூடிப் பாங்கற்கூட்டம் பெறுவனேயல்லாமல், தன் தலைவிக்குத் துணைவியாய்த் தனக்குப் புதியளாயுள்ள தோழியோடு கூடித் தோழியிற் கூட்டம் பெற எண்ணான் என்று கூறி

---

* தோழி தேஎத்து-தோழியினிடத்து. கிழவோன் மேற்று-தலைவனிடத்து. † இறைய. ரு.

அவர் கருத்தினை மறுக்கின்றாராதலால் அஃது உண்மை யன்றென்று விடுத்து, இயற்கைப் புணர்ச்சி யெய்திய தலைமகன் பாங்கன் வாயிலாகவேனும் விதியே வாயிலாக வேனும் இடந்தலைப்பட்டு அங்ஙனம் இடந்தலைப் பட்டதன் பின்னரே மூன்றாங் கூட்டம் கூடுதற்குத் தோழியினிடஞ் சென்று குறையிரந்திடுவா னென்று கொள்க.

தலைமகள் தோழிகளின் காவல் மிகுதியும் உடையவ ளாதலாலும், ஒரு காலத்திற் போலவே ஆயங்கள் தலைவி யைத் தனியே நிறுத்திவிட்டுத் தத்தம் விளையாட்டின்மேல் அவளைப் பிரிந்து எப்பொழுதும் மறைந்து செல்லல் அரி தாதலாலும், அங்ஙனம் மறைந்து சென்றாராயினும் அவ ரெல்லாருமே நீண்டநேரம் விளையாடலை மேற்கொள் ளாது திடீரென்று வந்து தலைவியை அடைதலுங் கூடுமாத லானும், இவற்றைப்போலவே இன்னும் பிற பல இடை யூறுகள் விளைதலுமா மாதலாலும், இவைதம்மால் தமது களவொழுக்கம் வெளிப்பட்டுவிடுமாயின் தலைவி மிக்க நாணமுடையவளாதலால் அதற்கு ஆற்றமாட்டாளாய் உடனே இறந்துபடுதலும் செய்வாளாதலாலும் தலைமகன் இரண்டாங் கூட்டமாகிய இடந்தலைப்பாட்டிற்குப் பின்பு யார்க்குந் தெரியாது களவுகூடுதற்கு அஞ்சி, இவ்விடை யூறுகளை யெல்லாம் விலக்கித் தலைமகளைத் தான் வேண்டும் போது தன்கட் கொண்டுவந்து தனியே விட்டுக் கூட்டஞ் செய்வித்தற் பொருட்டு அவட்குமட்டுந் தம் ஒழுக்கத்தைத் தெரிவிக்கு முறையாகத் தெரிவித்திடுவான் கருதி அவ ளிடஞ் சென்று குறையிரப்பான். இங்ஙனந் தமது கூட்டத் திற்குச் சிறந்த துணையாய் நின்று உதவிசெய்ய வல்லவள் தலைவியின் காதற்றோழியேயா மாதலால், அவளையே அடைந்து இரந்திடுவானென்க.

தமது ஒழுக்கத்தைத் தலைவன் அத்தோழிக்குத் தெரி வித்தானாயின் அஃதறிந்த தலைமகள் மிகவும் வருந்தி நாண் மிக்கு உயிர் விடாளோவெனின், அத்தோழியாவாள் தலை விக்கு உயிர்த்தோழியாவா ளாதலாலும், அவளைத் தனக்கு

வேறுகக் கருதாது அவளறிந்ததைத் தலைவி தானறிந்த தாகவே நினைப்பாளாதலாலும் அவன் தெரிவித்தமைக்கு நாண்மிக்கு உயிர் விடாளென்பது. அங்ஙனமாஞல் அத் தோழியினிடத்து அத்துணை ஒற்றுமையுள்ள தலைவி தனது களவொழுக்கத்தினை அவட்கு இதுவரையுந் தெரிவியாதது என்னையெனில், அவள் தெரிவித்திடுவாளாயின் தனக்குக் காவல் தவறிய குற்றம் வந்து விட்டதேயென்று தோழி வருந்துவளாதலால், அவள் தெரிவியாளென்பது. அவ்வா ருயின், தலைவி தெரிவித்தற்கு வருந்துந் தோழி பின்பொரு நாள் தலைவன் தெரிவித்தற்கும் வருந்துவா ளல்லளோ வெனின், வருந்தாள்; ஏனென்றுல், தலைவனுவான் தன் னொழுக்கத்தை வெளிப்படையாகத் தோழிக்குக் கூறுமல் தான் அவள்பாற் சென்று ஏதோ குறையொன்று உடை யான்போல மெல்லக் கூறுமாற்றுல், அவள் ஐயுற்று ஆராய்ந்து உணர்ந்து தெளிந்து, தெளிந்ததும் நெஞ்ச மிரங்கி அவனுக்கு உதவி செய்யவே முந்துவளாதலால், சில நாளாக இங்ஙனம் ஐயத்தின்கண்ணும் ஆராய்ச்சியின் கண்ணும் உணர்ந்து தெளிதலின்கண்ணும் இரங்கி யுதவுத லின்கண்ணும் எண்ணமும் முயற்சியும் இழுப்புண்டு கிடக் கும் அவட்குக் 'காவல் தவறிவிட்டோமே' யென்னுமெண் ணம் அப்போது அத்துணை முனைப்பாய்த் திடீரென்று தோன்றி மிக்க வருத்தத்தினை விளைவித்துவிடமாட்டா தென் றறிக. இவ்வாறு தோழியின்பாற் சென்று குறை கூறித் தன் கருத்தறிவித்து அவள் மதியைத் தன் எண் ணத்துக்கு ஒத்து வருமாறு உடம்படுத்தலே மதி யுடம் படுத்துத லெனப்படும்.

ஏற்ற நேரம்:

தோழியை மதியுடம்படுத்துதல் எண்ணிய தலைமகன், அவள்பாற் செல்லுதல் 'பாங்கி யிடைச் சேறல்' என்னுந் துறையாகவும், தான் சென்றபோது தன் தலைவியும் அத் தோழியும் மட்டும் தனித்தொருங்கு ஓரிடத்து இருந்தமை யின் இதுவே தன் குறையெடுத்துக் கூறுதற்கு ஏற்ற நேரமென்றெண்ணித் தன் குறை கூறத் துணிதல் 'குறை

யுறத் துணிதல்' என்னுந் துறையாகவும் திருச்சிற்றம்பலக் கோவையாருட் கூறப்படுகின்றன. தலைவியுந் தோழியும் ஒருங்கிருக்கும் நேரமே, தலைவன் குறையுறுதற்கு ஏற்ற தாகும். ஏனென்றால், அவன் குறையுறும் நேரத்தில் அவன் குறிப்பையும் அக் குறைபாடு கேட்ட அவள் குறிப் பையும் தோழி ஒப்பிட்டுணர்ந்து ஐயங்கொள்ளுதற்கு இடனுமாதலா லென்க. ஆதலாலன்றே,

> இரந்து குறையுறாது கிழவியுந் தோழியும்
> ஒருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கி
> ..........................................
> மதியுடம் படுத்தற்கும் உரிய னென்ப.*

என்று இறையனாரகப்பொருளுங் கூறுவதாயிற்று. இங் குச் 'செவ்வி நோக்கி' என்றதற்கு உரையாசிரியர் 'அன்னதோர் பதம்நோக்கி' என்று உரை கூறுதலும் கருதற்பாலது. திருச்சிற்றம்பலக்கோவையாரும் இங் ஙனமே தலைவியுந் தோழியுந் தலைப்பெய்த செவ்வியையே மேற்கொண்டு கூறுவர். ஆசிரியர் நச்சினார்க்கினியர்,

> † "தலைவியுந் தோழியும் ஒருங்குதலைப்பெய்த செவ்விபார்த்
> தாயினும் தோழி தனித்துழி யாயினும்"

என்று கூறுதலால், தோழியை மட்டுந் தனியே இருப்பக் கண்டு தலைவன் குறையுறுதலும் உண்டென்று கொள்ள லாம். எனினும் முன்னதே சிறப்பென்று கொள்க. தலை வன் தினைப்புனஞ் செல்லு நேரத்தில் தலைவியுந் தோழியும் ஒன்றாய்க்கூடித் தனியே ஓரிடத்திலிருத்தல் அரிதினும் அரிதாமன்றோவெனின், அஃது அரியதேயாயினும், விதி இவர்களைக் கூட்டுதலிலேயே முனைத்து நிற்றலால், இவர் கட்கு உற்ற இடையூறுகளெல்லாம் விலகிப்போக அஃது எளிதேயாய் முடியுமென்றறிக.

> "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
> சூழினுந் தான்முந் துறும்"‡

---

* இறைய: சு. † தொல். கள: கக. தனித்துழியாயினும்- தனித்தபோதாயினும். ‡ திருக்குறள்: ௩௮0

என்னும் நாயனர் திருமொழி இங்கு நினைவுகூரற்பாலது. இறையனாரகப்பொருளுரையாசிரியர் கருத்து மிது.

இனிப் பணிப்பெண்ணாகிய தோழிமாட்டுச் சென்று இரந்துநிற்றல் இவன்றன் வரம்பிகந்த பெருந்தகைமைக்கு இழிவாமன்றோ வெனின், தலைவியைக் கூடுதல்வேண்டு மென்று மிக்கெழுந்த காமவிருப்பத்தின்முன் ஏனைய தன்மைகளெல்லாந் தலையெடுத்து நில்லாது வெள்ளம்வழிச் சாய்ந்து படுத்த புல்லைப்போல மடிந்து கிடக்குமாதலின், தலைவன் வேறொன்றுந் தோன்றப்பெறாமல் அக் காதலெழுச்சி யொன்றிற்கே ஆற்றாய் அவள்பாற் சென்று குறையிரப்பனாதலால், அதனாலோ ரிழிவுண்டாமென்று அவன் கருதுதல் இல்லையென்க. இங்ஙனம் செல்பவன்,

> "* நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டேர்
> ஊர்ந்த வழிசிதைய ஊர்ந்தாய்வாழி கடலோதம்
> ஊர்ந்த வழிசிதைய ஊர்ந்தாய்மற் றெம்மோடு
> தீர்ந்தாய்போல் தீர்ந்திலையால் வாழி கடலோதம்"†

என்று ஆன்றோரிலக்கியங்களிற் கூறப்படுதலால், தன் தேர் முதலியவற்றோடு தோழிமாட்டுச் செல்லுதலும் உண்டென்று கொள்க. இறையனார் நூற்பாவில், 'ஒருங்கு' என்று கூறியதன் கருத்தும் ஈதென்ப. இன்னும் அப் பெண்டிர்க்குத் தழையும் மாலையும் கையுறையாகக் கொண்டு செல்லுதலும் உண்டென்று அகப்பொருணூல்கள் கூறாநிற்கும்.

### நெருங்கி வினவுதல் :

இனி இவ்வாறெல்லாம் சென்று குறைகூறத் துணிந்தவன் தன் எண்ணத்தை வெளிப்படையாகக் கூறினால் அவள் மறுத்தலுங் கூடுமென்று அஞ்சி, அவளே ஐயுற்று அறிந்துகொள்ளுமாறு அதற்கேற்றதொரு முறையில் குறையிரக்க வேண்டுமென்று எண்ணித் தன் கருத்தை

---

* சிலப்பதிகாரம், கானல்வரி: ௩௬. நேமி-சக்கரத்தையுடைய.
† கடல் ஓதம் - கடல் நீர்.

மறைத்து, அங்ஙனம் மறைத்தானாலும், அக்கருத்தினைக் குறிப்பாக உணர்த்தக்கூடிய வேறு பல சொற்களைச் சொல்ல முற்படுவான். தான் வேட்டைக்கு வந்தமை போலக் காட்டி, அங்குக் கண்ணெதிர்ப்பட்டுத் துரத்தப் பட்டதொரு யானை இங்கு வந்ததா? என்று கேட்பான். தான் காம மதங்கொண்டு வருதலின், அவ்வியானையை மதயானை யென்று குறித்துக் கூறினான். இஃது அவர்க ளோடு பேசுதற்கு ஒரு வாயிலாயிற்று. இங்ஙனங் கேட்டுப் பேச்சுத் தொடர்பு கொண்டவன், மேன்மேலும் பேசுதல் எளிதாதலின், 'அம்புதைத்த கலைமான் வந்ததா? என்று இன்னொன்று கேட்பான். முன்னமேயே ஒன்று கேட்டிருக்கின்றானாதலால், முன்னினும் நெருங்கிப் பேசு தற்கு இப்பொழுது பின்னும் இடம்பெற்றவனாய் 'உங்கள் கண்களைப் போன்ற அம்பு தைத்தலால் உண்டான புண்ணோடு இங்கு மான் வந்ததா?' என்று கேட்பான். இது கேட்டமையால், தான் தன் தலைவியின் கண்ணம்பினாற் புண்பட்டு வந்தமைபற்றிப் பையக் குறித்தானாயிற்று. இதனை மாணிக்கவாசகப் பெருமான்,

"இருங்கண் ணனைய கணைபொரு புண்புண ரிப்புனத்தின்
மருங்கண் ணனையதுண் டோவந்த திங்கொரு வான்கலையே."*

என்று தமது கோவையுள் மிக அழகாகக் கூறினார்கள்.

இங்ஙனம் மெல்ல நெருங்கிக் கேட்ட தலைவனுக்கு அத்தினைப்புனப் பெண்டிரான தலைவியுந் தோழியும் மிகவும் நாணமுடையவர்களாதலால், ஏதும் வாய்திறந்து விடை மொழி கூறிற்றிலர். தோழியாவாள், தலைமகன் கலை மான் வினவிய அளவிலேயே அவன் கருத்து வேறென்று அறியும் குறிப்புடையளாயினாள். அஃதறிந்த தலைவன் அதுவே நேரமாக மேலும் அவட்கு அக் கருத்தறியும் முயற்சியை வளர்த்தற்பொருட்டு 'நான் முன் கேட்ட கேள்விகட்கு விடைகூறாது போயினும், உங்கள் ஊர்க்குச் செல்லும் வழியாவது கூறுங்க' ளென்பான். அதற்கும்

* திருச்சிற் : ருஉ.

அவர்கள் விடை சொல்லாமற் பேசாதிருப்ப, 'வழி கூறுதல் வேண்டாம்: உங்கள் ஊர்களாவது கூறுங்கள்; அதுதானுங் கூறுதலாகாதோ?" என்று வினவுவான். தலைவியின் ஊரும் தோழியின் ஊரும் ஒன்றுதான் என்று தெரியாதவனைப்போல, 'ஊர்கள் கூறுங்கள்,' என்று பன்மையாற் கூறி வினவுவான். அதற்கும் விடையில்லாமையால், 'ஊர் கூறுதல் உங்கட்குப் பழியானால் உங்கள் பேரேனுங் கூறுங்கள். அஃதுங்கட்குப் பழியாகாதன்றோ?' என்று உசாவுவான். இத்தனை கேள்விகட்கும் அவர்கள் முறுவலுந் தெரிக்காமல் வாளா வாய்மூடியிருப்ப, விடைமொழி பெறாத தலைவன் அது கண்டு, 'இந்தத் தினைப்புனத்துக்கு எதிர்கொள்ளத்தக்க விருந்தாய் வருவாரோடு வாய் திறந்து ஒரு மொழிதானுங் கூறாதிருப்பதுதான் உங்கட்கு வழக்கமோ? அல்லது அங்ஙனம் வாயைத் திறந்துவிட்டால் சலக்கென முத்துச் சிந்திவிடுமே என்றெண்ணி ஒன்றும் பேசாதிருப்பதுதான் உங்கட்கு நோக்கமோ?' என்று மிக்க நெருக்கமும் பழக்கமும் உடையான்போல உரிமையெடுத்துக்கொண்டு பேசிவிடுவான். இவைதாம் முறையே 'வேழம் வினுதல்' 'கலைமான் வினுதல்' 'வழி வினுதல்' 'பதி வினுதல்' 'பெயர் வினுதல்' 'மொழிபெறாது கூறல்' என்னுந் துறையுறப்புக்களாக அகப்பொருணூல்களிற் கூறப்படும். இங்ஙனந் தலைவன் கேட்டல்,

* "பதியும் பெயரும் பிறவும் வினுஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து"†

என்னும் இறையனாகப்பொருளாலும்,

‡ "ஊரும் பேரும் கெடுதியும் பிறவும்
நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறி" §

என்னுந் தொல்காப்பியத்தாலும் நன்கு விளங்கும். தொல்காப்பியனாரால் இங்குக் 'கெடுதி' என்று கூறப்படுவது

* இறையனாகப்பொருள்: ௬. † பொருந்துபு-பொருந்தவன்.
‡ தொல். களவியல்: ௧௧. கெடுதியும் - இழந்த பொருளும்.
§ நீரின் - இனிய நீர்மையினால்.

தலைமகனால் அம்புவிட்டுக் கெடுக்கப்பட்ட வேழம், கலை மான் முதலியவை. அவற்றைக் கண்டீரோவென்று கேட்டல் 'கெடுதி வினாதலா' மென்க. ஊரும் பேரும் கேட்டு விடை பெறாமையால், தான் ஒன்று கெடுத்தானாகவும் அதனை அவர் கண்டாராகவும் குறிப்புணர்த்துதற்காக அவற்றின் பின்பு வேழம் முதலியன வினவுவானென்றற்கு ஆசிரியர் 'கெடுதியும்' என்பதை மூன்றாவதாகக் கூறினார் என்னுங் கருத்துக்கொண்டு உரை கூறுவார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். திருச்சிற்றம்பலக்கோவையாரிலும் இறையனார் களவியலுரையிலும் முதன் முதல் பேச்செடுத்தற்கு வாயிலாக வேழம் வினாதல் முதலியன முதலிலேயே வினவுவானென்று கூறப்படுகின்றது. இன்னும் பன்றி, புலி முதலியன வினாவுதலும் உண்டென்னுங் குறிப்பு ஆன்றோருரைகளிற் காணப்படும்.

கையுறை :

வேழம், கலைமான் முதலியன வினாவியவன் அவற்றிற்கு விடைபெறாமலே வேறு வேறாக மேலுமேலுங் கேட்டலால், 'இவன் வேறு கருத்துடையன்போலும்' என்று தோழி மிக்க ஐயுறவு கொண்டனள். ஐயுற்றவட்கு ஒருவகைத் துணிவு உண்டாக்குதற்கு இதுதான் தக்க நேரமாதலால், இச் செவ்வி பார்த்துத் தான் வரும்போதே தன் கையிற் கையுறையாகக் கொண்டுவந்த தழையைக் காட்டி, 'ஈது உங்கள் பொன்னிற அல்குலுக்குத் தகுமாதலால் அணிந்துகொள்ளுங்கள்,' என்று தன் கருத்தினை அறிவிப்பான். இது 'கருத்தறிவித்தல்' என்னுந் துறையாம். 'பொன்னிற அல்குல்' என்று முற்பழக்கம் உடையான் போல நிறந்தெரிந்து கூறுதலால், முன்னமேயே கூட்டம் நிகழ்ந்துள்ளது என்பதைக் குறிப்பினாற் குறித்தானாயிற்று. இவன் மிகமிக நெருங்கி, வரவர இடம்பெற்று உரிமையோடு பேசிவருதலை, இக் கருத்தறிவித்தல் என்னுந் துறையினை அடுத்துவரும் 'இடைவினாத' லென்னுந் துறையும் நன்கு விளக்கும். அது தழை காட்டிக் கருத்தறிவித்தவன், 'உங்கள் அல்குலுங் கொங்கையும் மிக்க சுமையாயிருத்த

லால், இவை இரண்டும் இவ்வாறு நிற்றற்கு இடையொன்று இருத்தல் வேண்டுமே; அஃது இருக்கின்றதா?' என்று வினவுதலாம். அப்பெண்டிரின் இடை அத்துணைச் சிறிய தென்பது அதன் கருத்து.

முன்னெல்லாம் இவன் பேசி வந்த முறையினால் தோழிக்குண்டான ஐயம் 'கருத்தறிவித்தல்' 'இடைவினாதல்' என்னுங் கடைசி இரண்டு துறைகளினாலும் 'நம்மிடத்தில் உள்ளதொரு பொருள் வேண்டித்தான் இவன் இங்ஙனங் குறையுறுகின்றான்,' என்று தோழி ஒருவழி எண்ணுவாளாயினள்.

இவ்வாறெல்லாம் தோழியின் அறிவைத் தன் கருத்தினை அறியுமாறு கொண்டுவந்து உடம்படுத்தினமையே 'மதி யுடம்படுத்த' லெனப்படும். மதியுடம்பட்டதோழி தலைவியின் குறிப்பறிந்து அவன் கருத்தினை இனி முடித்து வைப்பா ளென்பது. செவிலித்தாயின் மகளே இங்குத் தோழியாதற்குரியவளென்க. "தோழி தானே செவிலி மகளே"* என்பது தொல்காப்பியம்.

---

## ௪. மடற்றிறம்

[தோழியை உடம்படுத்துந்தலைமகன். அதற்கொரு கருவியாகத் தான் மடன்மாவில் ஏறவிருக்கும் வகையினைத் தெரிவித்தல்.]

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடல்அல்லது இல்லை வலி.

—திருக்குறள்: ௧௧௩௧.

'அடைதற்கு அரியரான பெண்மக்களோடு காமவின்பத்தை உளமார நுகர்ந்துவிட்டுப் பின்பு அதனைப் பெறுதற்கியலாது வருந்துகின்ற ஆண் மக்களுக்கு, அக் காமத் துன்பத்தை நீக்கி ஓராறுத லின்பந் தரவல்ல வலிமையுடையது மடலல்லது வேறில்லை' யென்க.

---

* தொல். களவு: ௩௪.

காமம், வலி, மடல் என்பன முறையே காமவின்பத்தையும், வலிமையுடையதையும், மடலாலான குதிரையையும் உணர்த்துதலால், அவை ஆகுபெயர். காமம் காமத் தன்மையையே உணர்த்துவதாகக் கொண்டு 'காமத்தாற் பெரிது வருந்திய' வென்று உரை கூறலுமாம். திருச்சிற்றம்பலக்கோவையாரில் 'உலகின்மேல் வைத்துரைத்தல்' என்னுமொரு துறை மடற்றிறப் பகுதியிற் காணப்படுதலால், இக் குறளுக்கு உலகின்மேல் வைத்துரைத்தலாகவே பொருள் செய்யப்பட்டது. ஆசிரியர் பரிமேலழகர் பின்னுள்ள குறட் பாக்களின் பொருளியல்பு நோக்கித் தலைவன் 'தன் துணிபுரைத்த'லாக அதற்கு உரையெழுதுகின்றார். இங்கு ஏமமென்பது துன்பத்தை நீக்கி ஆறுதலின்பந் தருவது போன்ற மற்றொருவகைத் துன்பம்.

## ஆற்றாமையும் நாணமும்

தலைவனது குறையிரந்த எண்ணத்தோடு ஒத்து மதியுடம்பட்ட தோழி, தன் தலைவியின் கருத்தையும் மெல்ல அறிந்துகொண்டு பின்பு அதனைத் தலைவனோடு சொல்லத் தொடங்கியபோது, தனக்குள் தோன்றிய நாணத்தால் தலைவனே முதன் முதல் குறையிரந்து கேட்டலை விரும்பிப் பேசாதிருப்பள். தலைமகன் மதியுடம்படுத்துதலைக் கருதி முதன்முதற் பாங்கியிடைச் சென்றபோது அவள் பெரு நாணமுடையவளா யிருந்தாள். பாங்கியிடைச் சேர்ந்ததிலிருந்து சிலநாள் தலைமகன் நெருங்கிப் பேசி மிக்க உரிமையுடையவனாய் அவள்மாட்டுப் பழகினமையால் அவட்கு முதலிலிருந்த நாணம் வரவரக் குறைந்து வந்தது. மேலும், தோழி எத்துணை நாணப்பட்டுத் தலைவனுக்கோர் அமைதி தரும் மறுமொழியை எவ்வளவு காலங் கூறாது நிற்கின்றாளோ, அத்துணையுந் தலைவனுக்கு அவ்வளவு நேரம் ஆற்றாமை மிகும். அவ்வாற்றாமையைக் கண்ட தோழி அறிவும் அன்பிரக்கங்களும் உடையவளாதலால், அவைதாம் மிகுந்து நிற்கும்போது அவள் நாணுக் கெடும். இவ்வாறு தலைவனுக்கு ஆற்றாமை பெருகப்பெருகத் தோழிக்கு

நாணங் குறைந்துகொண்டே வந்தது. இந்நிலையில், இனிமேற் பெருகுவதற்கு இடமில்லை யென்னும்படி தலைமகனுக்கு ஆற்றாமை என்பது முழுதும் பெருகி நிற்ப, அங்ஙனமே இனிமேற் சுருங்குதற்கு இடமில்லை யென்னும்படி தோழிக்கும் நாணமென்பது முழுதும் சுருங்கி நின்றது. இவரிருவர்க்கும் வாய்ந்த இந்நிலையினை இறையனாரகப் பொருளுரையாசிரியர்,

அவனது ஆற்றாமையும் இதனினூங்குப் பெருகுமாறில்லையெனப் பெருக்கத்துக்கு வரம்பெய்தி நின்றது: இவளது நாணும் இதனினூங்கு நுணுகுமா றில்லையென நுணுக்கத்திற்கு வரம்பெய்தி [நின்றது'*

என்று மிக அழகாகக் கூறுவர். தோழியின் நாணம் இத்துணைச் சுருங்கி, இல்லையென்றே சொல்லும்படி மிகக் குவிந்து நுணுகி யொழிந்தாலும், பெண்டிர்க்கு அஃது இயற்கையே உள்ள உயிர்த்தன்மையாதலால், தோழி தானறிந்த தலைவியின் கருத்தைத் தலைமகனோடு தானே முதலிற் பேச்செடுத்துச் சொல்லுதற்குக் கூசினாள். என்னை?

†"முன்னுற உணரினும் அவன்குறை யுற்ற
பின்ன ரல்லது கிளவி தோன்றாது"

என்று இறையனார் கூறுதலின் என்க.

இவ்வளவு நாள் கெஞ்சிக் குறையிரந்துந் தோழி மறுமொழி யேதுங் கூறாதுவாளா நிற்ப, அஃதறிந்த தலைமகன் ஒருநாள் தோழியுந் தலைவியும் ஒருங்கிருக்க நோக்கித் தனக்குட் பெருகி வரம்பெய்தி நின்ற ஆற்றாமைத்தன்மையால் எழுந்த சொற்கொண்டு, 'நீங்கள் என் குறை முடித்து அருள் செய்யாமையால் என் உயிர் அழிகின்றது. இதனை அறிமின்கள்,' என்று கூறுவான். பெண்டிர்க்கு நாணமென்பது ஒரு பெருந்தடுப்பா யிருத்தலால், இவன் இங்ஙனங் கூறியும் அவர்கள் முன்வந்து ஒரு மொழியேனுங் கூறியபாடில்லை. இனி என் செய்வான்? மடலேறி

* இறைய: க
† கிளவி-சொல்.

யேனும் இக்குறையை முடித்துக்கொள்வதே செயற்பாலதா மென்று எண்ணுவானாயினன். இதனையே மேலே தலைப்பி லுள்ள திருக்குறள் உணர்த்துவதாயிற்று.

மடலேறுதல்:

மடலேறுதலென்பது, காம எண்ணம் முதிர்ந்து தலை யெடுத்து நின்றபோது, அதன்வாய்ப் பட்ட ஆண்மக்கள், தாங் காதலித்த தலைமகளைக் கூடுதற்கு விரும்பி, மறைவாக வுஞ் சூழ்ச்சியாகவும் வேண்டுவன வெல்லாந் தோழியை யுடம்படுத்திப் பல நாட்களாகச் செய்துபார்த்து அவற்றால் அஃது இயலாதது கண்டு, அவ்வியலாமையின் வாயிலாக அந்நேரத்தில் உணர்ச்சி தெரியாது மிக்கெழுந்த காமக் காழ்ப்பினால் தமக்குள்ள நாணத்தையும் நல்ல ஆண்மை யையும் இழந்து, எருக்கம்பூ மாலையைத் தலையிற்சூடி, பனை மடல் கறுக்குகளாற் செய்யப்பட்ட ஒரு பொய்க் குதிரை யின் மேல் காற்சதைகளறுந்து இரத்தங் குழைந்து கசியும் படி ஏறித் தலைவியின் உருவத்தையும் தம் பெயரையும் ஒரு படத்திலெழுதிக் கையிற் பிடித்துக்கொண்டு தலை மகள் இருக்கும் வீட்டிற்கு அருகில் தெருவில் நான்கு முனைகள் கூடும் நடுவிடத்தில் அக் குதிரையைப் பிறரால் இழுப்பித்து வரச்செய்து வெளிப்படையாக எல்லார்க்கும் தனது கருத்தை ஆரவாரஞ் செய்தலாகும். இவ்வுண்மை,

"*மாஎன மடலும் ஊர்ப, பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப,
மறுகின் ஆர்க்கவும் படுப,
பிறிதும் ஆகுப காமங்காழ்க் கொளினே"†

என்று குறுந்தொகையினும்,

* மா - குதிரை. மடல் - பனைமடல். கண்ணி - தலைமாலை. மறுகின் - தெருவில். ஆர்க்கவும் படுப - ஆரவாரித்தலுஞ் செய் வர். பிறிதும் - இறத்தலும் என்னும் பொருட்டு. காழ்க்கொளின்- உள்ளத்தே மிகுந்தால்.

† குறுந்: கள.

"*ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாஎன ஏறுவர் சீறூர்ப் பனைமடலே"†

என்று திருச்சிற்றம்பலக்கோவையிலும் மிகத் தெளிவாகக் கூறப்பட்டிருத்தல் காண்க.

பண்டைக்காலத்திலே இவ்வழக்கந் தமிழ்நாட்டின் கண் நடந்துவந்ததென்பது,

‡"கடலன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணின் பெருந்தக்க தில்"§

என்னுந் திருவள்ளுவர் தம் வாய்மொழியினால் ஐயுறவின்றிப் பெறப்படும். ஏனென்றால், 'கடல்போல அத்துணை மிகுந்த காமத்தால் வருந்தினாலும் பெண்மக்கள் மடலேற மாட்டார்கள்' என்று காணப்படும். இத் திருக்குறட்கருத்தில், காமம் மிகுந்தாலும் பெண்மக்கள் ஏற மாட்டார்களெனவே அக்காமம் மிகுந்த காலத்து ஆண்மக்கள் மட்டும் ஏறுவார்களென்பது பெறப்படுதலா லென்க.

அதன் மாட்சி:

அங்ஙனமானால் இம் மடலேறும் வழக்கம் அத்துணை நாகரிகமானதோ வெனின், நாகரிகமென்பது உயிர்களின் இயல்பினை வைத்தன்றே அறியப்படும்? இயற்கையே தனக்குரிய பெண்மகளை இறைவன் திருக்குறிப்புப்படி எவ்வகையானும் மணஞ்செய்து கொள்வது அவட்குரிய ஆண்மகனின் கடமை. அந்தப் பெண்மகளை அந்த ஆண் மகனுக்கே திருமணஞ் செய்துவைத்தல் அவர்கட்குரிய உற்றார் பெற்றார் முதலானவர்களின் கடமை. இவர்கள் இக் கடமையினின்றுந் தவறுதலே நாகரிகமில்லாச் செய்கையாகும். இங்ஙனம் அக்கடமையினின்று தவறாமையும், அத் தவறாமைக்குச் செய்யும் செய்கைகளும் நாகரிகச் செய்கைகளாகும். ஆகவே, ஆண்மக்கள் இயற்கைக் களவின்வழி உள்ளம் வீழ்ந்து தெரிந்தெடுத்துக்கொண்ட

---

* ஈசன-ஈசனுடைய. † திருச்சிற்: ௭௬.

‡ கிழி-படம் எழுதிய இரட்டுத் துணி. § திருக்குறள்: ௧௧௩௭.

பெண்மக்களைக் கூடுதற்பொருட்டு முயன்று, அம் முயற்சிக்கு இடையூறு கண்டபோது மடலூர்ந்து வெளிப்படுதல் அவர்தம் நாகரிக வுணர்ச்சியையே காட்டுமென்று கொள்க. நன்மை பயக்குமொரு செய்கை எளிதில் நிறைவேறாதவிடத்துத் தன் உயிரைக் கொடுத்தேனும் அதனை நிறைவேற்றுதலே உண்மையான ஆண்மையும் பெருமையுமாகும்.

மடலேறுதலென்பது, உடலுக்குச் சிறிது துன்பங் கொடுத்து அதன் வழியாகத் தனக்குந் தன் காதலிக்குமுள்ள உண்மையன்பினையும் மன ஒற்றுமையையும் பிறர்க்குக் காட்டி, அதன் வாயிலாக அவளைப் பெறுகின்ற ஆண்மகனொருவன் நற்செயலாகும். அங்ஙனமின்றித் தாங் காதலித்த பெண்மகள் தமக்கு முற்றிலுமே கிட்டாளான விடத்து மலையின்மேலேறி உருண்டு வீழ்ந்து உயிரையே துறக்கும் உண்மைக் காதல்வலி வாய்ந்த ஆண்மக்களும் உண்டு. இங்ஙனம் வரைபாயும் வழக்கத்தையே மேற்காட்டிய குறுந்தொகைச் செய்யுளிற் போந்த 'பிறிதுமாகுப' என்னுந் தொடர் குறிப்பதாயிற்று. இஃது உயிரையே இழப்பதான பெருந்துன்பம் பயத்தலால் இது பிறிதென்று குறிப்பினாற் சுட்டப்படுவதாயிற்றென்க.

"மடன்மா கூறும் இடனுமா ருண்டே"*

என்று வருந் தொல்காப்பியக் களவியல் நூற்பாவுக்கு உரையெழுதுமிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர்,

†"உம்மையால் வரைபாய்வ லெனக்கூறும் இடனும் உண்டென்ற வாறு"

என்று கூறுதலானும் நன்கு துணியப்படும்.

ஆகவே, இவ்வாறெல்லாம் நன்மைபயப்பதொரு செய்கையின்கண் முயற்சியெடுத்து அம்முயற்சி பயன்படாமை காணும்பொழுது தன்னுடலுயிர்க்கு ஊறுவிளைவித்துக் கொண்டேனும் அதனை நிறைவேற்றிக் கொள்ளுதல் வீரத் தன்மையேயா மென்க. அதனினும், இறைவ னின்பத்தோ

* வரை - மலை. † தொல். கள: கக.

டொத்து அதனை விளைத்திடுங் கருவியாயும் உலகவாழ்க்கையின் முதன்மையான பயனாயும் நின்று பிறப்பின் நோக்கத்தை ஈடேற்றுவதாயுள்ள காதற்செய்கையின்கண், அதற்கு உதவியாகத் தனக்கு இயற்கையே யுரிய பிறவிக் காதலியைப் பெறும்பொருட்டுச் செய்யும் நன்மைதரு முயற்சியிலா, அது தவறுமிடத்து எவ்வகையேனும் முயன்று முடித்துக்கொள்ளாது வீண்பட்டிருப்பது? ஒருவன் தன் இயற்கைக் காதலியை மடலேறி மணமுடிப்பது இழிந்ததென்று கருதி வாளாவிருந்தானாயினும், வேறு மகளிரை மண முடிப்பானாயினும் அதனினூங்கு நாகரிகமில்லாத் தீய செயல் அதற்கு வேறில்லையென்பது அறிஞரெனப்படுவா ரெல்லார்க்கும் ஒப்பமுடிந்ததோ ருண்மைக் கருத்தாகுமென் றறிந்துகொள்க. தனக்குரிய அவ்வியற்கைக் காதலியை அவன் மணவானாயின், அவன் பிறப்புச் சிறிதும் பயன்படாதென்பதே உண்மையாவதாம். ஏனென்றால், ஆணியல்பும் பெண்ணியல்பும் உயிரொன்றிக் கலத்தலாற் பெறப்படுவதொரு கலவைநுகர்ச்சியே அறிவின் விரிவும் இறைவனடியின்பமும் விளைத்திடுங் கருவியாதலானென்பது. ஆகவே, இதற்கு மாறாக இங்ஙனம் மடலூர்தலும் வரைபாய்தலும் வெறுங் காமஆசை கொண்டே நிகழுமாயின், அப்போது அஃது எள்ளி இழித்து நாகரிகமில்லாக் கொடுஞ்செயலென்று கூறித் தள்ளத்தக்கதேயாகும். மற்று அங்ஙனமன்றி அது,

'மேன்மக்களாற் புகழப்பட்டு ஞானவொழுக்கத்தோ
டொத்த இயல்பிற்றாகலானும் பழிபாவ மின்மையா
னும் எனப்படுவ தென்று விசேடிக்கப்பட்ட'*

காதலன்பு கொண்டு நிகழுதலின் உயர்த்துப் பாராட்டப் படத் தக்கதாய் நிற்குமதனை உயர்த்துப் பாராட்டாது அதற்கு வேறாகப் பிறிது கூறுதலே, கூறுவார்தம் நாகரிகமில்லாப் பேரிழிவி னியல்பைக் காட்டுகின்றது!

அற்றன்று,

---

* இறைய. ௧.

*"விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்
மணியணி பெருந்தார் மரபிற் பூட்டி
வெள்ளென் பணிந்துபிற ரெள்ளத் தோன்றி
யொருநாண் மருங்கிற் பெருநாண் நீக்கித்
தெருவின் இயலவுந் தருவது கொல்லோ"†

என்றுவரும் மற்றொரு குறுந்தொகைச் செய்யுளால், அம்மடலேறுதலைப் பிறரெல்லாம் இழித்து ஏளனஞ் செய்வாரென்பது பெறப்படுகின்றதே யெனின், அவரெல்லாங் கருத்து நோக்காது வெறுஞ் செய்கையை நோக்கி மட்டும் அங்ஙனம் எள்ளி ஏளனஞ் செய்வாராதலாலும், அங்ஙனம் அது செய்வாருங் கீழ்மக்களாவரே யல்லாது உயர்ந்த கருத்தும் ஆன்ற அறிவுமுடைய மேன்மக்களாகாராதலாலும், அம் மேன்மக்களெல்லாரும் மடலேறினானென்று கேள்விப்பட்ட அந்த நொடியிலேயே இவன் அவளல்லாமல் உயிர்வாழா னென்று அவன் காதலுண்மையுணர்ந்து மணமுடித்து வைக்கமுயல்வரே யல்லாது இகழாராதலாலும், திருமணச் செயல்களென்ற அளவிலேயே பொதுவாகக் காமத் தன்மையை அதன்மேலேற்றி ஏளனஞ் செய்வது உலகத்திலே கீழோர்மாட்டுக் காணப்படுதலாலும் அக் கீழ்மக்களின் அறியாமைச் செயல்கொண்டே உயர்ந்த நற்கருத்தின்பாலதாய்த் தூய அறிவும் பழுதற்ற காதலும் முறுகி யெழுந்து விம்மி விளங்கியஞான்று அவர்பால் அவரை மறந்து ஏற்படும் மடலேறுஞ் செய்கைக்கு ஓரிழிவு கூறுதல் பொருந்தாமை காண்க.

எனினும், கருத்து உயர்ந்ததாயினும் அதன்பொருட்டுச் செய்யும் செயல் இழிந்ததேயாமன்றோ வெனின், இறைவன் றிருக்குறிப்பாகிய உயர்ந்த கருத்தினையே உள்ளங்கொண்டு அக் குறிப்பின்வழியே நடக்கும் அடியார் பெருமக்க ளெல்லாரும் செய்யுஞ் செயல்கள் உலகத்தவரால் இழிந்தனவாக எண்ணப்படுவதுபற்றி அச் செயல்களேனும் அவற்றைச் செய்யும் அவ்வடியார்களேனும் இழி

* பெண்ணை - பனை. இயலவும் - செல்லவும்.
† குறுந். ௧௮௨.

வுக்கும் ஏளனத்திற்கும் இடமாதலுங்கூட உண்டு கொலோவென்று கூறி மறுக்க.

"ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவதொன் றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடாச் சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமல மில்லை
கோலமிலை புலனில்லை கரண மில்லை
குணமில்லை குறியில்லை குலமு மில்லை
பாலருட னுன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வார்"*

என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தமும் இங்கே நினைவு கூரற்பாலது. ஆகவே உயர்ந்த கருத்தின் மேலதாய் நிகழும் மடற்றிறம் இகழ்ந்து எள்ளப்படுவதன்றாய் உயர்த்துப் பாராட்டப்படுவதற்கே உரியதாமென் றறிந்து கொள்க.

**பயன்:**

இனி இவ்வகையான மடலேற்றத்தைப் பற்றித் தலைமகன் தோழியின் மாட்டுத் தான் ஏறுவதாக முதலிற் கூறாது, 'காதலியின் கண்வலைப்பட்ட காதலர்களெல்லாம் அவளைப் பெற்றிடும் பொருட்டு மடலூர்தலுஞ் செய்வ' ரென்று 'உலகின்மேல் வைத்துரைத்த' லாகக் கூறி, அங்ஙனங் கூறியுந் தன்னெண்ணம் நிறைவேறாமை கண்டு, அதன்பின்னர் அச் செய்கையைத் 'தன் துணிபுரைத்த'லாகக் கொண்டு அங்ஙனங் கொண்டவிடத்தும் நேரே தான் காதலித்த தலைவியை உணர்த்தாமல் யாரோ ஒருத்தியைக் கூறுவதுபோல் முன்னிலைப் புறமொழியாக வைத்து, 'என்னையும் ஒருத்தி தன் உயிர்க்காதலுக் குள்ளாக்கி மடலேறும்படி செய்துவிட்டனள்,' என்று கூறுவான். இவ்வாறு அவன் தன் எண்ணத்தைத் துணிந்து கூறியும் இயற்கை நாணத்தால் தடைசெய்யப்பட்டு வாய் திறவாதிருந்த தோழிக்கு, உன் தலைவியை என்னிடம்

* சிவஞான சித்தியார், சுபக், அ:ருஉ.

விரைந்து கூட்டாமையால் நாளைக்கு நின் சிறார்த் தெரு விடையே பனைமடலே மாவென ஊர்ந்து வந்திடுவே,' னென்று வெளிப்படையாகக் கூறுவானாயினன். இது 'மடலேறும் வகை யுரைத்த' லெனப்படும். இங்ஙனமிவன் தோழிமாட்டு மடலேறும் வகையுரைக்குந் திறனெல்லாம்,

*" தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர் "

" நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றா ரேறு மடல் " †

என்னுந் திருக்குறள்களிற் செவ்விதின் விளங்கிக் கிடக்கின்றன.

தலைவன் இங்ஙனங் கூறக்கேட்ட தோழி, அவன்றன் வரம்பிகந்த ஆற்றாமையைக் கண்டு தன்பால் முன்னேயிருந்த அவ்வியற்கைநாணும் அழிந்து கெட, இன்னும் நாம் வாய் திறவாதிருந்தால் இவன் மெய்யாகவே மடலேறவுங் கூடுமென் றஞ்சி யிரங்கி அவன் முன் வந்து பேசத் தொடங்குவாள். தொடங்கினவள், 'மடலேறுவீர்களானல், உங்கட்குள்ள இரக்கத்தை நீங்கள் யாரிடத்திற் செலுத்துவதாக ஆகும்?' என்று கேட்பாள். அஃதாவது, தலைவன் மடலேறுவானாயின் அதனையறிந்த அவன் காதலி உடனே ஆற்றாளாய் மிக வருந்தி உயிர்விடுதலுஞ் செய்வாளாதலால், அவள்மாட்டு உண்மையில் இவன் அருளுடையனாயின் இங்ஙனம் மடலேறுவேனென்று கூறுதல் கூடாதன்றோ? ஆகவே, 'உங்கள் இரக்கத்தை உங்கள் தலைவியின்பா லல்லாமல் வேறியார்பாற் செலுத்தப்போகின்றீர்கள்?,' என்று தோழி கேட்டாள். மேலும், இவன் உண்மையிலேயே தன் தலைவியின்பால் மிக்க அன்பும் இரக்கமும் உடையவனாதலால், அவ்வருட்டன்மை யுண்மையால் அவன் மடலேறுதல் அரிதென்று தோழி குறிக்கொள்வாளாயினள். ஆதலாற்றான் இங்ஙனமிவள் கூறி விலக்குந்

* தொடலை - மாலையைப்போன்ற.

† குறள் நாணுத். ௩, ௩.

துறை திருச்சிற்றம்பலக்கோவையாரின் 'அருளாலரிதென விலக்க'லெனப்பட்டது.

இங்ஙனம் கூறியும் அவன் அமையானாய் நிற்பவே அதுகண்டதோழி 'நீங்கள் படமெழுதும்பொழுது உங்கள் தலைவியின் பேச்சையும் நடையையும் எப்படி எழுதுவீர்கள்?' என்றும், 'அவைதாம் எழுதமுடியாவாயினும் அழகின் திறம் வாய்ந்த அவளுடைய உறுப்புக்களை மட்டும் அத்துணை எளிதாக உங்களால் எழுதிவிடுதல் இயலுமா,' என்றுங் கூறி மடலேறுதலை விலக்குவள். இவை 'மொழி நடை யெழுத லரிதென விலக்கல்,' 'அவயவ மெழுத லரிதென விலக்கல்,' என்னுந் துறைகளாகும். 'அவயவ மெழுத லரிதென விலக்கற்'கு மாணிக்கவாசகப்பெருமான்,

*"யாழு மெழுதி யெழின்முத் தெழுதி யிருளின்மென்பூச்
சூழு மெழுதியொர் தொண்டையுந் தீட்டியென் தொல்பிறவி
யேழு மெழுதா வகைசிதைத் தோன்புலி யூரிளமாம்
† போழு மெழுதிற்றொர் கொம்பருண் டேற்கொண்டு
[போதுகவே"‡

என்று தமது கோவையிற், சொல்லும் பொருளும் மிக அழகுபெற நிறுத்திக் கூறிய திறம் அறிந்து மகிழத்தக்கது. இந்தத் துறையினை அடுத்துத் தலைமகன் தன்னால் எழுத முடியுமென்று எழுதிக் காட்டியவிடத்து, 'இங்ஙனமோ நீங்கள் எழுதுவது. ஈது நன்றாயில்லை'யென்று கூறி விலக்குந் துறையொன்று இறையனாரகப்பொருளுரையிற் காட்டப்படுகின்றது. அதனைக் கோவையாசிரியர் காட்டிற்றிலர்.

இனி இவ்வாறெல்லாங் கூறியும் மடலேறுதலையே உட்கொண்டு அதன்கண்ணேயே தலைமகன் முனைப்பு வைத்தலின், 'நீங்கள் நன்றாய்ப் படமெழுதாமைக்காக நான் உங்கள் மடலேற்றத்தை விலக்குகின்றேனென்பதில்லை; உங்கள் தலைவியை உங்களோடு கூட்டுவித்தற்கு

* சூழும் - சூழ்ந்த மாலையும். † போழும் - பிளவும்.

‡ திருச்சிற். எக.

என்னலாவன செய்யலாமென்றுதான் விலக்கினேன். அவள் குறிப்பை அறிந்து வருகிறேன். அது மாறுபாடாயிருந்தால், பின்பு வேண்டுமானல் உங்கள் விருப்பப்படி செய்யுங்க,'ளென்று தான் உடம்படாது விலக்குவள். இது கேட்டதிற் றலைமகன் சிறிது அமைதி பெற்ருனயினும், இன்னுங்கூடத் தோழி இங்ஙனங் கூறுகின்றனளே யென்னும் ஆற்றுமை மிக்கு நிற்ப, அவனை முற்றிலும் ஆற்றி அமைவிக்கக் கருதி, 'யான் உங்கள் குறையினைக் கட்டாயம் முடித்துத் தருவே,'னென்று தான் உடம்பட்டே விலக்குவாள். 'உடம்படாது விலக்கல்' 'உடம்பட்டு விலக்க'லென்னும் இவை யிரண்டு துறைகளினலுந் தலைமகன் நெஞ்சமமைந்து மடலேறுதல் செய்யாஞய் நிற்பன். உடம்பட்டு விலக்கிய தோழியும், தலைவியாவாளை அவனேடு இணக்குதற்பொருட்டு அவள்மாட்டுச் சென்று குறை நயப்புக் கூறுவாளென்பது.

---

## ரு. சேட்படை

[தலைவியை அடைதல் எளிதென்று நினைத்த தலைவனது நினைவை, அஃது அத்துணை எளிதன்று என்று தோன்றும்படி தோழி அகற்றுதல்.]

நெறிமருப்பு எருமை நீல இரும்போத்து
வெறிமலர்ப் பொய்கை ஆம்பல் மயக்கும்
கழனி ஊரன் மகள் இவள்
பழன வெதிரின் கொடிப்பிணை யலளே.

ஐங்குறுநூறு, கூக.

'அறல்பட்ட கொம்புகளையுடைய கருநிறம் வாய்ந்த பெரிய எருமைக்கடாக்கள் குளங்களிலுள்ள மணங்கமழும் ஆம்பன் மலர்களை மேய்ந்து கெடுக்கின்ற, வயல்கள் சூழ்ந்த ஊரன்றனக்கு மகளாய இவள் கரும்பின் பூக்களாற் ருெடுக்கப்பட்ட மாலையை யுடையவள்' என்பது.

நெறிமருப்பு - அறல்பட்ட கொம்பு; ஆவது, நெறி நெறியாக இடைஇடையே வெட்டுப்பட்டதுபோன்ற தட்டைக் கொம்பு. 'நெறிமருப் பெருமை நீல இரும்போத்து' என்னு மித்தொடரை இருந்தவாறே முழுதொத்து 'நெறிமருப் பெருமையின் ஒருத்தல் நீளினம்'* என்று வருஞ் சிந்தாமணிச் செய்யுளடியும், 'அறல்பட்ட கொம்பினையுடைய எருமைச் சாதியிற் கடாவாகிய பெரிய திரள்' என்று அதற்கு உரையெழுதும் ஆசிரியர் நச்சினார்க்கினியருரையும் இங்கு நினைவுகூரற்பாலன. போத்து - ஆ எருமை புலி முதலிய விலங்குகளின் ஆண்பாற் பெயராதலின், இங்கு 'எருமைக் கடா' என்று உரை செய்யப்பட்டது.

"போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப"†
"பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை எல்லாம் போத்தெனப் படுமே"‡

என்பன தொல்காப்பியம். ஆம்பல் வயலிலும் மலருமென்பது 'வயன் மலராம்பல்'§ என்னும் இவ்வைங்குறுநூற்றின் மற்றொரு செய்யுளினாற் றெளியப்படுதலின் பொய்கையிற் பூக்கும் ஆம்பல் இங்குப் பொய்கையாம்பலெனப்பட்டது. 'வெறிமலராம்பல்' என்று கூட்டுக. மயக்கும்-கெடுக்கும், அதாவது தின்று கெடுத்தல். 'மயக்கும் ஊ'ரென்க. ஊரன்-மருத நிலத்துத் தலைமகன். இதனை "மகிழ்நனூரன் கிழவன் றலைமகன்"¶ என்னும் பிங்கலந்தையாற் றெளிக. அணுக வந்த தலைமகனைத் தோழி சேட்படுத்தல் ஊடல் போலுதலால், இச்செய்யுள் ஊடல் திணையாகிய மருதத் திணை பற்றி வந்தது. எருமை, பொய்கை, ஆம்பல், கழனி, ஊரன், பழனவெதிர் என்பனவும் இதனைத் தெளிவிக்கும். பழனவெதிர் - கரும்பு; பழனம் - கழனி; வெதிர் - மூங்கில்; கழனியில் மூங்கிலைப்போல் வளர்ந்து விளைவது கரும்பாதலால், அது பழனவெதிரெனப்பட்டது. கரும்

* சிந். நாம. கஙு. † தொல். மரபியல். உ.
‡ தொல். மரபியல், சக. § ஐங்குறு. எஉ. ¶ பிங்கலந். ுஅக.

பின் பூ கொடிபோலுதலால், கொடி ஆகுபெயராய் அப் பூவை உணர்த்திற்று. அல்லது கொடி என்பதற்கு 'நீண்ட' வெனக் கொண்டு கொடிப்பிணையலென்பதனை நீண்டமாலை என்றுரைத்தலு மொன்று. பிணையலள் - மாலையை யுடையவள். ஏ - இறுதிநிலை.

அகற்றி அணுகுவித்தல்:

தோழியைக் குறையிரந்துவருந் தலைமகன் கையுறைத் தழை கொண்டுவந்து, அதனை ஏற்றுத் தன் தலைவிக்குத் தந்து அவளை எப்படியாகிலும் கூட்டிவைத்திடுமாறு தோழியை வேண்டுதலும், அப்போதவள், தன் தலைவியை இவனோடு கூட்டுவிக்குந் தன் முயற்சியினருமையும், அத் தலைவியின் அருமை பெருமையும், இவ்வாறு நீளக் களவுப் புணர்ச்சியில் நின்றொழுகாது உடனே மணமுடித்துக் கொள்ளுதலே நன்றாம்போலுமென்னும் எண்ணமும் அவனுக்குத் தோற்றுவித்தற் பொருட்டு, 'உங்கள் தலைவியை நீங்கள் இப்போது கூடுதலியலாது; யான் கூட்டுதலுமியலாது,' என்னுங் கருத்தைப் பற்பல ஏதுக் களாற் குறித்துக் கூறித், தோழி எப்படியானுங் கூட்டிடு வாள் என்று நம்பித் தலைவியையும் அத்தோழியையும் அணுக்கமாய் நினைத்து வந்த அத் தலைமகனை 'ஓ! ஓ! இவர்கள் நாம் நினைத்தபடி எளிதிலே கிட்டுதற்குரிய அத்துணை அணுக்கமாயினா ரல்ல,'ரென்று உட்கொள்ளும் படி அவன் நினைவைச் சேட்படுத்துவள்.

சேட்படுத்துதலாவது அகற்றுதல்; நடத்தல், நடை என்று நின்றவாறுபோலச் சேட்படுத்தல் என்னுந் தல் விகுதியேற்ற இத் தொழிற்பெயர்ச் சொல்லே சேட்படை என்று ஐவிகுதியேற்று நின்றது. இங்குச் சேட்படுத்துதல் என்பது அணுக்கமாய் நினைத்த அவனது நெஞ்ச நினைப்பையே யென்று கொள்க.

ஒரு பொருளை அடைவித்தற்கு முன்னால் அதனை அடைவித்தலில், உள்ள அருமையைப் புலப்படுத்திப் பின்னரதனை அடைவித்தால், அடைதற்கரிய பொருளை

அடைந்தோமே யென்று அதனை அடைவார்க்கு முன்னினும் பேரின்பம் பெருகுதலோடு, அதனை அடைவித்தார் மாட்டும், இத்துணை அரிதாய பொருளை எப்படியோ அடைவித்தார்களே யென்று நினைத்து அவர்திறம் உணர்ந்து உள்ளம் நெகிழுமாற்றால் அன்பும் வளரும். அடைந்திட்ட அப் பொருளின் மாட்டும் 'அரிதாய இப் பொருள் எமக்குக் கிட்டிற்றன்றே,' என்று உலவாத உள்ள வீழ்ச்சியும் ஆணித்தரமான மெய்யன்பும் முறுகி நிலைக்கும். இங்ஙனம் அகற்றி அணுகுவிக்குந் திறத்தாற் பேரன்பும் பேரின்பமும் முறுகி வலுப்பெற்று நிலைபேறாய் விளைந்திடுதலாலன்றோ, இங்ஙனமே அகற்றி அணுகுவிக்கும் அம்மகளிர் திறமான ஊடலுக்கு ஊடலுவகை என்னுந் தலைப்பெயரிட்டு ஓரதிகாரம் நிறுத்தி மற்றதன் கண்,

"தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலின் ஆங்கொன் றுடைத்து"

"உணலினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலின் ஊட லினிது"

"ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு"

"ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்."

என்று பல பொருட்டிறம் வாய்ந்த திருக்குறட்பாக்களை நம் திருவள்ளுவனார் அருளிச்செய்தனரென்பது தோழி சேட்படுத்துதல் ஊடல்போலுதலால் இச்செய்யுள் ஊடல் திணையாகிய மருதத்திணை பற்றி வந்ததென்று மேலே கூறியதும் இக் கருத்தொற்றுமை கருதியேயா மென்க,

## சேட்படை ஊடல் போல்வது:

இவ்வாறு ஊடற்கருத்தின்பாலதாய்க் கருதியுரைக்கப்படும். இச்சேட்படை நுதலிச் 'சிறையுறக் கிளந்து

---

* வீழ்வார் - விரும்புவாரது.

† பெறுகுவங்கொல்லோ - பெறுவகுமோ?

சேட்பட நிறுத்தலும்' என்றெழுந்துவரும் இறையனூரகப் பொருள் நூற்பாவுக்கு உரையெழுதுமிடத்து ஆசிரியர் நக்கீரனூர், நல்ல ஆவின் பாலைத் தயிராகத் தகுதிப்படுத்தி முறியக்கடைந்து முன்னர்ப் புலனாகாத வெண்ணெயைப் புலனாகும்படி யெடுத்து வைத்திடல்போல, அதனைக் கண்ணழித்துச் சொற்பொருள் கூறி அவற்றினின்று முன்னர்ப் புலனாகாத ஊடற்கருத்தினை யொத்ததோர் உயர் பெருஞ் செறிபொருள் நுட்பத்தை உருவியெடுத்து விளக்குகின்றூர். அது;

"(சொற்பொருள்) சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும். சிறை என்பது காப்பு. உற என்பது மிக, கிளத்தல் என்பது சொல்லுதல், சேண் என்பது அகற்றல், பட என்பது நிகழ்தல், நிறுத்தல் என்பது தழீஇக்கோடல்;

(பொழிப்பு) காப்பு மிகுதி சொல்லி அகற்றித் தழீஇக் கோடலும் என்றவாறு!

(விரிவுரை) ஆற்றூத தன்மைக்கண் நிறுத்தலென்னுஞ் சொல் தழீஇக்கொள்ளு மென்பது;

(கருத்து) எனவே, தலைமகளை ஆற்றூமைசெய்வனபோன்று ஆற்றுவிப்பன சொல்லுமென்பதும் போந்தது."* என்பது.

நூற்பாவின் சொற்பொருள் கூறி அதன் ஆழ்பெருங் கருத்தை இவ்வாறு துருவியெடுத்து நுட்பஞ் செறியச் சுருங்கிய சொல்லால் விளங்க வைத்துரைத்த மதித்திறன் வாய்ந்த நக்கீரனூரது தனிப்பேருரைக் கூற்று மொழியிலும் 'ஆற்றூமை செய்வனபோன்று ஆற்றுவிப்பன சொல்லும்' என்னும் ஊடற்கருத்துத் தெளியப் புலனாதல் காண்க:

பாட்டின் உட்பொருள்:

இனி இவ்வாறு தோழி தலைமகளைச் சேட்படுத்துதற்கு மேலே தலைப்புச் செய்யுள் எடுத்துக் காட்டிய வது, 'தலைமகள் மங்கைப்பருவ மடையாதவள், இன்னும் பேதைப்பருவத்தினளாகவே இருக்கின்றனள்; ஆகவே,

* இறைய. கஉ.

நீங்கள் சொல்லும் செய்தி சிறிதும் பொருத்தமாகாதே' யென்பது. விளக்கமாகக் கூறப்படும் இச்செய்தியை அவ் வைங்குறுநூற்றுச் செய்யுள், விளக்கத்துக்கு ஏதுங் குறைவில்லாத முறையில் கற்பார்க்கு வியப்பும் அதன் வழி ஊக்கமும் ஒருங்கே உண்டாம்படி மிக அழகான குறிப்பின் வைத்து 'இவள் பழனவெதிரின் கொடிப்பிணை யலள்' என்று கூறிற்று. 'கரும்பின் பூவினுற் செய்யப் பட்ட மாலை மணமில்லாதது; ஆகவே அதனை அணிந் திருக்கின்றனள் என்று கூறப்பட்ட தலைமகளும் மணங் கமழாதவள்; அஃதாவது மணங்கமழ்தற்குரிய மலர்ச்சி பெறுதவள் - ஆவது மங்கைப் பருவத்தின் பூப்பில்லாத பேதைப் பருவத்தினள்' என்பது, இங்ஙனமே இன்னென் றும் அச் செய்யுளிற் குறிப்பின் வைத்துக் கூறப்படுகின் றது, அது, 'கதிரவன் மறைந்தான்; இவ்விடம் காவ லுடைத்து; நும்மிடமுஞ் சேய்த்து; எம் ஐயன்மாருங் கடி யர்; யான் தாழ்ப்பின் அன்னையு முனியும்; நீரும் போய் நாளை வாருமென இசைய மறுத்துக் கூறுநிற்றல்'* இது 'காப்புடைத்தென்று மறுத்த' லென்னுந் துறையாம். இதனையே மேற்செய்யுள் 'எருமைப் போத்து ஆம்பன் மயக்கும் ஊர்' என்பதனுற் குறித்து விளக்கிற்று. அஃதா வது மேயத்தகுந்ததிது மேயத்தகாததிது என்னும் உணர்ச்சியின்றி, எருமைக் கடாக்கள் குளத்திலுள்ள ஆம்பன் மலரைக் கடித்துக் கெடுக்கும் ஊர் இவ்வூரென் பது. எனவே, 'அவ் வெருமைக் கடாக்களைப் போலவே இங்குக் காவலாளரெனவும் ஊராரெனவும் உள்ளவர்கள் நல்லதிது கெட்டதிது என்று எதனையும் ஆராயாது செய்து கெடுப்பர்; ஆதலால் நீங்கள் இறைவன் குறிப்போடு முழு தொத்த இயற்கை உள்ள வீழ்ச்சியினுற் களவொழுக்கத் தில் நின்று உங்கள் காதலியைத் தேடி வரினும் அதன் நன்மையை யறியமாட்டாது உங்களையும் எங்களையும் ஊறுபடுத்தி வருத்துவர்; ஆதலால் இப்போது நீங்கள் இங்கு வருதல் பொருந்தாது' என்பது பெறப்படும் 'நெறி

* பேராசிரியருரை.

மருப்பு' 'நீலஇரு' என்னும் அடைமொழிகள் எருமையின் கொடுமையையும், அதன்வழி ஊராரின் தீய தன்மையை யும் விளக்கியவாறும். அங்ஙனமே, 'வெறிமலர்ப்பொய்கை' யென்பது ஆம்பலின் உயர்ந்த மென்றன்மையையும் அதன் வழி அத் தலைமகன் பொருந்திய காதலினிமைச் சிறப்பை யும் உணர்த்திற்றென்க.

இவ்வுட்கருத்து நுட்பங்களை யெல்லாம்,

'நாற்றங் கொள்ளப்படாத கரும்பின் பூவாற் செய்யப்பட்ட நெடிய மாலையையுடைய ளென்பதனாற் பேதை யென்றவாறு அறிக. எருமைப் போத்து வெறிமலர்ப் பொய்கை ஆம்பல் மயக் கும் ஊரென்றது நல்ல தன்மையை ஆராயாது கெடுக்கும் ஊராத லால், நினக்கு ஈண்டு வருதல் பொருந்தாதென்பதாம்.'

என்று அச் செய்யுளுரையுங் கூறுவதாயிற்று. இவ்வுரை அச் செய்யுட்குப் 'பதவுரை' யென்று குறிக்கப்பட்டிருக் கின்றது.

## உரைத் திறம் :

செய்யுட்கு உரை யெழுதப் புகுந்த உரையாசிரியன் மார்க்கு, அதன்கண் மொட்டுண் மணம்போல உள்ளுள் விராஅய் ஒளிந்துகிடக்கும் நுண்மாண் பொருளை அதனை மலர்த்துத் தெளிய வெளிப்படுத்துதலே கடமையாம். ஆகவே மொட்டென்பது செய்யுள், மலரென்பது உரை. மணமென்பது கருத்து; எனவே கருத்தினை வெளிப்படுத்து முறையிற் செய்யுளை மலர்த்து உரைப்படுத்துவதே உரை யாசிரியர் தொழில் என்பது நன்கு விளங்கும். விளங்கவே கருத்தினை வெளிப்படுத்துவது உரையாசிரியரின் முதல் நோக்கமென்றும், அதற்கேற்பச் செய்யுளை மலர்த்தல் எனப்படுஞ் 'சொல்லுக்குச் சொல் சொற்பொருள் கூறுத லென்பது அவர்க்குத் துணைநோக்க மென்றும் மயக்க மின்றித் தெளியப்படும். ஆகவே சொற்பொருள் கூறு தலை உயர்ந்த உரையாசிரியன்மாரெல்லாரும் ஒரு பெரிதாக நினைத்து அதனையே விரித்துக் கூறிக்கொண்டிராமற் கருத்து விளக்குந் திறத்திலேயே கண்ணுங் கருத்துமா

யிருப்ப ரென்க. ஆதலாற்றான் 'பதவுரை' வேறாகவும் விரிவுரை கருத்துரை வேறு வேறாகவும் பிற்காலத்தார் பிரித்தெடுத்து மிக விரித்து உரைகூறும் உரைப்பகுதிக ளெல்லாவற்றையும், அச் செய்யுளுரை தன் முதல் நோக்கம் பற்றிக் கருத்துக் கூறுந் தொடரிலேயே, அவ்வவற்றின் முதன்மைக்குந் தகுதிக்கும் அளவுக்கும் ஏற்ப விளக்கிச் செல்கின்றது.

## தமிழின் வளம் :

இவ்வாறெல்லாந் தமிழ்கற்பார் அரிதின் ஆழ்ந்தகழ்ந்து ஆராய்ந்துணருமாறு செவ்விய கருத்துக்களைத் தங்கட் செறியப் பொதிந்துவைத்துச் சுருங்கிய வடிவில் சருக்கரைக்கட்டியுங் கட்டிப்பாயாசமுமெ‌ன இனிமை விளக்கித் திகழும் நம் பழந்தமிழ்ச் செய்யுட்களையும் அவற்றின் உரைகளையுந் தமது மதிக்கொழுந்தினைத் தீட்டி நிறுத்துப் பயில்வாரன்றே தமிழ்வளம் பயின்றாராவர்! அவரன்றே தமிழின்பம் இனைத்தென்று நுகர்ந்துணர்ந்தாராவர்!

சொல்லைச்சுருக்கிப் பொருளைவிளக்குங் கருத்துட் கொண்டு, செய்யுட் பொருளில் முதன்மைக் கருத்துக்குத் துணையாய் வருங் கருத்துரைகளை யெல்லாம், முதன்மையான சொற்றொடருக்குத் துணைத்தொடர்களாய் அதனை அடுத்து நாட்டு நகர்வளன், இயல்பொருள்வளன், அடைமொழிப்பொருள் முதலியவற்றைக் கூறிவருந் தொடர்களிலேயே அவற்றுட் சொற்பொருட் கருத்துக்களின் இயற்கைநிலைக்கு முரண்படாத வகையில அமைத்து நிறுத்தியும், எடுத்துக்கொண்ட செய்யுட்பொருளையும் அதன் பெருமை சிறுமைகட்குஞ் செறிவு விரிவுகட்குந் திட்ப நுட்பங்கட்கும் ஏற்ப இசைத்து நிறுத்தியும் நல்லிசைப் புலவராவா ரெல்லாருஞ் செய்யுளியற்றுவர். ஈதன்றே தமிழ்வளமென்பது! வெறுஞ் சொல்லாவது வெறும் பொருளாவது வளங் காட்டுமாறில்லை. குழுறிப் பெய்த பெருமழை நீர், நிலத்தின் அமைப்புக்கும் இயல்புக்

கும் ஏற்றவாறு மேடுபள்ள மறிந்தோடித் தங்குமிடந் தங்கி ஊறுமிடத்தூறிச் சுவைமல்குமாயின் அச் சுவை யேறிய நிலம் வளங் காட்டுமாறுபோல, சொல்லும் பொருளும் இணைந்து விரவிநிற்குமிடத்து அச் சொல்லியல் புக்கும் பொருளியல்புக்கும் ஏற்றவாறு ஒன்றோடொன்று அமையவேண்டிய விடத்து இணைந்தமைந்து ஒழுகிக்கொழு விச் சுவையெதிர்ந்து நிற்குமாயின் அச் சொற்பொருட் பிணிப்பான செய்யுட்களே தமிழ்வளங் காட்டிடும் என்க. சொற்களூடு பொருள்சென்று நிரம்பிச் சுவைமிகுத்து விளக்கும அழகே தமிழ்வளமாகும். இவ்வகைப்பட்ட தமிழழகும் தமிழ்வளனும் மலிந்தவை கலித்தொகை, குறுந் தொகை, மணிவாசகர் திருக்கோவையார் முதலான பொருளி லக்கியங்களும், திருவள்ளுவர் திருக்குறளென்னும் அறநூ லிலக்கியமும், சிலப்பதிகாரம், சேக்கிழார் திருத்தொண்டர் புராணமென்னுங் கதை யிலக்கியங்களும், திருஞானசம்பந் தப் பெருமான் தேவாரத் திருமொழி யென்னும் பாட்டிலக் கியமும், இறையனூரகப் பொருளுரை யென்னும் உரை இலக் கியமும், தொல்காப்பிய இலக்கணமும், இன்னும் இவை போன்ற பிறவுமென்று கொள்க. இவையெல்லாம் விரிப் பிற் பெருகும். அது கிடக்க;

## சேட்படுத்தும் உரைகள்:

இனித் திருச்சிற்றம்பலக்கோவையாருள், தலைவியின் இளமைகூறி மறுக்கும் இவ்வைங்குறுநூற்றுச் செய்யுட் டுறைக்கு முன்னூற் பதினான்கு துறைகளும், பின்னூற் பதி னொரு துறைகளுங் காணபபடுகின்றன. குறையிரந்து செல்லுந் தலைமகன் சந்தனத்தழையைக் கையுறையாக எடுத்துக்கொண்டு தோழியிடைச் சென்று, அதனை வாங் கிக்கொண்டு தன் குறையை முடித்துத் தந்தருளுமாறு வேண்டுவான். இது 'தழைகொண்டு சேற' லென்னுந் துறையாம். இங்ஙனம் வேண்டினனை இனிப் பல ஏதுக் கள் கூறித் தோழி சேட்படுத்துவள். சேட்படுத்து மாறு: இச்சந்தனத்தழை எங்கட்கு வந்தவாறென்னோ வென்று இங்குள்ளாரால் ஆராயப்படுமாதலால், அந்தத்

தழை எங்கட்குத் தகாதென்றும், யாங்களிருக்கும் இக் குன்றிலில்லாத தழையைத் தருதல் எங்கட்குக் குடிப் பழியாமென்றுங் கூறிச் சேட்படுத்துவாள். இவற்றைக் கேட்ட தலைமகன் இந்தச் சந்தனத்தழை தகாதென்று மறுத்தாளாமல்லது என் குறையிரவை அவள் மறுத்த வாறில்லையென்று நினைத்து அந் நிலத்துக் குன்றிலுள்ள வேறு தழைகொண்டு செல்வான். செல்வாற்கு, அத் தோழியாவாள் 'என் தலைவியின் நினைவைத் தெரிந்து கொண்ட பின்னர்த்தான் இதனை, ஏற்றுக்கொள்வேன்,' என்று கூறி மறுப்பள். அங்ஙனமாயின் தலைவியின் நினைவை அறிந்தே வந்து பெறுகவென்று தலைவன் உண்ணினைந்து நிற்ப, தோழி அவள்நினைவைத் தான் அறிவாள்போற் சென்று மறைந்து பின்பு அங்கிருந்து மீண்டும் தானேயொன்று படைத்துத் 'தலைவிக்கும் இத் தழை உடம்பாடுதான்; ஆயினும் இப் பூந்தழை குற்றால மென்னும் ஓரிடத்தன்றி மற்றிடத்தில்லாமையான், அஃதிங்கு வந்தவாறென்னோவென்று பிறரால் ஆராயப் படுமாதலின், அத் தழை எங்கட்கு ஆகாதாம்,' என்பள்.

தழையாயினன்றே இவ்வாறெல்லாம் மறுத்துரைக் கப்படுகின்றது; ஆகவே கண்ணிகொண்டு செல்வோமென் றுன்னிக் 'கழுநீர்மலரைத் தலைமாலையாக அழகுபெறப் புனைந்தெடுத்துச் செல்வான். அதனையும் மறுத்து, 'என் தலைவியாவாட்குச் செவிலித்தாய்மார் முன்னரே சூட்டி யுள்ள மாலைகட்குமேல் யானொன்று சூட்டுவேனாயின், அவள் நாணுநிற்பள்,' என்று அவட்குள்ள நாணத்தை யுரைப்பாள். அதுதானுமன்றி, யாங்களெல்லாரும் வேங்கைமலரை அணிவோமே யன்றித் தெய்வம் அணி தற்குரிய இம் மணங்கமழ் மாலையை அணிவோமல்லோ மென்றும் அஃதிசையாமை கூறுவள். இம் மறுப்புரைக ளெல்லாவற்றையுந் தலைமகன் தம் குலத்துக் கிசை யாமை கூறியதே யன்றி என் குறைக்கிசையாமை கூறிற்றன்றுமென உட்கொண்டு மாந்தழையும் அதன் மலருங்கொண்டு மீண்டுஞ் செல்வான். அதற்கவள், அன்னமும், பெண்மானும், கிளிகளும் முறையே நடையும்

பார்வையும் பேச்சும் பெறுதற்கு நேரம்வாயாது நிற்கின்றன ; நீங்கள் இவ்வளவு நேரமாக இங்கு வந்திருந்தவாறும் அவட்குத் தெரிந்திலது. ஆகவே நேரம் பார்த்துத்தான் அவள்மாட்டுச் செல்லல்வேண்டும். ஆதலால் இன்று அவளைப் பார்க்கும் நேரம் வாய்த்திடுமாயின் அப்போதி தனைக் கொண்டுவாருங்க,' ளென்று சொல்லிவிடுவாள். இதற்குட் பொழுது சாய்ந்து கதிரவனும் மறைந்துவிடும். 'கதிரவன் மறைந்து இரவும் வந்ததாதலின் இங்குக் காவலர் சூழ்ந்து கெடுதி செய்வர் ; ஆதலால் இன்றுபோய் நாளை வாரு,' மென்பாள். இதனைத் தலைவன், 'இங்ஙன மிவள் இங்குள்ள நிலைமையை எனக்கு இருந்தவாறே கூறினாளாயது என்பாலுள்ள அன்பினாலல்லது வேறில்லை ; இத்துணை அன்புள்ளவள் எனக்குக் குறையினைக் கட்டாயம் முடித்துத்தருவள்,' என்றெண்ணி அவள் கூறியவாறே திரும்பி மறுநாள் செல்வான்.

இரண்டாநாள் மிக எதிர்ந்த விருப்பத்தோடு தோழியிடைச் சென்றானுக்கு, 'ஐய, யான் குற்றேவன் மகளாதலால் நீங்கள் கூறும் இவ்வரும்பெரு மறைபொருட் செயலை அவட்குக் கூறும் வழியில்லேன் ; ஆகவே நீங்களே நேரிற் கூறிக்கொள்ளுங்கள்,' என்று சொல்லிவிடுவாள். இதைக் கேட்ட தலைவன் மிக வருந்துவானாதலின் அவனை ஆற்றுவித்தலுன்னி, 'யான் சிறியேன் ; நீங்கள் பெரியீர் ; ஆதலால், நீங்களே கண்டு உரையாடினால் விருப்பம் நிறைவேறலாம்,' என்று தான் முன்னுரைத்தற்கோர் ஏது கற்பிப்பள். 'நம்மைப் பெருமையாகவேதான் இவள் எண்ணியிருக்கின்றனள், எப்படியானும் நமது குறையை முடித்தேவைப்பள்,' என்று நினைத்துத் தலைவன் ஆற்றினானாக, அவன் நிலையைத் தோழியுணர்ந்து நகையாடி மறுத்தும், இரங்கி மறுத்தும், எங்கள் குன்றிலுள்ள மாம்பூக்களும் சுனைப்பூக்களும் எங்கள் தலைவியின் வடிவழகுக்கு அஞ்சி மலர்ந்தறியா வாதலின், நீங்கள் கொண்டுவந்த இச் சிறப்பில்லாப் பூத்தபூ எங்கள் தமர்களால், 'மலர்ந்த பூக்களே யிங்கு இல்லையாக இஃதியாண்டையதோ?'

வென்று ஐயுறுமாறு மாறுசெய்யுமென மொழிந்து அவன் கொணர்ந்த மாமலரின் சிறப்பின்மை கூறி மறுத்தும் அவனோடு இவ்வாறே நெடுகக் குறியாடுவாள். இவை யெல்லாம் முறையே 'சந்தனத்தழை தகாதென்று மறுத்தல்' 'நிலத்தின்மை கூறி மறுத்தல்' 'நினைவறிவு கூறி மறுத்தல்' 'படைத்து மொழியான் மறுத்தல்' 'நாணுரைத்து மறுத்தல்' 'இசையாமைகூறி மறுத்தல்' செவ்வியிலளென்று மறுத்தல்' 'காப்புடைத்தென்று மறுத்தல்' 'நீயே கூறென்று மறுத்தல்' 'குலமுறை கூறென்று மறுத்தல்' 'நகையாடி மறுத்தல்' 'இரக்கத்தொடு மறுத்தல்' 'சிறப்பின்மை கூறி மறுத்தல்' என்னுந் துறைகளாகக் கூறப்படும். இவற்றை யடுத்ததுதான் இளமை கூறி மறுத்த லென்பது.

இவ்வாறெல்லாந் தன்னை அலைத்தலைத்துரைக்கும் அத் தோழியினுடைய சேட்படையுரைகளை யெண்ணிப் பார்த்து இவளை யொழித்தே இனி என் விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு முயலவேண்டுமென்று தலைவன் உட்கொண்டு நிற்ப, இதனை யவள் குறிப்பினாலறிந்துகொண்டு இனி என் உதவியில்லாமல் நீங்கள் இச்செயலை முடித்துக் கொள்ளுதல் இயலாதென்று அவன் மறைத்தமை கூறி நகைத்துரைப்பாள். அவள் நகையினைக் கண்ட தலைமகன், மறைத்தால் முடியாதென்றனளாதலின் அதனாலேயே மறையாதிருந்தால் முடியுமென்று கூறினளாயிற்றென்று உன்னி, 'உன்னுடைய மெல்லெலன்னும் அருள் நோக்கமன்றோ எனக்குச் சிறந்ததுணை' யென்று அவளது நகையுரைக்கு மகிழ்ந்து கூறுவான். தோழி இன்னும் அவனை அலைப்பவெண்ணி 'இங்குத் தோழிமார் எத்தனையோபேருளர். அவர்தம்முள் உள்ள நினைவு யார்கண்ணதோ' என்று ஒன்றுமே அறியாள் போன்று அவன் நினைவு கேட்பள். ஓ ஓ இன்னுமிவள் என்னால் விரும்பப் படுவாளை அறிந்திலவள் போலுங் கூறுகின்றாள். ஏதாயினும், இனி யவட்கு என் தலைவியின் அடையாளங் கூறுவேனென்று கூறத்தொடங்கி, தன் தலைவியின் உட

றுப்புக் குறிகள் கூறி அதன்பின்பு, அன்று இயற்கைப் புணர்ச்சியின் பின் பிரிந்து செல்லும்போது தோழியைக் குறித்துக்காட்டிய அவள் கண்ணினை நினைந்து அதனை நயந்து கூறுவான். இக் கண்ணயந் துறைக்கும் கூற்றினை மாணிக்கவாசகப் பெருமான்,

"ஈசற் கியான்வைத்த அன்பின் அகன்றுஅவன் வாங்கியஎன்
பாசத்தின் காரென்று அவன்தில்லை யின்ஒளி போன்றுஅவன்
பூசத் திருநீ றெனவெளுத்து ஆங்கவன் பூங்கழல்யாம் [தோள்
பேசத் திருவார்த்தை யின்பெரு நீளம் பெருங்கண்களே"*

என்று தமது திருக்கோவையாரில் மிக அழகான கருத்து நுட்பங்களோடு விளக்கிக் கூறுகின்றார்கள்.

தலைமகன் இங்ஙனம் உரைப்பக் கேட்ட தோழி, இனியுமிவனை இவ்வாறலைத்தல் தகாதென் றிரங்கி, 'எங்கள் குடிக்கு இவ்வாறு தழையேற்றல் ஏலாதாயினும் நீங்கள் முன்பு செய்த உதவியையும், உங்கள் பேரன்பையும் நினைத்து இதனை ஏற்றுக்கொள்கின்றே' னென்று தழையை ஏற்றுக்கொள்வாள். இது 'தழை எதிர்தல்' எனப்படும்.

இனித் தழையெதிர்ந்த தோழி தலைமகண்மாட்டண்மி அவள் குறிப்பறிந்து, அங்ஙனங் குறிப்பறிந்த பின்னர் இச் செய்தியைக் கூறி, இது கூறியதோடமையாமல் இதற்குடம்படுதல் நமது கடமையாமென்றும் அவளேற்குமாறு 'நமக்குதவி செய்தற்கு நாமும் உதவிசெய்ய வேண்டுமென்று வகுத்துக் கூறித் தழையை ஏற்பித்து அவளை விரும்பச்செய்து, அங்ஙனமவள் விரும்பிய அவ் விருப்பத்தையுந் தலைமகனுக்குத் தெரிவித்து அவ்விருவரையும் பகற்குறிக்கட் டலைப்பெய்வியாநிற்பா ளென்பது.

இங்கு உதவி செய்தானென்று தோழி பன்முறையும் பாராட்டிச்சொல்லுமாறு தலைமகன் செய்த உதவியாவது, முன்னொருநாள் தலைவியும் இத்தோழியும் தினைப்புனத்தே

* திருச்சிற். ௧0௧.

பறவையோப்பித் தினைக்கதிர் காத்துத் தனியே நின்ற காலை, மதங்கொண்டு பிளிறித் திடீரென்று அவர்மேல் வந்தவொரு மால் யானையை அவர்க் கஃது ஊறுசெய்யாத வாறு அம்பிட்டுக் கடிந்ததாகும். இதனை,

*"கவளத்த யானை கடிந்தார் கரத்தகண் ணார்தழையும்
துவளத் தகுவன வோசுரும் பார்குழற் றூமொழியே"†

என்று திருச்சிற்றம்பலக் கோவையாருங் குறித்துக் கூறுவ தாயிற்று. இவ்வுதவியினையே,

‡"கார்ப்பெயல் உருமின் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்திச்
சினந்திகழ் கடாஅம் செருக்கி மரங்கொல்பு
மையல் வேழம் மடங்கலின் எதிர்தர
உய்விடம் அறியே மாகி ஒய்யெனத்
திருந்துகோல் எல்வளை தெழிப்ப நாணுமறந்து
விதுப்புறு மனத்தேம் விரைந்து அவற் பொருந்திச்
சூர்உறு மஞ்ஞையின் நடுங்க வார்கோல்
உடுஉறும் பகழி வாங்கிக் கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத்து அழுத்தலின்
புண்உமிழ் குருதி முகம்பாய்ந்து இழிதரப்
புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது
அயர்ந்து புறங்கொடுத்த பின்னர்"§

என்று பத்துப் பாட்டுள் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டும் 'தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்' என்னுந் துறைக்கண் நிறுத்து உரைதருகின்றது,

## நூல்களின் மாறுகோளும் இணக்கமும்:

இனிச் இச் சேட்படைப் பகுதி யுணர்த்தி மேலே காட்டப்பட்ட இத்தனை துறைகளுக்கும் இறையனா ரகப் பொருள் எட்டுத் துறைகளே கூறி மற்றவற்றைப் புற னடையில் இட்டு அடக்குகின்றது. அவற்றை,

* கரத்த-கையிலுள்ள. † திருச்சிற், கக௩.

‡ கொல்பு-முறித்து, மடங்கலின்-கூற்றுவனைப்போல, எல்-ஒளிபொருந்திய.

§ குறிஞ்சிப், கரு௩. கஎச.

*"குறையுறுங் கிழவனை உணர்ந்த தோழி
சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்,
என்னை மறைத்தல் எவனாகியரென
முன்னுறு புணர்ச்சி முறைமுறை செப்பலும்
மாயப் புணர்ச்சி அவனொடு நகாஅ
நீயே சென்று கூறென விடுத்தலும்,
அறியாள் போறலும், குறியாள் கூறலும்,
படைத்துமொழி கிளவியும், குறிப்பு வேறு கொளலும்
அன்ன பிறவுந் தலைப்பெயல் வேட்கை
முன்னுறு புணர்ச்சிக்கு உரிய வென்ப†"

என்னு மதன் நூற்பாவிற் காண்க. இவற்றுள், திருச்சிற்றம்பலக்கோவையாரிற் காணப்படாத புதுத்துறைகளுஞ் சில உள. அவை 'முன்னுறு புணர்ச்சி முறைமுறை செப்பல்' 'மாயப்புணர்ச்சி அவனொடு நகாஅ' 'குறியாள் கூறல்' 'குறிப்பு வேறு கொளல்' என்பன. இனிப் 'படைத்துமொழி கிளவி' என்னுந் துறைக்கு,

'இவன் இத்தழை நல்ல, கண்ணி நல்ல, இவை கொள்ளற்பால வென்று கையுறை பாராட்டி நின்ற நிலைமைக் கண் இங்ஙனஞ் சொல்லும்: யாதோவெனின், 'இவ்விடம் என்னையரானுந் தன்னையரானும் பல்காலும் புகுதரப்படுமால்; அவர் நும்மைக் கண்டால் ஏதஞ்செய்வர். கூற்றினுங் கடுஞ்சினத்தராதலான்; நீர் உடையதோர் குறை உண்டே எனின், அகன்று நின்று முடித்துக்கொள்ளற்பாற்றென்னும்,' என்று இறையனாரகப்பொருளுரை யொன்றாகவும்,

'(நினைவுகூறி மறுத்தமையின்) நினைவறிந்தல்லது, ஏலேமென்று மறுத்துக் கூறியவாறன்று; நினைவறிந்தால் ஏற்பேமென்றவாறு மெனத் (தலைவன்) உட்கொண்டு நிற்ப, சிறிது புடைபெயர்ந்து அவணினைவறிந்தாளாகச் சென்று, இத்தழை யானேயன்றி அவளும் விரும்பும்; ஆயினும் இது குற்றாலத்துத் தழையாதலால் இத்தழை இவர்க்கு வந்தவாறு என்னோவென்று ஆராயப்படும்; ஆதலான் இத்தழை யெமக்காகாதென்று மறுத்துக் கூறுநிற்

* எவனாகியர்-ஏதாகுக. † இறைய. கஉ.

றல்.'* என்று திருச் சிற்றம்பலக் கோவையாருரை வேறொன்ருகவும் விளக்கங் கூறுகின்றன.

பொருளிலக்கணத்திற் றுறைகளென்று கூறப்படுவன வெல்லாம் அவ்விலக்கணத்தோடு தொடர்பு பட்டாரின் நினைப்புச் சொற் செயல் வேறுபாடுகளேயாமன்றிப் பிறிதில்லை யாதலின், அவ்விலக்கணத்தைத் துறையுறுப்புக் கூறி விளக்கவந்த ஆசிரியன்மாரெல்லாருந் தத்தங் கால நிகழ்ச்சியிலே எந்தச் செயல் எந்தத் துறையென்று எந்தச் சொல்லால் வழங்கி வந்ததோ அதனை அதுவாக வைத்தும், அல்லததற்குத் தமது நூற்போக்குக் கேற்பத் தாமே ஒரு பெயர்படைத்தமைத்தும் நூலெழுதிச் செல்வர். ஆதலால் இப்பொருளிலக்கண விரிவிலே, துறைகளுந் துறைப்பெயர்களும் இங்ஙனம் ஒரு நூலுக்கும் மற்றொரு நூலுக்குந் தம்முண் மாறுபாடாய்க் காணப்படினும், அம்மாறுபாட்டுக் காட்சியால், அவ்விலக்கணத்தின் முதன்மைப் போக்குக்கும் ஒருமைப்பாட்டுக்கும் எதும் இழுக்கில்லையென்றறிக. மேலும் ஒரு பொருட்பகுதியை எட்டுத் துறைகளாய்ப் பகுத்து ஒரு நூல் கூறிப் போக, அந் நூலைவிட அப் பகுதியையே விரித்துக்கூற விரும்பிய மற்றொரு நூல் முன்னூல் கூறிய ஒவ்வொரு துறையையும் பல கூறுகளாகப் பகுத்துத் தான் பகுத்துக்கொண்ட பொருட்பகுதிகட்கேற்ப வேறுவேறு புதுப்பெயர் நிறீஇயும், வழக்கப் பெயர் நிறீஇயும் பலவகையான மாறுபாட் டமைப்புகளுடன் காணப்படுதல் அது தனக்கு இயல்பேயாமென்க. ஆனல், அஃதெடுத்துக்கொண்ட இலக்கணத்தின் முதன்மைக் கருத்துகளுங் கருத்துநுட்பங்களுமட்டும் முன்னூலொடு மாறுகொளாவென் றறிதல்வேண்டும்.

இங்ஙனமே புறப்பொருளிலக்கணத்தைத் தெரிந்தெடுத்துரைக்கும் புறப்பொருட் பன்னிருபடலமும் அதன் வழியதான புறப்பொருள் வெண்பாமாலையும் முழுமுதல் நூலான தொல்காப்பியத்தோடு முரணுமென்று அவற்றினிணக்கமறியாது சொன்மாறுமட்டுங் கண்டு கூறு

* திருச்சிற். சக.

வாரை நோக்கி, ஆசிரியர் சிவஞானமுனிவரர் "இவை இங்ஙனம் வேறுபடினும் புணர்ச்சி முடியும், சொன்முடியும், பொருண்முடியும் வேறுபடாமையின் மரபுநிலை திரியாவாயின. இவ்வுண்மையுணராதார் பன்னிருபடலம் முதலிய நூல்களை வழீஇயன வென்றிகழ்ந்து, பன்னிருபடலத்துள் வெட்சிப்படலந் தொல்காப்பியனார் கூறியதன்றெனத் தொல்லாசிரியர் வழக்கொடு முரணித் தமக்கு வேண்டிய வாறே கூறுப," என்று தமது தொல்காப்பியச்சூத்திர விருத்தியி னுரைகூறி நிறுவுதலும் இங்கு நினைவுகூரற்பாலது.

இனி, இன்னொன்றும் இங்ஙனமே கண்டுகொள்ளற் பாலது. இச் சேட்படைப் பகுதி ஆசிரியர்தொல்காப்பியனார் கூற்றில்," தோழி நீக்கலி னாகிய நிலைமை நோக்கி,"* என்பதன்கண் அடங்கும். இந்நூற்பாவுக்கு உரையெழுது மிடத்து ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற் றனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து' என்று உரைகூறி அதன்பின்பு, 'இதுவே மடன்மா கூறுதற்கு ஏதுவாயிற்று' என்றுங் கூறினார். இதனோடொப்பவே, 'தோழி நீக்கலி னாய நிலைமையு நோக்கி' என்னுமிதனை அடுத்து 'மடன்மா கூறும் இடனுமா ருண்டே' என்று வரும் நூற்பாவுக்கு உரையெழுதுமிடத்து, அச் சேட்படையான் மடலேறுவ லெனக் கூறும் இடனும் உண்டு,' என்றும், 'நோக்கி மடன்மா கூறுமென்க' என்றும் உரை கூறினார். இவ்வாற்றால், ஆசிரியர் தொல்காப்பியனார் மடன்மா கூறுதற்கு ஏது வாகச் சேட்படைப் பகுதியை முன் நிறுத்தி மற்றதன் விளைவாக மடன்மாப் பகுதியை அதன்பின் நிறுத்து நூற் பாவியற்றினாரென்னும் அவர் கருத்துப் புலனாயிற்று. ஆனால், திருக்கோவை யாசிரியரோவெனின், சேட்படைக் கும் மடன்மாக் கூற்றுக்கும் ஏதோ ரேதுவும் விளைவுந் தோற்றுவியாது, மடன்மாப் பகுதியை முன்னும் சேட் படைப்பகுதியைப் பின்னுமாக நிறுத்திவிட்டார். இங்ஙனம் நிறுத்தியதற்கு அதன் உரையாசிரியர் பேராசிரியரும்,

* தொல், களவு, கக.

தொல்காப்பியனுர் கருத்தோடொத்த வகையில் ஏதோ ரியையுங் காட்டினுரல்லர். மற்று அவர் காட்டும் இயைபு வேறுகவே உள்ளது. இவ்வாறு இக்கருத்தில் தொல்காப்பியக் களவியலுந் திருக்கோவையாரும் பொதுநோக்கத் திற்கு மாறுபட்டனபோலக் காணப்படுகின்றன.

இனி, இவ்விருபெரு தெய்வ அருணூலும் இங்ஙனம் மேற்பார்வையில் மாறுபட்டனபோலக் காணப்படுமாறே உள்ளுள்ளும் மாறுபாடுடையனவோ வென்றறிதல் வேண்டுமன்றே! அங்ஙனம் அறியும்வழி அவற்றுள் ஓர் இணக்கம் உண்டென்றே இறையனுரகப்பொருளும் அதனுரையும் இடைநின்று தெளிவிக்கின்றன. இறையனுரகப்பொருளும் அதன் உரையும், மடற்றிறப் பகுதியை முன்னுஞ் சேட்படைப் பகுதியைப் பின்னும் நிறுத்தித் திருக்கோவையாரோடு அமைப்பில் ஒத்து, மற்று அம் மடற்றிறத்துக்குச் சேட்படையை ஏதுவாகக் கூறித் தொல்காப்பியத்தோடும் ஒத்து நிற்கின்றது. இன்னும் அவ்விறையனுரகப் பொருளுரை, திருக்கோவையாருரை யுரைக்கும் ஏதுவினையும் சேட்படைக்கு உரைக்கும். ஆகவே இவை தமக்குள் உள்ளியைந்ததோ ரியையுண்டென்பது வெளிப்படுமன்றே? மேலும், பலவகை ஏதுக்களால் நிகழும் ஒரு செய்தியை யுரைக்கும்பொழுது ஒருவர் ஓரேதுக்கூறி நிறுவினுராக, மற்றொருவர் மற்றோரேதுக் கூறி நிறுவுவாராதலின், அதனுலவை முரண்படுமாறில்லை யென்றுங் கொள்கவென்பது.

---

## ௬௯. பகற்குறி

[தோழியைக் குறையிரந்த தலைமகன், அவள் வாயிலாகப் பகற்காலத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தன் தலைவியைக் கண்டு அளவளாவுதற்கு இடம்பெற்று அவ்வாறே சென்றுகூடுதல்.]

நெடுமென் பணைத்தோள் இவளும் யானும்
காவல் கண்ணினம் தினையே, நாளை
மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்
ஒண்செங் காந்தள் அவிழ்ந்த ஆங்கண்
தண்பல் அருவித் தாழ்நீர் ஒருசிறை
உருமுச் சிவந்து, எறிந்த உரன்அழி பாம்பின்
திருமணி விளக்கில் பெறுகுவை
இருமென் கூந்தல் ஏம்உறு துயிலே.

—அகநானூறு, ௬௮.

'நீண்ட மெல்லியல்பு வாய்ந்த பருத்த தோள்களையுடைய தலைவியாவாளிவளும் யானும் தினைப்புனத்தைக் காவல்காக்கும் நோக்கமுடையேமாய் நாளை இருப்பேம். ஆகவே, மரமேறுதற் றொழிலிற் சிறந்து வல்லமைபெற்ற குரங்குகளும் நெருக்கத்தால் ஏறியறிய மாட்டாத அத்துணை மரநெருங்கின அருகேயுள்ள இளஞ்சோலையின் கண், குன்றினின்று வீழும் அருவிகள் பலவற்றின் குளிர்ச்சியும் இனிமையும் பொருந்திய விருப்பந்தரும் நீர்நிலையின் ஒரு பக்கத்தில் ஒளிமிக்க செங்காந்தட்பூக்கள் மலர்ந்திருக்குமிடத்தில், இடி சினந்து தாக்குதலால் வலியழிந்த பாம்பினது சிறந்த மாணிக்கமணியி னொளிவிளக்கத்தில் கரிய கூந்தலையுடைய மெல்லியலாளின் களிப்புப் பொருந்திய கலவியின்பத்தை யடைவாயாக' வென்று கொள்க.

நாளை தினையே கண்ணினம்; ஆகவே, அங்கே அருகேயுள்ள இறும்பின் நீரொரு சிறை காந்தளவிழ்ந்த ஆங்கண், பாம்பின் மணிவிளக்கில், கூந்தல் துயில் பெறுகுவை யென்பது. இங்குப் பெய்துரைக்கப்பட்டன வெல்லாம் வருவித்துக்கொள்க. 'நெடுமென் பணைத்தோ' ளென்றது

புணர்ச்சிச் சிறப்பின் குறிப்பு மொழி. 'இருண்மென் கூந்த' லென்பது புறத்தே கண்டு நுகரப்படுஞ் சோலை யின்பத்தைப்போலவே தலைவியின் அகத்தேயுங் கண்டு நுகரப்படுவதோ ரின்பங் குறித்தது. இவ்விரண்டு குறிப்பு மொழிகளும் தலைவன் ஒருங்கு கலந்து மகிழ்தற்கு ஏற்பப் புறமும் அகமும் ஒத்திருந்தனவென் றுணர்த்தின. இறும்பு இளமரச்சோலையைக் குறிக்குமாறு "மஞ்ஞையாலு மரம் பயிலிறும்பின்"* என்னும் பெரும்பாணாற்றுப்படை யுள்ளுங் காணப்படும். 'மந்தியு மறியா மரம்பயி லிறும்பின்' என் றிங்கு வருதல் போலவே, "மந்தியு மறியா மரம்பயி லொருசிறை"† என்ற நற்றிணையிலும் வந்தது. 'இறும்பின் ஒரு சிறை ஆங்கண்' என்று மாற்றுக. 'தண்பல் அருவி' என்பதன்கண்ணுள்ள 'பல்' என்பதையும் நீருக்கே அடைமொழியாகக்கொண்டு மிகுதிப் பொருளுரைத்தலு மமையும். 'நீர்' 'கூந்தல்' என்பன ஆகுபெயர். துயில்-புணர்ச் சியைக் குறிக்க வந்தது. அஃது இடக்கரடக்கலென்ப. 'மென்றோட்டுயி'‡ லென்பர் நம் தெய்வப் புலவரும்

இச்செய்யுள், தோழி தலைவற்குப் பகற்குறி நேர்ந்து குறியிடங்கூறிய துறையாகும். அஃதாவது தழையுங் கண்ணியுங் கொணர்ந்து தன்னைப் பின்னின்று குறை யிரந்த தலைவற்குச் சேட்படுக்கும் உரைகளால் அகற்றி அணுகுவித்துப் பின்னர் அத்தழையினையேற்றுத் தலைவிக் குத் தந்து, அவள் குறிப்பினை யுணர்ந்துகொண்டு, மற்ற தற்குமேல் 'இன்ன இடத்திற்கு வந்தால் தலைவியைக் களவிற் கூடலா'மென்று தோழி குறியிடங் கூறலென்பது. இதன்கட் கூறப்படுங் குறியிடம் தலைவன் தலைவியர்தங் களவொழுக்கத்துக்கு மிகவும் இயைந்து நிற்பது வியந்து மகிழற்பாலது.

குறியிடம்:

அடுக்கிய மலைப்பக்கங்களும், இளமரச் சோலைகளும், குளிர்ந்து வீழும் அருவிநீர்க் குட்டங்களும், மலர்ந்து

---

* பெரும்பாண், சகரு † நற். கஉச.
‡ திருக்குறள், புணர்ச்சி மகிழ்தல், ௩.

மணங்காட்டுஞ் செங்காந்தட் பூஞ்செடிகளும், வேனிற் பருவத்து உச்சிப் பொழுதில் கருத்தொன்றிக் கலக்குங் காதன்மக்கட்கு ஒருங்கே சூழ்ந்துநின்று கழிபேருவகையினைப் பயந்து நிற்பனவா மன்றோ! மேலும்,

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள"*

என்னும் நம் நாயனார் திருமொழிக்கு ஏற்பத் தலைவன் இம் மலைச்சோலையி னகத்தே எழிலும் ஓசையும் ஊறலும் மணமும் உறவும் ஒருங்கே கனிந்து விளங்குந் தலைவியை ஐம்புலன்களாலும் நுகர்வானாதலின், அப்போதவன் உணர்ச்சிக்கு அகப்பொருளாய்த் தோன்றுந் தலைவி அவன்றன் ஐம்புலன்களாலும் நுகரப்பட்டு இன்பந் தருதல்போலவே, ஆங்கவனுணர்ச்சிக்குப் புறப்பொருளாய்த் தோன்றும் அம்மலைச் சோலையுந் தன்கண் உள்ள மயில் காட்சி, குயில் ஓசை, கனிச்சாறு, மலர்மணம், காற்றூறு முதலியவற்றால் அவன்றன் ஐம்புலன்களாலும் நுகரப் பட்டு இன்பந்தருமென்க.

## அகமும் புறமும் :

அகத்தே நுகரப்படும் இன்பத்தினைப் புறத்துள்ள பொருள்கள் இடைநின்று கெடுத்தலாகாது. அங்ஙனம் கெடுக்காம லிருத்தற்கு அப் புறப்பொருள்கள் அகப் பொருளி னியல்புகளோடு ஒத்து நிற்றல்வேண்டும். இங் ஙனம் ஒத்து நிற்கும் உண்மைகளெல்லாம் எமது புறப் பொருட் கட்டுரைகள் என்னும் நூலில் ஓரளவு விளக்கப்பட் டுள்ளன. அகப்பொருளியல்புகளோடு புறப்பொருளியல்பு கள் ஒத்து நிற்குமானால், அகத்தே நோக்கி அவ்வகப்பொரு ளியல்பு கண்டு இன்பம் நுகர்ந்தபடியாய் அதன்கட் பெயராது ஊறிப் படிந்திருக்குந் தலைவனைப் புறப்பொரு ளியல்புகளும் அவ் வகப்பொருளியல்புகளோடு ஒத்து நின்று அவனை அவ்வின்பத்தின்கண்ணேயே மேன்மேலும்

* திருக்குறள், ௧௧0௧.

படிவியாநிற்கும். தலைவன் ஒரோவொருகால் தனது உயிரியல்பினால் முன் படிந்துநின்ற இன்பத்தினின்றும் பெயர்ந்து புறத்தே நோக்குவனாயினும், அப்புறத்தேயும் அகத்தே தனக்கு இன்பந்தந்த இயல்புகளே நிகழக் காண்டலால், அவனுக்கு முன்இன்பஞ் சிதையு மாறில்லை. ஆகவே, எவ்வுணர்ச்சிக்கும் அகமும புறமும் ஒத்து ஓரியல்பினவாய் நிற்குமானால், அவ்வுணர்ச்சியினால் நுகரப்படும் இன்பந் தன்னிலையிற் சிதைவுபடாததோடு முன்னினும் முறுகி முதிர்ந்து நிற்குமென்பது பெறப்படுகின்றது.

பொழிலின் பொதுவியல்பு:

இங்கு ஐம்புலன்களாலும் நுகர்தரு பொருளாய் அகத்தே விளங்குந் தலைவியைப் போலவே புறத்தே விளங்குஞ் சோலையும் அவ்வைம்புலன்களாலும் ஒருங்கே நுகரப்படுஞ் சிறப்பியல்புகள் வாய்ந்திருக்கின்றதென்னும் உண்மை.

"ஆடன் மாமட மஞ்ஞை யணிதிகழ் பேடையொ டாடிக்
கூடு தண்பொழில்*"

"துயிலின் னிசை பாடுங் குளிர்சோலை"†

‡"கொக்கினிய கொழும் வருக்கை கதலிகமு
குயர்தெங்கின் குவைகொள் சோலை
முக்கனியின் சாறேழுகி§"

"மரவத்தொடு மணமாதவி மவ்வலது விண்ட
குரவத்தொடு விரவும் பொழில்$"

"புடைப்பாளையின் கழகின்னொடு புன்னைமாம் நாற்றம்
விடைத்தேவரு தேன்றல்"¶

* குவை - திரள்.
† திருஞான சம்பந்தர் தேவாரம், காழி, 'அறையும்பூம்,' ௫.
‡ " " திருக்கொடுங்குன்றம். ௨
§ " " திருமுதுகுன்றம், மெய்த்தாறு,' ௩.
$ " " திருக்கொடுங்குன்றம், ௭.
¶ " " வேணுபுரம், 'வண்டார்குழல்'

என்று திருஞான சம்பந்தப் பெருமான் அருளியதேவாரத் திருமொழிகளால் நன்கு பெறப்படுதல் காண்க.

காதலர்க்கு பேரா மகிழ்ச்சியினைப் பெருகுவிக்கும் இப்பொழிலினியல்பை. அக் காதலர்தங் கூட்டத்துக்கு மிகவும் பயன்படும் வகையில் வைத்துக் கூறுமிடத்து,

"சந்தனமுஞ் சண்பகமுந் தேமாவும் தீம்பலவும் ஆசினியும் அசோகமும்கோங்கும்வேங்கையும்குரவமும் விரிந்து நாகமுந் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங் கமழ்ந்து, பாதிரியும் பாவை ஞாழலும் பைங் கொன்றையொடு பிணி யவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னைகமும் முறுக்கொடு முகை சிறந்து வண்டறைந்து, தேனார்ந்து, வரிக்குயில்களிசைபாடத் தண்டென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில்."*

என்று தமது தீவிய செழுந்தமிழ் நடைகொண்டு ஆசிரியர் நக்கீரனார் விருப்பம் விளையுமாறு மிக அழகாகக் கூறுகின்றார். இவ்வாற்றாற் காதலர் தாங் கலந்து மகிழ்தற்குரிய பொழிலினியல்பு பொதுவகையில் நன்கு விளங்கிற்று. இனி இப் பொதுவியல்புகளோடு அக் காதன் மக்களின் கூட்டத்துக்கும் பகற்குறி யிடமாய்ப் பயன்படக்கூடிய குளிர்ம் பொழிலின் சிறப்பியல்களுஞ் சில உள.

அதன் சிறப்பியல்பு:

தலைவியோடு கூடுங்காலம் பகற்கால மாதலாலும் அப்பகற்காலத்திலும் வெயிலுறைப்பேறிய உச்சிக்கால மாதலாலும், அக்கூட்டத்துக்குக் குறிக்கப்படும் பொழில் பெரும்பாலும் நீர்த்துறையருகே நிற்றல்வேண்டும். இங்குக் குறிக்கப்படும் நீர்த்துறை பலரும் வந்து கூடும் பொய்கைபோல்வன வாகுமாயின், பொழில், அப் பொய்கைத் துறைக்கு வேறாயிருக்கும். பொழிலிலேயே ஒரு சிறு அருவியோ ஆறோ இருக்குமாயின் அஃது இன்னும் நல்லது, பெரும்பாலும் அப்பொழில் பிறர் நுழைதற்கு ஏதுவில்லாததாகவே இருக்குமென்க. இவை தாம்.

---

* இறையனாரகப்பொருள், உ.

*"ஊர்க்கு மணித்தே பொய்கை, பொய்கைக்குச்
சேய்த்து மன்றே சிறுகான் யாறே,
இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்
துன்னல் போகின்றாற் பொழிலே, யாமெம்
கூழைக் கெருமண் கொணர்கஞ் சேறும்
ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே"†

என்னும் குறுந்தொகைச் செய்யுளால் விளங்கும். அதனினும் மந்தியும் ஏறியறியாதவாறு அத்துணை நெருக்கமாய்க் கிளைகள் பின்னி நின்று நிழல் பயக்குஞ் சோலையாமாயின், அவர்க்கது பந்தரிட்டாற்போன்று தண்ணென்றிருக்கும். கதிரவனுடைய கதிர்க்கம்பிகள்கூட அதன்கண் நுழைதற்கு ஏலாதவாறு, அத்துணைச் செறிவாக அது தழைபரப்பிக் கவிந்து கிடக்குமென்பார் திருக்கோவையாசிரியர். அம்மட்டேயன்றிச், சோலையின் வெளியே உலாவுவார்க்கு, அதன் உள்ளே யிருக்குந் தலைவன் தலைவியர் தோன்றாதவாறும், உள்ளே யிருக்குந் தலைவன் தலைவியர்க்கு மட்டும் வெளியே யுலவுவார் தோன்றுமாறுமாக, இத்துணை வசதியா யமைந்த இருண்மிக்க சோலையென்பார், இறையனாரகப் பொருளுரையாசிரியர்.

"வண்டும் தும்பியும் வரிக்கடைப் பிரசமும் கொண்டு புணர் நரம்பென்றும் மூரன்று, ஐந்துவாயிலானுங் கொள்ளப்படுந் துப்புரவினைத் தன்னகத் துடைத்தாய்ப், பலவகைப்பட்ட மரங்களானும் பொலிவுடைத்தாய்ப் புறத்தார் அகத்தாரைக் காண்பதரிதாய், அகத்தார் புறத்தாரைக் காண்பதெளிதாய், விழைவு விடுத்த விழுமியோரையும் விழைவு தோற்றுவிக்கும் பண்பிற்று"‡

என்று பின்னும் அவர் கூறும் பொழிலியலுரைப் பகுதி மென்மேலும் விளக்கத்தினையும் வியப்பினையும் மகிழ்ச்சியினையும் விளைவியா நிற்கின்றது. இனி இஃது கடற்கரைச் சோலையாயின், அங்கு ஞாழலுந் தாழையும் பொழிலினிடையிலும் பக்கங்களிலுமாக நிரம்பி நின்று, காத

* துன்னல் போகின்று-நெருங்குதல் ஒழிந்தது. கூழைக்கு-கூந்தலுக்கு.

† குறுந்தொகை, ககந.    ‡ இறைய, கஅ.

லர்க்கு மிக்க மணம் வீசி மகிழ்வினைத் தருமென்று அறிதல்வேண்டும். இதனைத் தன்கட் சூழ்ந்த இருட்டினுற் கரிதாய்த் தோன்றும் கானற் சோலைக்கும், அதன்கட் பரவிப் பரந்து கிடக்கும் வெண்மணற் பரப்புக்கும் முறையே கண்ணனது கருநிறத்தையும், அவன் முன்னோன் வாலியோனது வெண்ணிறத்தையும் உவமமாகக் கொண்டு,

*"மாயனுந் தம்முனும் போலே மறிகடலுங்
கானலுஞ்சேர் வெண்மணலுங் காணுயோ—கானல்
இடையெலா ஞாழலுந் தாழையு மார்ந்த
புடையெலாம் புன்னை புகன்று"†

என்று வருந் திணைமாலை நூற்றைம்பதின் நெய்தற்றிணைச் செய்யுளால் அறிந்துகொள்க.

## திணை மயக்கம்:

இனிப், பகற்குறிக்கட் சென்று தலைவியைக் கூடுந் தலைவனது புணர்ச்சி யொழுக்கங் குறிஞ்சித் திணைக்கண் வரல் வேண்டுமாக, மற்றிங்கு நெய்தற்றிணைக்கண் வந்தவாறென்னையோ வெனின். இங்கு நெய்தற்றிணை யென்றது நெய்தலொழுக்கமன்று; நெய்தல் நிலமேயாம். அந் நெய்தற்றிணை நிலத்தில் குறிஞ்சித்திணை யொழுக்கம் நிகழ்ந்ததென்று அறிதல் வேண்டும். ஒரு திணைக்குரிய நிலத்தில் அந்தத் திணையொழுக்கமேதான் நிகழ்தல் வேண்டுமென்னும் வரம்பு ஏதுமில்லை. அங்ஙனமுமொரு வரம்பிருக்குமாயின், அஃது உலகவியற்கையோடு முற்றும் மாறுயதேயாகும். ஏனென்றல், குறிஞ்சி நிலமல்லாத முல்லை மருதம் நெய்தல் முதலான ஏனை எல்லா நிலங்களிலும் வாழும் ஆண் பெண் பாலார், தமக்குள் கூட்டம் வேண்டும்பொழுதெல்லாம் அவர் தத்தம் வாழ்நிலங்களை விடுத்து அக்கூட்டம் நிகழ்தற்குரிய குறிஞ்சி நிலத்துக்கே வரற்பால ராதலாலும், அங்ஙனமவர் வருதலென்பது

---

* தம் முனும் - தமையனும்; வாலியோனும்.

† திணைமாலைநூற். நெய்தல். ௨௭.

எவர்க்குமே எப்பொழுதும் இயலாத தொன்றாகலானுங் குறிஞ்சி நிலத்திலேதான் அக் குறிஞ்சி யொழுக்கத்தினை நிகழ்த்துதல் வேண்டுமென்பது இயற்கையோடு பொருந்தாத ஏலா உரையாமென்க. இவ்வுண்மை.

"இறந்துபாட்டு அச்சத்திஞல் இரவுக்குறி நேரும். நேர்ந்தாள், தலைமகற்கு நின்ஞட்டார் என்ன பூவினர் என்ன சாந்தினர் என்ன மரத்தின்கீழ் விளையாடுவார் என்னும். அது கேட்டுத் தலைமகள் முன்னெல்லாம் எனக்கு மறுத்தாளன்றே, மறுத்தாள் இது சொல்லிற்று, ஒரு காரணம் நோக்கி யென உணர்ந்து, தானும் நின்ஞட்டார் என்ன பூவினர் என்ன சாந்தினர் என்ன மரத்தின்கீழ் விளையாடுவது என்னும். என்றக்கால் தோழி யாம் காந்தளும் வேங்கையுஞ் சூடுதும். சந்தனச்சாந்து பூசுதும், பிண்டிமரத்தின்கீழ் விளையாடுவ தென்னும். குறிஞ்சி நிலமாகலின் இவ்வகை சொல்லும்; அல்லா நிலத்துக்கும் அவற்றுக்குத் தக்கவாறு சொல்லும்"*

என்று இறையனூரகப் பொருளுரையாசிரியர் கூறுதலாலும் பெறப்படும்.

அங்ஙனமானல், அவ் வாண் பெண் கூட்டத்துக்குக் குறிஞ்சி யொழுக்கமென்பதே பெயராமென்றும், அவ் வொழுக்கத்துக்குக் குறிஞ்சி நிலவமைப்புகளே மிகவும் பொருந்தி நின்று இன்பம் விளைப்பனவாமென்றும் அகப் பொருணூல்களிற் கூறப்பட்டவா றென்னை யெனின். குறிஞ்சி நிலவமைப்புகளே காதன் மக்களின் கூட்டவியல் புக்கு மிகவும் ஒத்து நின்று அக்கூட்டத்தின் பயனை சிறந்த இன்பத்தினை மிகுத்து வளர்க்கும் ஆரா இயல்பின வாமென்பது இயற்கையோடு பொருந்திய முழுப்பொருத்த மான உண்மை யுரையேயாயினும், அவ்வுண்மை பற்றி அகப்பொருணூல்களிலெல்லாம் குறிஞ்சி நிலத்தின்கட் குறிஞ்சியொழுக்க நிகழ்ச்சி கூறப்பட்டது கொண்டு மற்று அந்நிலத்தின்கண் அவ்வொழுக்கமேதான் கட்டாயம் நிகழ்ந்திடல் வேண்டும்; அஃதன்றி ஏனைய எவ்வொழுக் கங்களுமே ஆங்கு நிகழ்தலாகாது என்று அந்நூல்கள் விதித்தனவென்பது பொருந்தாது. இங்ஙனமே நெய்த

* இறைய, கஅ.

னிலத்தில் நெய்த லொழுக்கமும், மருத நிலத்தில் மருத வொழுக்கமும், ஏனை நிலங்களில் ஏனை யொழுக்கங்களும் நிகழ்தல் சிறப்பென்று அவ்வகப்பொருணூல்கள் சிறப்புக் கூறியவா றன்றி, மற்று அவ்வவ்வொழுக்கங்களும் அவ்வந் நிலங்களிலேயேதாங் கட்டாயம் நிகழ்தல் வேண்டுமென்று விதி கூறியவா றன்றென்க.

அங்ஙனமும் ஒரு விதியிருக்குமாயின், மேலே காட்டிய இறையனரகப்பொருளுரைப்பகுதியில்,

"குறிஞ்சி நிலமாகலின் இவ்வகைசொல்லும். அல்லா நிலத்துக்கும் அவற்றுக்குத் தக்கவாறு சொல்லும்"

என்று அதன் ஆசிரியர் நக்கீரனர் உரைநிறுவா ரன்றே! இங்ஙன மிவர் இங்குரைத்தவாறே களவுக் கூட்டம் முல்லை முதலான ஐந்து நிலங்களின்கண்ணும் நிகழ்ந்திடுமென்று, 'ஐந்திணையுள்ளுங் களவு வேறன்றென்று முதல் நூற்பாவுரையிற் கூறுதலுங் காண்க. இவரோ டொப்பவே ஆசிரியர் நச்சினர்க்கினியரும்,

"ஒரு நிலத்து ஓரொழுக்கம் நிகழுமென நிரனிறுத்துக் கூறிய ஒழுக்கம், அவ்வந்நிலத்துக்கே உரித்தாயொழுகாது தம்முண் மயங்கி வருதலும் நீக்கப்படா"*

என்றும்,

"இவை ஓரொழுக்கம் நிகழ்தற்கு உரியவிடத்தே ஓரொழுக்கம் நிகழ்ந்தன"

என்றுந் தொல்காப்பிய அகத்திணையியலில் உரைகூறுதலும் இங்கு அறியற்பாலது.

ஆதலால், இங்குத் திணைமாலை நூற்றைம்பதின்கண், நெய்தற்றிணை நிலத்திற் கானச்சோலை நடுவண் பகற் புணர்ச்சிக்குக் குறியிடங் கூறிவரும் நெய்தற்றிணைச் செய்யுள் அகப்பொருளிலக்கணத்திற்கு மாறுபட்டுப் பிழையாமாறில்லையென்று உணர்ந்துகொள்க. இங்ஙனமே நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு முதலான ஏனையகப்

---

* தொல். அகத். கஉ.

பொருள் நூல்களிலுந் தலைவன் தலைவியரின் கூட்டவியல் பிணையுணர்த்துஞ் செய்யுட்கள் நெய்தற்றிணையி லமைந்து வருதல் இங்கு நினைவுகூரற்பாலது.

மேலும், நெய்தற்றிணைநிலமே சோலைகளும் நீர்த் துறைகளும் மணன் மேடுகளும் மலைக்குவடுகளும் மண மலர்ச் செடிகளும் பூங்காற்றுஞ் சூழ உடைத்தாய்ப் புணர்ச்சியொழுக்கம் நிகழ்தற்குரிய குறிஞ்சி நிலத்தோடு பெரிதொத்துத் திகழ்ந்து தன்கண் அவ்வொழுக்கம் நிகழப் பெறுதலின், அகப்பொரு ளாசிரியன்மா ரெல்லாரும் பெரும்பாலும் இந்நெய்தற்றிணையைக் குறிஞ்சித்திணைக்கு இரண்டாம்படியில் வைத்து அதன்கண் அக்குறிஞ்சி யொழுக்கத்தினைக் கூறிச் செய்யுளியற்றுவாராயினர். இந் நெய்தற்றிணையை யடுத்துக் குறிஞ்சியொழுக்கம் நிகழ்தற் சிறப்புடையவாவன முறையே மருதமு முல்லையு மாகும். இனிப் பாலை நிலத்தின்கண்ணும் அவ்வொழுக்கம் ஓரோவிடத்து அருகிவரும். இதனை,

* "அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதி யாயின் என்னதூஉம்
அறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்த மார்பே"†

என்று இவ்வேறுபாடென்னென்ற செவிலிக்குத் தோழி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றலென்னுந் துறைக்கண் வரும் ஐங்குறுநூற்றுச் செய்யுளிற் காண்க.

இங்ஙனம் வருவனவெல்லாம் நெய்தலிற் குறிஞ்சி, முல்லையிற் குறிஞ்சி, மருதத்துக் குறிஞ்சி, பாலையுட் குறிஞ்சி யெனப்படும். இவ்வாறு ஒருநிலத் தொழுக்கம் மற்றொரு நிலத்தின்கண் நிகழ்தல்,

" திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குத லின்றென மொழிப
புலனன் குணர்ந்த புலமை யோரே"‡

* கண்ணை - கண்ணையுடையையாய்.

† ஐங்குறு. ருகூகூ ‡ தொல்காப்பியம், அகத்திணையியல், கஉ.

என்று ஆசிரியர் தொல்காப்பியனாராற் றிணைமயக்கமென்று கொள்ளப்படும். அவ்வகத்திணையிய னூற்பாவினை அடுத்துப் புணர்தல் பிரித லிருத்த லிரங்க'லென் றுவரும் நூற்பாவுக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் தாமெழுதுமுரையில், "நான்கு நிலத்தும் புணர்ச்சி நிகழும்" என்று மிகவுந் தெளிவாக நிறுத்துரைத்தலால்,

> "மாயவனுந் தம்முனும் போலே மறிகடலுங்
> கானலுஞ்சேர் வெண்மணலுங் காணாயோ"

என்று நெய்தற் சோலையிடத்துப் பகற் குறியிடம் வகுத்துரைத்து வந்த திணைமாலை நூற்றைம்பதின் செய்யுட்கண், இனி யேதும் ஐயுறுதற்கு ஏதுவில்லை யாயிற்று. இனி இதன் வாயிலாகவே, நிலம் எந்நிலமேயானாலும், அங்கங்கும் நிகழப்பெறும் ஒழுக்கங்கொண்டுதான் அவ்வவ்வொழுக்கம் இன்ன இன்ன திணையென்று கூறல்வேண்டுமே யல்லாமல், ஓரொழுக்கம் நிகழப்பெறும் நிலம், அவ்வொழுக்கப் பெயர்கொண்ட அந்நிலமாகவேதான் இருத்தல் வேண்டுமென்ற வரம்பில்லை யென்பதும், நிலம் நெய்தல் நிலமாயினும், அங்கும் கூட்டம் நிகழுமாயின், அவ் வொழுக்கங் குறிஞ்சியொழுக்கமே யாகுமல்லது நிகழ்ந்த நிலம் பற்றி அது நெய்தலொழுக்கமாமாறில்லை யென்பதும் அறியற்பாலன.

## பளிங்குப்பாறை :

இனி, பந்தரிட்டாற் போன்று தண்ணிழல் பயந்து அருவிநீருஞ் செங்காந்தட் பூக்களுமுடைத்தாய்ப் புறத்தார்க்கு அகத்தே ஏதுந் தெரியாதவாறு கிளை பின்னி மிக நெருங்கிய பூம்பொழிலென்று மேலே கூறப்பட்ட பகற்குறிச் சோலையின் சிறப்பியல்புகளோடு, அச்சோலையின் நடுவண் பளிச்சென்று ஒரு பளிங்குப் பாறையு மிருக்குமென்றார் திருச்சிற்றம்பலக் கோவையாசிரியர். கரியபொழிலின்கண், கதிரவனும் நுழையாவிருளில் ஒரு பளிங்குப் பாறையிலிருந்து அவ்விருளைச் சீத்து வேண்டுமளவு ஒளிகாட்டி விளங்குமியல்பினை, இருட்சோலையினைக் கரிய

வானகவும் அக்சோலையி னடுவணிருந்து ஒளிகாட்டும் பளிங்குக் கல்லினை வெண்மதியமாகவுங் கொண்டு,

"ஒரு கரிய பொழில், புறமெங்கும் கதிரோன்றான் சென்று நுழையாத விருளாய், நடுவண் வளவிய வான்மீன்போலத் தேன்கள் நுழையும் நாகப்பூ மலர்ந்து, திகழும் பளிங்கால் திங்கட் கடவுள் வானிடத்து வாழ்வை யொழிந்து கானிடத்து வாழ்தலைப் பெற்றாற்போலத் தனதெழிலைப் புலப்படுத்தும்".

என்னும் அழகிய பொருளை வைத்து,

*"வானுழை வாளம் பலத்தரன் குன்றென்று வட்கிவெய்யோன்
றானுழை யாவிரு ளாய்ப்புற நாப்பண்வண் டாரகைபோற்
றேனுழை நாக மலர்ந்து திகழ்பளிங் கான்மதியோன்
கானுழை வாழ்வுபெற் றாங்கெழில் காட்டுமோர் கார்ப்
[பொழிலே"†

என்று கூறுமிட்டத்து மாணிக்கவாசகப்பெருமான் அப்பகற்குறிச்சோலையினியற்கை யிருப்பினை ஓவியமெழுதினாற் போல விளக்கிக் காட்டியவாறறிக.

## மணி விளக்கு :

இவ்வாறு இருட்சோலை நடுவண் பளிக்குப் பாறையிருந்து ஒளிகாட்டுமாயினும், அங்குக் காதலர்தம் நலம் பயக்குங் கூட்ட நிகழ்ச்சிக்கு ஒருமணிவிளக்கு மிருப்பின் நன்றாமாதலின், அங்ஙனமொரு மணிவிளக்கு மவண் உண்மையை, 'எறிந்த உரனழி பாம்பின் திருமணி விளக்கிற் பெறுகுவை' என்று கூறிற்று அகநானூறு.

## அறிவழிந்த காதலர் :

இனி, இங்ஙனமெல்லாம் அகப்பொருளாசிரியன்மாராற் பகற் குறியிடத்துக்கு ஏற்றதென்று வகுத்துரைக்கப்பட்டுப்

"பாலுந் துறு திரளாயின பரமன் பிரமன்றான்
போலுந்திற லவர்வாழ்தரு பொழில்"‡

---

* வட்கி - மனங்கூசி.

† பேராசிரியருரை, திருச்சிற். கககூ.

‡ தேவாரம், திருப்புள்ளமங்கை. க.

என்று திருஞானசம்பந்தப்பெருமான் கூறியவாறு வானவரும் விரும்பு நிலையிற்றிகழும் அவ்வினிய சோலையினடுவில், அச் சோலையி னியலழகினை உணர்ந்துபார்த்து மகிழவல்ல அறி வாற்ற லமைந்த காதன் மக்கள் அவண் பிறங்கித், தமக் குள் இன்பந் தந்துகொள்வார்களாயின், ஆயிடை அவர் எய்துந் தூய இன்பத்தின் கழிபெருஞ் சிறப்பு உரையால் உணரப்படாததாமன்றே! தலைவி தலைவனுக்குந் தலை வன் தலைவிக்குமாக இன்பந் தந்துகொள்ளுமிடஞ் சோலை யிடமாயின், அஃதவர்க்கு அவ்வின்பத்தினை மேன்மேலும் பெருக்கித் தரும் உண்மையினை,

*" திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
இருகய வினைவிழியே யெனையிடர் செய்தவையே"†

என்று ஆசிரியர் இளங்கோவடிகளும்,

‡"கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
யுகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே
மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே
ஆடையிலே யெனைமணந்த மணவாளா§"...

என்று இராமலிங்க அடிகளுங் காதற் கனிவு விளங்க மிகவும் அழகாகத் தெளித்துக் கூறுதல் காண்க.

**நான்காங் கூட்டம்:**

தன்னைப் பின்னின்று இரந்த தலைவனுக்குத் தோழி இவ்வகையானதோ ரருமைக் குறியிடங்கூறிப் பகல் வரு மாறு செய்து, பின்பு தலைவியிடம் வந்து அவளை அந்நேரத் திற் 'புனத்தின்கட்போய் ஊசலாடி அருவியேற்று விளை

---

* விரை - மணம். மிடைதரு - செறிதலுடைய. மரு - மணம்.
† சிலப்பதிகாரம், கானல்வரி, ௯௫.
‡ ஆடையிலே - விளையாடுகையிலே.
§ திருவருட்பா - ௬ : அருள்விளக்கமாலை, ௨.

யாடுவோம். போதுவாயாக' வென்றழைத்து ஆயத்தோடுங் கூட்டிக்கொண்டு ஆடிடம் படர்ந்து செல்வாள். சென்று தம் மோடு உடன் சூழ்ந்து வந்த ஆயமகளிரையெல்லாந் தினை காக்குமாறு ஏவித், தலைவியும் யானும் திடுமென வந்து உங்கள் காவற் செவ்வியினைக் கண்டிடுவோமாகலின், நீவி ரெல்லாரும் உங்கள் காவலிற் சிறிதும் பிழைத்தலாகா தென்று தம்மோடு உடனும் பின்னும் பொழிலிடம் வராத வாறு அவர்களைக் காவலிலேயே கண்ணுங் கருத்துமா யிருப்ப உரைத்து நிறுத்தி, 'யாம்போய் மயிலாடல் காண்பே'மெனத் தலைவியைப் பொழினடுவண் குறியிடத் துக் கொண்டு சேரும் தோழி தலைவன்* வரவு கண்டதும் 'நீ இவ்விடத்திலேயே இரு; யான் போய் நின் குழற்குப் பூக்கொண்டு வருவேன்; அவ்விடம் வேய்கள் முத்துதிர்த லான் நின் மெல்லடிக்கு ஆகாதென்று கூறித் தலைவியை அவ் விடத்துய்த்து நீங்குவள். ஈதிங்ஙனந் திருக்கோவை யாரிற் கூறப்பட்டதாக, இறையனாரகப்பொருள், 'அவ் விடம் தெய்வமுடைத்து; நின்னால் வரப்படாது' என்று கூறித் தலைவியைத் தோழி இடத்துய்த்து நீங்குமென்று கூறுகின்றது.

தோழி நீங்கியதும் அங்குத் தனித்து நின்று எழில் காட்டுந் தலைவியைத் தலைவன் அண்மி எதிர்ப்பட்டு ஆரா மகிழ்ச்சியிற் றோய்ந்து அவளை மருங்கணையப் பார்ப்பான். இக்கூட்டந் தலைவனுக்கு நான்காங்கூட்டமாயினும் ஈங்குத் தலைவியின் குறிப்பறியாது மருங்கணைதல் முறையாகாமை யின், அவள் குறிப்பினை அறியும் பொருட்டு அவளை உவந்து கூறுவான். இக் கூற்றுத் திருக்கோவையில், 'இப் பளிங்குப் பாறையை மாசுணப் பள்ளியாகவும், என்னைத் திருமாலாகவும் நினைந்தோ நீ இப்பொழிற்கண் வந்து நின் றது' என்றும், திருக்குறளில்,

"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை."*

என்றுங் காணப்படும்.

---

* திருக்குறள், ககக௫.

தலைவனுக்கு இப் பகற்குறிக்கூட்டம் நான்காங் கூட்டமாதல், தலைவனது குறையைத் தோழி தலைவிக்குக் கூறிப் பகற்குறிக்கு அழைக்கும்பொழுது அவள் நாண் மிகுதியால் உடம்படாது நின்றக்கால், 'நீ உன் தலைவனோடு இதற்கு முன் மூன்றுமுறை கூடியிருக்கு முண்மை எற்குத் தெரியு'மென்று குறிப்பானுணர்த்தி அவளை நாண்களைந்து உடம்படுவிக்கின்றமைகொண்டு தெளியப்படும். இதனை,

* "குறைந்தவட் படரினு மறைந்தவ ளருகத்
தன்னொடும் அவளொடும் முதன்மூன் றளைஇப்
பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்"†

என்று ஆசிரியர் தொல்காப்பியனார் பின்னோரிடத்திற் றெளியக் கூறுவர். முதன் மூன்று கூட்டமென்பது இயற்கைப் புணர்ச்சியும், பாங்கன் வாயிலாய்ப் பெற்ற இடந்தலைப் பாடும், தோழியை மதியுடம்படுத்தற்குச் சென்றபொழுது, அவள் தலைவன் தலைவியர்தங் குறிப்புணர்ந்து கொண்டு அவர் தமக்குட் கூட்டமுண்மையை நாண நாட்டத்தின் குறிப்பினால் அறிதல் வேண்டித் தலைவியை நோக்கி நீ போய்ச் சுனையாடிவாவென, அவளும்போய் அப்போது தன் தலைவனுடன் தலைப்பெய்துவந்த கூட்டமுமாகும். இம் மூன்றினையும் அடுத்ததே இப்பகற்குறிக் கூட்டமாம். தலைவன் தோழியை மதியுடம்படுக்கச் சென்றபோது, தலைவி அவனோடு தலைப்பெய்துவந்த உண்மை,

"நீபோய்ச் சுனையாடிவாவென்ன, அவளும் அதற்கிசைந்து
போய் அவனோடு தலைப்பெய்துவர அக் குறியறிந்து
அவளை வரையணங்காகப் புனைந்து வேறுபடுத்துக் கூறாநிற்றல்"‡

"வேறுபடுத்துக் கூற நாணல் கண்டு, சுனையாடினால் இவ்வாறு அழிந்தழியாத குங்குமமும் அளகத்தப்பிய தாதும் இன்றிறமுந் தருமாயின் யானுஞ் சுனையாடிக் காண்பேனெனத் தோழி தலைமகளோடு நகையாடா நிற்றல்"§

"சுனையாடல் கூறி நகையாடா நின்ற தோழி, அது கிடக்க நீயாடிய அப் பெரிய சுனைதான் கண் சிவப்ப வாய் விளர்ப்ப அளி தொடரும் வரைமலரைச் சூட்டவற்றோ சொல்வாயாக வெனப் 'புணர்ச்சி உரையாநிற்றல்'$

---

* படரினும் - பின்பற்றினும். பின்னிலை - பின் நின்று இரத்தல். † தொல். கள. உரு. ‡ திருச்சிற். சு அ.
§ திருச்சிற். சுகூ. $ திருச்சிற். எ0.

என்று பேராசிரியர் திருக்கோவையாரிற் கூறும் விளக்க உரைகளால் நன்கு துணியப்படும்.

இனி, உவந்து கூறிய தலைவனின் உவப்புரைகட்கு நாணித் தலைவி கண்புதைத்து ஒருகொடியினொதுங்கி ஒல்குதலும், இவட்கேதோ இடையூறுற்றதென் றெண்ணினாற்போல மேற்காட்டி, மற்றவ் விடையூற்றினைப் பரிந்து களைதற்கு அருகே செல்வதுபோற் பதறிச்சென்று, தலைமகன் அவள் தோண்மரீஇ நலந்துய்ப்பன். அவட்கும் அது வாயிலாக நாண்கழன்று வேட்கை வெளிப்பட அந்நிலையினின்று அவன் நலந்துய்ப்பள். இங்ஙனம் மருங்கணைந்து இம் மருங்கணைதலால் விளைந்த தலைவியின் வேறுபாட்டுக் கோலத்தைத் தலைவன் திருத்தி முன் தோழி செய்துவைத்ததுபோலவே செய்து, 'இவ்வாறு நாம் பகற்குறியிற் றலைப்பட்டது நின் தோழி செய்த கோலமேயாகு மாதலால், அதுபற்றி நீ ஏதும் வருந்தாதே' யென்று பாங்கியறிந்தமை விளக்கிப் பாங்கியறிவுரைத்தும், 'இனி நமக்கொரு குறைவில்லை'யென உண்மகிழ்ந்துரைத்தும் அவளை ஆயத்துய்த்து நீங்கி நிற்பான்;

பின்பு தலைவி பூக்கொய்து நின்றாளாக, அச் செவ்வி பார்த்துப் 'பூக்கொணர்ந்தே'னெனத் தோழி வந்து கூடி அவளை ஆடிடம் புகுத்தி ஆயத்தொடு சேர்த்துவிட்டுத் தலைவன்பால் வந்து, 'இன்றிங்கிருந்து யாங்களுண்ணுங் கிழங்கையுந் தேனையும் நீங்களுமருந்தி நாளைப் போகலா'மென்று ஒப்புரவு கூறுவள்.

## வரைவு கடாவுதல்:

இனித் தலைவனோடு தோழிக்கு இங்குச் சில உரையாடல்கள் நிகழும். அஃதாவது இனியும் இவ்வாறெல்லாம் களவிலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணஞ் செய்து கொள்ளல் வேண்டுமென்று தலைவனை அவள் வேண்டிக்கொள்வதாகும். முன்பெல்லாந் தலைவன் தோழியைக் குறையிரந்தானாக, பகற்

குறிப்புணர்ச்சியின் பின் தோழி தலைவனைக் குறையிரப் பாளாயினள். இஃது உலகியல் வழக்கமுமாம்.

" புணர்ந்தபின் அவன்வயின் வணங்கற் கண்ணும் "*

என்று தோழி தலைவனைப் புணர்ச்சியின் பின் வணங்கி வேண்டிக்கொள்ளுமுறையினைத் தொல்காப்பியனாருங் கூறினார். இவ்வாறு மணஞ்செய்துகொள்ளுமாறு கேட்டலை, 'வரைவு கடாவுத' லென்பார் அகப்பொருளாசிரியன்மார். இவ் வரைவுகடாத லென்பது பற்பல ஏதுக்கள் காட்டிக் கடாவப்படுதலின், அது பலவாம்.

தலைமகட்குப் பருவம் வந்து நாள் நீண்டமையின் இனியும் மணஞ் செய்து கொள்ளாது களவின் வருதல் ஆகாதென்று முதலிற் பருவங் கூறி வரைவு விலக்குவள். அஃதறிந்த தலைமகன் தலைவியை மிக்குப் புகழ்ந்து, அவளுடைய செம்மையியல்புகட்கு நாள் நீளலால் ஏதம் இழுக்கில்லையென்று வரைவுடம்படாது மிகுத்துக் கூறினனாக, 'எங்கள் தாய்தந்தையர் கானவர், யாங்களும் புனங்காப்போருஞ் சிலர், நீங்கள் வரைவு வேண்டீர்களாயின் எங்களைப் புணர்ந்து கூறல் வேண்டா'மென்று உண்மை கூறி வரைவு கடாதலும், நீங்கள் விரைவில் வரைந்துகொள்ளவில்லையென்று தலைவி வருந்துகின்றாள்; வரைவென்று சொன்னால் நீங்கள் வருந்துகின்றீர்கள்; உங்களிருவர்க்குமிடையே நின்று யான் வருந்துகின்றேனென்று தன் வருத்தங் கூறி வரைவுகடாதலும், 'எங்கள் தாய்மார் இவட்குப் பருவம் வந்து நாளாயினமையின், மற்றஞ்சி இனி யார் வந்து கேட்டாலும் ஏதும் மறுத்துரையாமலே மணஞ் செய்து கொடுத்துவிடல் வேண்டுமென நினைக்கின்றார்க' ளென்று தாயச்சங்கூறி வரைவு கடாதலும், 'நேற்றே எம் தாய்மார் தலைவியின் முதிர்பருவ நிலையினை உற்றுநோக்கி இனிமேல் மலைப்பக்கஞ் சென்று விளையாடல் வேண்டா மென்று கூறினராதலின், ஒருகால் எங்களை இல்லத்திலேயே செறித்து நிறுத்திவிட்டாலும் நிறுத்திடுவ'ரென்று

* தொல். கள, உங.

இற்செறிவறிவித்து வரைவுகடாதலும், 'எங்களுறவிற் சிற்சிலருந் தலைவியை மகட்பேச நினைத்திருக்கின்றார்க'ளென்று தமர் நினைவுரைத்து வரைவு கடாதலும், நீங்கள் திருமணவேற்பாடுகளெல்லாஞ் செய்துகொண்டு வரைதற்கு விருவீர்களாயின், எங்கள் தமர்களும் மிக்க அன்போடு உங்களை எதிர்கொள்வார்க'ளென்று எதிர்கோள்கூறி வரைவுகடாதலுஞ் செய்வள்.

இனி, இம்மகளிரிருப்பது முல்லைநிலமாயின், 'எங்கள் ஐயன்மார் தலைவியின் பருவமுதிர்ச்சி கண்டு விடையினைத் தூண்டிவிட்டனர்; இனி யாது நிகழுமோவறிகிலே'னென்று ஏறுகோள் கூறித் தோழி வரைவு கடாவுவள். ஏறு தழுவி அதனை அடக்கிடுவானுக்குத் தலைவியை மணஞ் செய்து கொடுப்பது முல்லை நிலத்தார்க்கு மரபு. இதனை,

"படையார் கருங்கண்ணி வண்ணப் பயோதரப் பாரமுநுண்
இடையார் மெலிவுங்கண் டண்டர்க ளீர்முல்லை வேலியெம்மூர்
விடையார் மருப்புத் திருத்திவிட் டார்..."*

என்னுந் திருக்கோவை யுரையினாற் கண்டுகொள்க.

இன்னும், 'அயலவர் நாளைக்குத் தலைவியைப் பொன் புனைந்து மணமுடித்துக் கொள்வார்களாமே; ஆ! இதற்கு வினையேன் என் செய்வேன்,' என்று தலைவன் முன்பாகவே தனக்குத் தானே நோவதுபோல முன்னிலைப் புறமொழியாய் அயலுரை யுரைத்து வரைவு கடாதலு முண்டு. மேலுந் தலைவியுந் தோழியுமாக இருக்கும்பொழுது தலைமகன் அங்கொரு பக்கத்து மறைந்து நின்றனனாக, அவன் கேட்குமாறு 'ஆ, தினைப்புனங் கொய்யப்படுமென்று இவ்வேங்கை மரமும் ஒருகுறி காட்டுகின்றது. இனி நமக்கு இத்தினைப் புன விளையாட்டுக்கூட இல்லை,' என்னும் உரையினால் தோழி தலைவிபாலுரைப்பதுபோற் காட்டித் தலைவன் எவ்வாறுதான் இனிக்கூடுவனோ வென்னுங் கருத்துத் தேற்றித் தினைமுதிர்வுரைத்து வரைவுகடாதலும், பின்பு தலைவன்பாலெதிர்ப்பட்டு இனி எங்கட்குத் தினைப்புனங் காவலில்லை

* திருச்சிற். ௧௩௬.

யாதலின் நீங்கள் இனிப் பகல் வரல்வேண்டா மென்று பகல்வரல் விலக்கி வரைவுகடாதலும், இங்ஙனம் கடாயவள் மறைந்து நின்று தினையோடு வெறுத்துக் கூறுவதுபோலத் "தலைவனை எதிர்ப்படற் பொருட்டு இத் தினையை வித்தி விளைத்துக் காத்தேமாக, இஃதெமக்குத் தீதே புரிகின்ற' தென்று தினையொடு வெறுத்து வரைவுகடாதலும், 'வேங்கை மரமொன்று இங்கு நின்று இங்ஙனமுங் குறிகாட்டி எங்கட்குக் கேடு சூழுமோ; இஃது அரும்பெடுக்கும் பொழுதே இதனை அரும்பறக் கொய்யாது போனேமே' என்று வேங்கையோடு வெறுத்து வரைவுகடாதலும், 'இனித் தலைவன் இங்கு வந்து கூடுதற்கு என் செய்வானோ' வென்று இரக்கமுற்று வரைவுகடாதலும் உண்டு.

தினைப்புனங் கொய்த பிறகு, 'இங்ஙனம் அது கொய்யப்பட்டமையால் இனியேனும் நீங்கள் வரைந்துகொள்ளல் நன்று; யாங்கள் உங்கட்கு அறிவு சொல்கின்றோமில்லை' யென்று கொய்தவை கூறி வரைவுகடாவுவள். பின்னர் மறைந்து நின்று அவ்விடத்தின் இயலையும், அங்குறையுங் கிளி முதலான புட்களின் தொடர்பையும் உன்னி, அதன் வாயிலாகத் தலைவன்றன் கூட்டுறவுப் பயனையும் நினைத்தாற் போல, 'ஆ! நங்காதலர் நாமிங்கில்லாதபோதும் வந்து நம்மைத் தேடி நிற்பார் கொல்லோ' வென்று அவனைப் பிரிவருமை கூறி வரைவுகடாதலோடு, தாம் அங்கு நின்றும் போம்போது மயில்களை நோக்கி, 'நாங்கள் போகின்றோம். இப்புனத்தொருவர் எங்களைத் தேடிவந்தால் அன்பில்லார் போலப் பிரிதற்கும் பிரிந்து ஆற்றுதற்குந் துணிந்து போனதாக எங்கள் வன்னெஞ்சஞ் சொல்லுமின்' என்றிரங்கி மயிலொடுகூறிவரைவுகடாதலுஞ் செய்யாநிற்பள்.

இவ்வாறெல்லாந் தோழி மறைந்தும் எதிர்ப்பட்டுந் தலைவனை வரைவுகடாவிக் கடைசியில் தலைமகளோடும் ஆயத்தோடும் அவண் விட்டுப் பிரிந்து தன் ஊர்நோக்கிச் செல்வள். சென்றதும், தலைவன் பொழிலமைந்த அப்புனத்தகஞ் சென்று அது வறும்புனமாய்ப் பொலிவழிந்து நிற்கக்கண்டு, 'இது யாம் முன் பயின்று தலைவி நலந்துய்த்த

விடமன்றோ? ஆ! இன்றீது இருக்குமாறென்னே' யென்று நெஞ்சழிந்து தலைமகளைத் தேடி ஆற்றாது இறுதியில் அவள் ஊரும் அதற்குச் செல்லும் ஆறும் அணித்தே வச தியாயிருப்பினும் இனி நம்மாற் செய்யலாவ தென்னவிருக் கின்றது என்று எண்ணி நொந்து, அவள் பதிநோக்கி வருந்திச் சோர்வுடையனாய்த் தன்னூர் செல்வான் இவன் வந்து புனங்கண்டதும், பதி நோக்கியதும் முறையே வறும் புனங் கண்டு வருந்தலென்றும், பதி நோக்கி வருந்த லென் றும் நூல்களிற் றுறையுறுப்புகளாகக் கூறப்படும்.

## ஒரு பகற்குறிக்கூட்டம் - சிறப்பு :—

இனி இவ்வாறெல்லாம் பலப்பலவாய்த் தோழி தலை வனை வரைவு கடாயது ஒரு நாளிலேயே நிகழ்வதன்று. பல நாட்களாய் இங்ஙனம் வரைவுகடாஅய் வருவள். அங் ஙனமானால் அத்தனை நாளுந் தலைமகன் அவட்கு எதிர்ப் படுவானோவெனின், பகற்குறிக்கண் அவன் பலமுறையும் எதிர்ப்பட்டு நலனுகர்தலும் உண்டென்னும் வழக்கம்,

"பகற்குறி தானே இகப்பினும் வரையார்"*

என்னும் இறையனாரகப்பொரு ளூற்பாவாலும்,

" ஒரு ஞான்று வேங்கைப் பொதும்பினுள் ஆம்; ஒரு ஞான்று கோங்கம் பொதும்பினுள் ஆம், குறிஞ்சி நிலமாயின், ஒரு ஞான்று புன்னையங் கானலுள் ஆம்; ஒரு ஞான்று கைதையங் கானலுள் ஆம், நெய்தனிலமாயின். இவ்வகை எனை நிலத்திற் கும் ஒக்குமாறு அறிந்து உரைக்க. 'பகற்குறிப் புணர்வுகள் பலவாகும்மே' என்றாராகலின்"

என்னும் அதன் உரையாலும் பெறப்படுதலின், தோழி பல காலுமாக வரைவுகடாவுவாளென்று கொள்கவென்பது. இனி 'இருப்பினும் வரையா'ரென்ற உம்மையால் ஒன் றிற்குமே ஓகவாமல், ஒரு பகற்குறிக் கூட்டம் நிகழ்வதே பெரும்பான்மையும் வலிவுடைத்துமாகும். அங்ஙனம், கொள்வதானால் அவ்வொரு கூட்டத்தின்கண் தோழி தலைவனை எவ்வெவ்வாறு வரைவுகடாதல் பொருந்துமோ

---

* இறைய, உ0.

அவ்வவ்வாறு வந்த வரைவுகடாதல்களே கொள்ளல் வேண்டும். இவ் வரைவுகடாதலில் தலைவன் மறைவாக நிற்பக் கடாவப்படுவனவெல்லாந் தலைவன் சிறைப்புறத் தானகத் தோழி இன்னவாறு கூறி வரைவுகடாயினு ளென்று அகப்பொருணூல்கள் கூறுகிற்கும்.

இனி, வறும்புனங்கண்டு பதிநோக்கி வருந்திப் பிரிந்த தலைவன் பின்னுமத் தோழியைத் தலைப்பட்டு அவளுதவி கொண்டு தன் தலைவியை இராக்குறியிற் கூடியளாவுய் நலனுகர்வ னென்பது.

---

## எ. இராக்குறி

[இராக்காலத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தலைவன் தன் தலைவியைச் சென்று கூடுதல்.]

இனிதே தெய்யஎம் முனிவுஇல் நல்ஊர்
இனிவரின் தவறும் இல்லை எனையதூஉம்
பிறர்பிறர் அறிதல் யாவது
தமர்தம் அறியாச் சேரியும் உடைத்தே.

—நற்றிணை, ௩௩௧.

'வெறுத்தலைக் கருதாத எங்களுடைய நல்ல ஊர் மிகவும் இனியதா யிருக்கின்றது. இனிமேல் வந்தீர்களானல் உங்கட்கு ஊறுபாடும் இல்லை. எங்களுறவினர்கள் தங்களுக்குள்ளாகவே ஒருவரையொருவர் அறிந்துகொள்ள மாட்டாத அத்தகைய இயல்பே யமைந்த குடியிருக்கைகளை உடையது எங்களூர். ஆதலால், எப்படியானாலும் அயலார் அயலாரை யறிதல் எவ்வாறியலும்? எனவே நீங்கள் அச்சமில்லாமல் இராக்குறிக் கூட்டத்தின் பொருட்டு எங்களூர்க்குத் தாராளமாக வரலா'மென்ற வாறு.

தெய்ய: அசைநிலை; "ஓடுவுந் தெய்யவும் இசை நிறை மொழியே"* என்பது நன்னூல். "பலரே தெய்ய எம்மறை யாது ஈமே"† என்னும் ஐங்குறுநூற்றுச் செய்யுளினும் இவ் வசைநிலைச் சொல் வந்தமை காண்க. 'தவறும் இல்லை' யென்றது, தலைவியின் தாய் முதலாயினோர் ஏதும் ஐயுறா மலே இருக்கின்றனரென்று குறித்தவாறும். உங்கட்கே யுரிய உங்களூர்க் கோலத்தோடு வந்தாலும் இங்கியாரும் உங்களை அயலாரென அறிந்துகொள்ளமாட்டாரென்று தலைவனுக்குக் கூறுவாள், 'தமர்தம் அறியாச்சேரி' என் ருள். சேரி - சேர்ந்திருக்குமிடம்; இச்சொல் இடத்துக் கேற்றபடி 'இருக்கை' யென்றும், 'தெரு' வென்றும், 'ஊ' ரென்றும் பொருள்படும். இங்கு இருக்கை யென்னும் பொருள் குறித்து நின்றது. இதனைக்,

"கூல மறுகிற் கொடியெடுத்து நுவலு
மாலைச் சேரி மருங்குசென் றெய்தி"‡

என்னுஞ் சிலப்பதிகாரத்துக் கடலாடுகாதைப் பகுதியில் வரும் 'மாலைச் சேரி' யென்னுந் தொடருக்கு, 'ஒழுங்கு படுத்தப்பட்ட பரதேசிகள் இருப்பு' என்று அதன் அரும் பதவுரையாசிரியர் கூறிய உரைத்தொடரிற் கண்டுகொள்க. 'வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றில்'§ என்று மேல் கானல் வரியுள் வருதலுமிது. அஃதாவது தலைவியின் ஊர், ஒன்றன் பக்கத்தே யொன்றாக இருமருங்கும் வரிசையாய் நெருக்கிக் கட்டப்பட்ட வீடுகளால் நிறைந்து ஓரொழுங் குக்கு வந்த தெருக்களையுடையதன்று. மற்று, 'இடை யிடையே இடை வெளிகளுந் தோட்டங்களும் அமையத் தொலைவு தொலைவாக அங்கங்கும் ஓரொழுங்கென்ப தின்றித் தனித்தனியாய்க் கட்டப்பட்ட குடியிருக்கைகளை யுடைய' தென்பது பொருள்.

'நல்லூர், இனிதே; தவறும் இல்லை; சேரியும் உடைத்து; (ஆகவே) எனையதூஉம் அறிதல் யாவது' என்று கூட்டுக.

---

* நன். இடை. கஎ. † ஐங்குறு. கிழத்திகூற்றுப். ச.

‡ சிலப். கடலாடு. கரு௫. § சிலப். கானல்வரி, க0.

பகற்காலத்திற் குறியிடத்துக்குவந்து பகற்குறி யொழுக்கஞ் செய்யாநின்ற தலைமகன் ஆங்குத் தன் உணர்ச்சிக்கு வந்த இரண்டுவகைகளினுற் றெளி வடைந்து, மேலுங் களவொழுக்கஞ் செய்யாது உடனே தன் தலைவியை மணந்துகொள்ளுதல் முறையாகும். அங் ஙனந் தெளிவடையாமலும் மணந்துகொள்ளாமலும் பின் னுங்கூட அக் களவொழுக்க நிகழ்ச்சியையே விரும்பி நிற் பானுயின், அஃதறிந்த தோழி அவன் பகல்வரவினைத் தடுத்து இரவு வருமாறு செய்ய முற்படுவாளாதலின், அது கூறி வந்ததே மேற்செய்யுளா மென்க.

## தலைவியின் ஒரு சொல் :

தலைவன் பகற்குறிக்கண் வந்து களவுநிகழ்த்தும் பொழுது களவொழுக்கம் முடிந்ததுந் தலைவன் பிரிந்து சென்ருனுக, ஆங்குத் தலைவியின் மாட்டு ஒரு சொல்லுந் தோழியின் மாட்டுப் பல சொல்லும் எழுந்து தோன்றும். தலைவியின் மாட்டுத் தோன்றுவது ஒரு சொல்லேயானு லும் அஃதொன்றுமே தோழியின் மாட்டுத் தோன்றும்பல சொற்களையும்விட ஆழமும் அழுத்தமும் அருமையும் உடையதாகும். அஃதாவது, தலைவிக்குப் பகற்குறி நேரத் தில், தலைவனைக் காணும்பொழுது சிறிதேயாகக் காணுப் பொழுதே பெரியதாய்நின்றது. ஆகவே தலைவன் தன்னை அக்குறியிடத்திற் பிரிந்துபோதலை யுணருந் தலைவிக்கு, 'ஆ! எவ்வளவோ இடையூறுகளிருந்தாலும் அவற்றை யெல்லாம் மிக வருந்திப் பெரிது முயன்று ஒவ்வொன்ருக நீக்கிக்கொண்டு வந்தும், நம்மினிய ஆருயிர்க் காதலரைக் காணும்பொழுது சிறிதாயிற்று. இனிக் காணுப்பொழுதோ பெரிதாய் முடிகின்றதே,' என்னும் எண்ணமும், அவ் வெண்ணத்தினுல் ஆற்ருமையும் உண்டாகும். இங்ஙனம் உண்டான ஆற்ருமை இனித் தணிவதெப்படி?

'ஆற்ருமை ஆற்றுவதொன்றனைப் பற்று' மென்பது நக்கீரனரின் பொருளுரையாதலால், காணுமற்போன தலை வன் தலைவியின் எதிர்வந்து தோன்றினுனுல் அவட்கு

அவ்வாற்றாமை தணியும். அங்ஙனமவன் தோன்றுதற்கு அப்பகற்காலமுங் குறியிடமும் பொருத்தமாகா. ஆகவே தணிதற்கு வழியில்லாதவிடத்து அவ்வாற்றாமை தலைவிக்கு மேலுமேலும் மிகுமன்றோ! எவ்வளவுதான் மிகுந்ததாலும் 'உயிரினுஞ் சிறந்தன்று நாண்'* ஆதலால் எவரிடமுந் தன் ஆற்றாமையைக் கூறுதற்கில்லை. இனி அந் 'நாணினுஞ் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று'† ஆதலால் தன் உயிர்க்காதலன் நீங்கலாக வேறு எவரைக் கண்டும் அவள் அவ்வாற்றாமையைத் தணித்தற்கில்லை. என் செய்வாள்? இப்போது அவள் மூடியிருந்து வேவதோர் கொள்கலம்போல் ஆகின்றாள்.

அடுப்புமேலிருந்து வேவும் பாண்டத்துள் ஆவி தோன்றும். அப் பாண்டம் மூடியிருக்கின்றமையால், உள்ளே தோன்றிய ஆவி மேலெழுந்து வெளியேறுதற்கில்லாமல், அப்பாண்டத்தினுள்ளேயே குவியும். குவிதலோடு மட்டும் அமையாமல் மேலு மேலும் அவ்வாவி மிக மிக, அஃது அப்பாண்டம் முழுமையும் அடர்ந்து நிறைந்து நாலாபக்கமும் பரவி அங்ஙனம் அடர்ந்து நிறைந்து பரவியும் இடம் போதாமையால் முன்னினும் நன்றாய் வலுப்பெற்று எவ்வாற்றானும் வெளிப்பட்டுவிடுதற்கே உரிய வழிவாயில்களை எதிர் நோக்கியபடி உள்ளே சுழன்றுகொண்டிருக்கும். ஆவிதோன்றி மிகுந்து பரவி நிற்பதற்கேற்ப, அதனோடு வெப்பமுந் தோன்றி மிகுந்து பரவி நிற்கும். கொள்கலத்தின் மூடி திறந்தவிடத்து ஆவி வெளிப்பட்டுத் தனது அடர்த்தி யிழந்து விலத்தியானபோது அவ்வாவியோடு உடனிருந்து வெளிப்பட்ட வெப்பமுந் தன் செறிவு கெட்டுத் தணிந்துபோகும்.

இனி இவ்வுவமையின் வகையினைத் தலைவியின் மாட்டுக்கொணர்ந்து காணும்பொழுது, தலைவியின் நெஞ்சமே கொள்கலமெனவும், அக்கொள்கலத்தின் மூடியே தலைவியின் நெஞ்ச வெழுச்சிகளைத் தடுத்து நிற்கும் நாணமென

---

* தொல். களவ. உஉ. † தொல். களவ. உஉ.

வும், அந் நெஞ்ச வெழுச்சியே ஆவியெனவும், அவ்வாவி யோடு கூடிய வெப்பமே அவ்வெழுச்சியோடு கூடிய ஆற் ருமையெனவுங் கொள்ளப்படும். எனவே, கொள்கலத்தின் மூடி திறந்தவிடத்து ஆவி மேலேறி, வெப்பந் தணிதல் போல, நாணந்திறந்தவிடத்து எழுச்சியும் வெளிப்போந்து ஆற்ருமை தணியுமென்க. கொள்கலத்தின் மூடியை உள் ளிருந்த ஆவியே வலுப்பெற்றுத் திறந்திட்டாற்போல, தலைவியின் நெஞ்சகத்தெழுந்த ஆற்ருமை யெழுச்சியே வர வர மிகுந்து தாங்குதற் கிடனின்றிக் கற்புத்தாழ்வீழ்த்த நாண் கதவினை உடைத்தெறிந்திடுமென்க. பெண் பாலார்க்கு உள்ள இவ்வியற்கை யுண்மையினைப் பிற் காலத்துச் சான்ருேரான புகழேந்திப் புலவர், காதற் கணவ ஞன நளனைத் தனது கன்னிமாடத்திற் கண்ட தமயந்தி யின் நிலையினை எடுத்துக் கூறுமிடத்து,

* "நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று
தீண்டு மளவிற் றிறந்தே—பூண்டதோர்
அற்பின்ருழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்ருழ் வீழ்த்த கதவு"†

என்று தமது நளவெண்பாவிலே மிக அழகாகக் கூறுகின் றமை காண்க. இதனை,

"காமக் கணிச்சி ‡யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு" §

என்று திருவள்ளுவனரும் வேறுமுறையிற் கூறினர். ஆகவே தலைவரின் மாட்டெழுந்த ஆற்ருமை மேலே வெளிப்பட்ட விடத்தேதான் அதற்கோர் ஆறுதல் உண்டென்பது இத்துணையுங் கூறியவாற்ருற் பெறப்படும்.

எனவே பகற்குறிப் புணர்ச்சியின்கண் தலைவி தன் தலைவன் பிரிந்தபோது அவனைக் காணுப்பொழுது பெரி தென்று எண்ணி ஆற்ருமைப்பட்டு, தன்னையறியாமலே

* நீண்ட கமலத்தை-நளன் கண்ணை. நீலக்கடை - தமயந்தி யின்கண். அற்பின் - அன்பின்.

† சுயம்வர காண்டம், அஉ. ‡ காமக் கணிச்சி - காமமாகிய கோடரி. § குறள், நிறையழிதல், க.

நெஞ்சு மிக்கது வாய்சோர்ந்து கடலிற்கானுங் கானலிற் கானும் புள்ளிற்கானும் நெஞ்சிற்கானும் வறிதே குழவி யழுதாற்போலத் 'திருமா மணிநெடுந் தேரோடு சென்ற தென் சிந்தனையே' என்று யாதானும் ஒரு சொற் சொல் லும். உள்ளிருந்து பெருகிய ஆற்றாமை யெண்ணம் அவள் சொல்வழியாக வெளிப்பட்டு வந்தமையால், அது முன்னி லுஞ் சிறிது குறையும். தலைவியின் ஆற்றாமை சொல்லின் வழியாக வெளிப்பட்டுத் தணிவு பெறுதலை இறையனாரகப் பொருளுரையாசிரியர் மேலெடுத்து விளக்கிக் காட்டிய எடுத் துக்காட்டின் வாயிலாக,

"யாரும் கேட்போர் இல்லையாயின் தலைமகள் சொல்லி ஆற்றுவா ளாம். மூடியிருந்து வேவதோர் கொள்கலம் மூடி திறந்த இடத்து ஆவி எழுந்து முன்னின்ற வெப்பம் நீங்கினாற்போல, அச்சொற் சொல்ல ஆற்றாமை பண்டையிற் சிறிதளவு படுவ தாம்."*

என்று இனிதெடுத்து விளக்கினர்.

தலைவி ஆற்றாமையாற் கூறிய இச்சொல் அருமை நிறைந்த தாதலின், அதனைத் தலைவன் கேட்டிருப்பானாயின், பெரும்பாலும் உடனே திருமணஞ் செய்துகொள்வான். தோழியாவாள் அவ்வாற்றாமைச் சொல்லைக் கேட்டிருப் பாளாயின், அவள் தன் தலைவியின் உள்ளன்பிற்கும் ஆற்றாமைக்கும் நெகிழ்ந்திரங்கி அத்தலைவனை யண்மி முன் கட்டுரையிற் கூறியவாறு வரைவுகடாவுவள். தோழி வரைவு கடாதலினின்றே தலைமகன் தன் தலைவியின் பிரி வுத் துன்பமும் அருமையும் உணர்ந்து உடனே வரைந்து கொள்ளல் வேண்டும். தலைவி தனித்து நின்று ஆற்றாமைப் பட நெகிழ்ந்து கூறிய உருக்கச் சொல் கேட்டும் வரைதல் தெளியாத தலைமகன், தோழி சொற்கேட்டு ஒருகாலும் அவ்வரைதலைத் தெளியான். இவ்வாறு பகற்குறிக்கண் எழுந்த தலைவியின் ஆற்றாமைச் சொல்லுந் தோழியின் வேண்டுகோட் சொல்லும் என்னும் இரண்டுவகைச் சொற்களினாலும் வரைதல் தெளியாத தலைவனே, மேலுங் களவொழுக்கத்தினை விரும்பித் தோழியைப் பின்

---

* இறைய, கஅ-ன் உரை.

னிரந்து நிற்பனென்க. இவனே பலகாலும் பகற்குறிக் களவுகள் நிகழ்த்துபவனுமாவானென்பது.

## தோழியின் நடையும் இசைவும் :

இனி இவ்வாறு நீளக் களவொழுக்கத்திலேயே கருத் தீர்க்கப்பட்டுப் பகற்குறிக் களவுகள் பல நிகழ்த்துதலைக் கண்ட தோழி, எவ்வாற்றானுங் களவு பிறர்க்குப் புலப் பட்டு அலராகும்மே என்னும் அச்சத்தால், அவன் அஃது ஒழுகாமைக்குரிய பல இடையூறுகளையெல்லாம் எடுத்துக் கூறி அவனொழுக்கத்தினைத் தடுத்துப் பார்ப்பாள். களவி லேயே கருத்திருத்திய தலைவன் தோழியின் இக்கூற்றுகட் கெல்லாம் நெஞ்சம் திரும்புவான் அல்லன். எவ்வாற்றானும் நெஞ்சந் திரும்பித் திருந்தாத தலைவனியல்பினைக் கண்ட தோழி ஓர் உத்தி செய்வள் அது 'தலைவ, இனிப் பகல் வரவு நீங்கி இரவிலே வருக'வென்பது. 'இங்ஙனம் இரவிலே வருகவென்று கூறினாற் பகல்வரவு இல்லையாய்ப் போதலோடு, இரவில் வருதலும் அவற்கு வழிக்கொடுமை யாலும் பிறவாற்றாலும் இடையூறுகி இல்லையாய்ப் போகும்; இவ்வாறு இவ்விருகுறிக் கூட்டங்களும் இல்லை யாய்ப்போக, கூட்டத்திற்கு வேறுவழி காணானாய்த் தலை மகளை உடனே வரைந்துகொள்வா' னென்பது தோழியின் உள்ளெண்ணம். இவட்கு இவ்வெண்ண மிருப்பதன் உண்மை, இவள் இராக்குறி வருகவென்று தலைவற்குக் கூறும்போதே அவ் விராவரவும் இடுக்கணுயிருக்கு மென்று பல இடையூறுகள் கூறி மறுத்து வரைவுகடாத லின் வைத்துத் தெளியப்படும். இதனை,

* "இவடன், காமம் பெருமையின் காலையென்னாள் நின்
அன்புபெரி துடைமையின் அளித்தல் வேண்டிப்
பகலும் வருதி பல்பூங் கானல்;
இந்நீ ராகலோ இனிதால் எனின் இவள்
அலரின் அருங்கடிப் படுகுவள் அதனால்

* கடி - காவலில்.

* எல்லி வம்மோ ; மெல்லம் புலம்ப
சுறவினங் கலித்த நிறையிரும் பரப்பில்
துறையினுந் துஞ்சாக் கண்ணர்
பெண்டிரும் உடைத்துஇவ் அம்பல் ஊரே"†

என்னும் நற்றிணைச் செய்யுளிலுங் காணலாம்.

இவ்வாறெல்லாந் தோழி பகல்வரவு மறுத்து, இராக்குறி நேர்வாள்போல அதனையும் மறுத்து வரைவு கடாவிய போதுந் தலைமகன் தெளிந்து திருமண முயற்சியில் நில்லாமற் களவு முயற்சியிலேயே நின்று, அத்தோழியை இரவுக் குறி நேருமாறும் இரந்து வேண்டுவான். இரவிலே தலைவன் குறியிடம்போந்து தலைவியைக் கூடும் அருமையையும் தலைவியைத் தான் குறியிடத்துக்குக் கொணர்ந்து சேர்க்கும் அருமையையும், பின்னர் இக்களவொழுக்கம் வெளிப்பட்டு அலராகாதவாறு பாதுகாத்து நிற்கும் அருமையையும் தோழி நினைந்துபார்த்துத் தலைவனுக்கு எழுந்த இரவுக்குறி விருப்பத்தைக் கூடியமட்டும் மறுத்தே உரைப்பள். தலைவன் தோழியை இரவுக்குறி வேண்டும் போது, 'மாலை விருந்தினரை மாற்றுதல் அறனன்'றாதலின் ‡ 'யான் இன்றிரவில் உங்கள் சீறூர்க்கு விருந்து; என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்,' என்று வேண்டுவான். இங்ஙனம் வேண்டினானுக்கு ஒருகால் தோழி 'எங்கள் ஊர் அலர்தூற்றுந் தீயபெண்டிரை நிரம்ப உடைய,' தென்றும் மற்றொருகால் 'எங்கள் ஊர் உங்களால் எய்துதற்கு அரிய குன்றினுச்சியில் இருக்கின்ற,' தென்றும், இன்னுமொருகால் 'எங்கள் சீறூரைச் சுற்றி நாலாபக்கங்களிலும் பிளவுமலைகளும், அடர்ந்தோங்கிய காடுகளும், ஆழமும் அகலமும் வேகமுஞ் சுழிகளும் நிரம்பியோடுங் காட்டாறுகளும் இருத்தலால், இவற்றையெல்லாம் நீங்கள் இரவிலே கடந்து நலத்தோடு வந்து உங்கள் தலைவியைக் கூடிப் போதலென்பது மிகவும் அருமையா,'மென்றும், இன்னும் இவற்றைப் போல வேறு பல ஏதுக்களும் கூறிப் பலமுறையுந் தடுப்பாள்.

---

* எல்லி - இரவில். † நற்றிணை : உஉ௫.

‡ திருச்சிற். கசஅ-ன் உரை.

தடுத்தும் என்? தலைவன் விடான். விடானாய்த், தன் நாணம் முதலியனவெல்லாங் கழன்று நீங்கத் தன் ஆற்றாமை முழுதையுந் திறந்துகாட்டி 'யான் எவ்வாறு, என் தலைவியின் கூட்டமின்றி ஆற்றி நிற்பேன்; இதனினும் யான் இறப்பதே நன்று,' என்று தன் இறந்துபாடு தோன்ற இரந்து கூறி, அவன், தோழியைப் பரிந்து கேட்பான். இவன் தன் ஆற்றாமை முழுவதையுந் திறந்து விட்டு இரக்கமுண்டாம்படி கேட்கும்பொழுது தோழி என் செய்வாள்? நெஞ்சம் மிக இரங்கித் 'தீவினையேன் இதற்குச் சொல்லுவதென்னோ?' என்று கூறித் தயங்கி நிற்பாள். தோழி இங்ஙனந் தலைவன் இரா வரலுக்கு உடன்படாதவள்போல மறுத்துக்கூற, அவன் வருகைக்கு அஃது இடமுஞ் செய்தலின், இங்ஙனங்கூறி நேர்தலை ஆசிரியன்மார் 'மறுத்த வாய்ப்பாட்டால் இரவுக்குறி நேர்த'லென்று கூறுநிற்பர். எப்படியுந் தலைவன் அவ் விராக்குறிக் களவிலேயே நெஞ்சு தோய்ந்து வேண்டு தலின், இனியும் அவன் விருப்பத்தினை மறுத்துக் கூறு தலில் ஏதும் பயனின்றாம் என்று தோழி யுணர்ந்து 'இனிதே தெய்ய எம் முனிவு இல் நல் ஊர் இனி வரின் தவறும் இல்லை' என்று மேல்தலைப்பிலெடுத்துக்கொண்ட செய்யுட் பொருளைக் கூறி இராக்குறிக்கு இசைவாளென்பது.

இனி, இங்ஙனம் இசைந்தாளாயினுந் தோழி தம்மூர்க்கு இராக்கண் வருந் தலைவன் தம்மூர் மக்கள் போலவே கோலஞ்செய்து வருவனாயின் நன்றாமென்னும் நோக்க முடையவளாய்த், தலைவன் அதனை யுட்கொள்ளு மாறு, 'உங்கள் ஊரிடத்தார் எம் மலர் சூடி எச்சாந் தணிந்து எம் மர நிழலின்கீழ் விளையாடுப?' என்று கேட்ப, அவனும் அவள் கருத்தினை யுணர்ந்து உட்கொண்டு அவ் வாறே கோலஞ்செய்து வருதற்கு இசைந்தவனாய், 'நின்னூரிடத்தார் இராப்பொழுதில் எம்மலரைச் சூடி எச்சாந்தை யணிந்து என்ன மரநிழலின் கீழ் விளை யாடுப?'வென்று தோழியைக் கேட்பான். தோழி தலைவனு

டைய நுண்ணறிவு கண்டு வியந்து 'யாங்கள் சந்தனச் சாந்தணிந்து சுனைக்காவிகள் சூடி தோகைகள் துயில் செய்யும் வேங்கைப் பொழிற்கண் விளையாடுவோம்; அவ் விடத்தே நீங்கள் விழிப்பாய் வந்து உங்கள் வரவினை யாங்கள் அறியுமாறு ஆங்குத் துயில்கொள்ளும் மயில் களை எழுப்புவீர்களாக,'வென்று அவனுக்குக் கூறுவாள். இதுவே குறியிடங்கூறலுமாயிற்று. மேல் தலைவன் இவ் வேற்பாடுகளைச் செய்துகொண்டு தன்னூர் சென்றானாகத், தோழியும் அவனோடு பட்ட பேச்சுத் தொடர்பினை அவ்வளவோடு முடித்துக்கொண்டு தலைவிமாட்டுப் போந்து அவளை இரவுக்குறி ஏற்பியாநிற்பள்.

## தலைவியின் கற்புள்ளம் :

அங்ஙனம் ஏற்பிப்பாள் அவள்மாட்டும் ஆராய்ச்சி யும் விழிப்பும் உடையவளாய் 'அம்மா, இன்று அந்திப் போதிலே யானோர் கானற்சோலை யிடத்து நின்றேனாக, ஆங்கு ஓர் அரசிளங்குமரன் வந்து நின்றான். நின்றவன் அம் மணல் நுழையில் ஓர் ஆண் நண்டு தன் பெடையி னோடு பயிலக்கண்டு நெடுநேரம் அதனை உற்று நோக்கிய படியாயிருந்து நெடிது வருந்தி நெஞ்சழிந்து போயினான். இரவு அவன் எவ்வாறு தூங்குவானோ அறிகிலேன்,' என்பள். இவ்வாறு தோழி கூறியதைக்கேட்ட தலைமகள், தன் காதலனையும் அந்நினைவின் வாயிலாய் நினைந்து 'ஆ! இன்றிரா அவன் எவ்வாறு துயிலுமோ!' வென்று இனைந் தெண்ணுவளாய்த் தோழியை நோக்கி முகங்கொடுத்துப் பரிந்து பேசத்தொடங்குவள். அங்ஙனம் முகங்கொடுத்துப் பேசுதலையே தோழி எதிர்நோக்கியிருந்தனளாதலால், இதுவே தலைவனது குறையிரவையுந் தான் அவற்களித்த உறுதியுரையையுந் தெரிவித்துக் குறைநேர்வித்தற்குத் தக்க நேரமென்றெண்ணித் தலைவியை நோக்கி, 'நின் ஆருயிர்க்காதலனும் இரவு இவண் வருகின்றேனென்று கூறிச்சென்றான்; இதற்கு யாம் என்னசெய்வது?' என்று மெல்லக் கூறுவாள்.

உடனே தலைவி அஞ்சிய நெஞ்சத்தாளாய்த் தனக்கவன் முன் செய்த காதற் கனிவுகளையும் உதவிகளையும் நினைந்து பார்த்து, 'என்னே தோழி! என்செய்தனை? சிங்கக் கூட்டங்கள் கூடிச் சூழ்ந்து சூழ்ந்தோடி யானைகளையெல்லாம் வேட்டையாடித் திரியும் இம் மலையிடைக் கான் புதர் வழியிலே நள்ளிரவின் வல்லிருட்கண்ணுஞ் சுழியாறு கடந்து என் அருமை உயிர்வள்ளலை வாவென்று சொல்லத் தகுமா!' என்று அவன் வரும் வழியின் தீங்குகள் கூறித் தோழி நினைவை மறுத்துக் கூறுவாள். ஈங்குத் தலைவிக்குத் தலைவன்மாட் டுள்ள உள்ளன்பு வெள்ளம் அவள் சொல்லின் வழியே நன்கு வெளிப்படுகின்றது. இயற்கைப் புணர்ச்சியிலிருந்து இவ்விரவுக் குறிகாறும் தலைவியின் வாய்வழியாக அவள், அவள் காதலன்பால் வைத்திருந்த பெயராப் பேரன்பு ஒருகாலும் வெளிப்பட்டதில்லை. அவளையும் அறியாமல் இன்றுதான் வெளிப்பட்டது.

அதன்பின் தலைவன் இராக்குறிப்பொருட்டுத் தனது இறந்துபாடு தோன்ற நின்று ஆற்றாமைப்பட்ட செய்தியைத் தோழி கூறக்கேட்டு, அங்ஙனமாயின் அவனிருக்குமிடம் யாம் அண்மி அவற்கு இராக்குறி நேர்வோமென்று இசைவுடனே தலைவி கூறியவிடத்துப் பேராசிரியர் தலைவியின் உள்ள வியல்பினைத் தமது உரையிடையே நன்கு புலப்படுத்திக் காட்டுகின்றார்.

இரவின்கண் இச்சிறு குடிக்குத் தலைவன் வருகின்றானென்று கேட்டமைக்குத் தலைவி உடம்படவில்லை. அவன் தனக்கு முன்னெலாஞ் செய்து போந்த தலையளியும், உதவியும் நினைந்து, அங்ஙனந் தலையளித்து உதவிய செயற்கருஞ் செய்கைக் காதலனையும் இவ் வரற்கருங் கொடிய கான் வழியிடையே வரச் செய்யலாமோ வென்று கூறி, நன்றியுணர்வினால் மறுத்தாள். பின்னர் அவன் ஆற்றாமை மிக்கு இறந்துபாடு தோன்றக் குறையிரக்கின்றான் என்றபோது அங்ஙனமானால் இராக்குறி நேரலாமென்று அவன் ஆற்றாமை கருதி உடன்பட்டாள். ஆகவே தலைவன் செய்த உதவி நினைந்து தலைமகள் இராக்குறிக்கு உடன்படவில்லை

யென்பதும், அவன் ஆற்றாமை நினைந்தே அக்குறிக்கு உடன்பட்டனள் என்பதும் போதரும். அங்ஙனம் ஆற்றாமைக்கு உடன்பட்டனளாயினும் அவன் உதவி செய்தமைக்கு அவள் செய்ய விருப்பதுதான் என்னையெனின்?, அதுவே கடும்புலி வாழுங் கான்வழிக்கு அஞ்சாத தலைவனிருக்கும் பேரூர்க்கு இரவிற்சென்று அவற்கு இராக்குறி நேரல்வேண்டுமென்று துணிந்து தோழிக்கும் உரைத்தமையாமென்க. ஆகவே காதற் கற்புடைய மங்கைமார்களெல்லாம், தமக்கு இன்பம் வருவதேயாயினும், அவ்வின்பச் செய்கையால் தம் கணவருக்குத் தீங்குகள் விளைதற் கிடமாயிருப்பின், அதனை அவர்கள் ஒத்துக் கொள்ளாரென்பதும், தம் கணவருக்கு ஏதுந் தீங்கு நேராதவிடத்து ஆங்குத் தமக்குத் தீங்கு நேருமாயினும் அதனை யொருபொருட்படுத்தாமல் தன் கணவரின் இன்ப நிகழ்ச்சியிலேயே கருத்துவைத்து அதற்கு உடன்படுவார்களென்பதும் விளங்குகின்றன.

இவ்வாறான தலைவியின் உள்ளன்பினையுங் காதற் கற்பினையும் அத் திருச்சிற்றம்பலக்கோவை யுரையாசிரியர்,

> ‘ஆற்றின்கண் ஏதம் நினைந்து இரவுக்குறி மறுத்த தலைமகள் அவன் செய்த உதவியை நினைத்துப் பின் உடம்பட்டாளாதல், பொருந்தாமை யறிந்துகொள்க. இக் கருத்தே பற்றி உதவி நினைந்து குறை நயந்ததென்னாது அவனது ஆற்றாமை நிலைமை கேட்டுக் குறை நயந்ததென்றார். அவன் செய்த பேருதவி சொல்லுகையால் அவள் செய்த உதவிக்குக் கைம்மாறாவது நான் அவனுழைச் சேறலே யென்று உடம்பாடாயிற்று’*

என்று இனிதெடுத்து விளங்கவைத்தமை காண்க.

## இராக்குறி நிகழ்ச்சி :

பின்னர்த் தோழி தலைமகளின் உடம்பாட்டினைக் குறவர்மக்கள் கோலத்தனாய் வந்த தலைமகன் வரவுணர்ந்து அவன்பாற் சென்று, ‘ஐய, உங்கள் அருளுக்காக

* திருச்சிற். கடுஅ.

இன்றிரவெல்லாம் என் தலைவியின்மாட்டுப் பட்டபாடு போதும்,' என்று கூறித் தெரிவித்துத் தலைமகள்பால் வந்து 'தலைமகன் நாம் விளையாடும் வேங்கைச்சோலை யிடத்து வந்திருக்கிறானென்பது அங்குத் துயில்கொண் டிருந்த மயிலினங்களெல்லாம் எழுந்து அகலுகின்றமை யாற் றெரிகின்ற,'தென்றுகூறி அவன் வரவுரைத்து, தாய் துயிலறிந்து, அவளை அழைத்துக்கொண்டு குறியிடங் கொணர்ந்து அவ்விடத்திலே தனித்துய்யச் சிறிது அப்பால் நீங்கி நிற்பள். ஆங்கு, மரக்கிளையிலிருந்து தொங்குவதோ ரூஞ்சலுண்டென்பார் திருக்கோவையாசிரி யர். உடனே தலைமகன் பகற்குறிக் கூட்டத்திற் போலவே, தலைமகளைக் கதுமென எதிர்ப்பட்டுத் தன் தளர்வு அகலு மாறு அவளைப் புகழ்ந்து கூறி மருங்கு அணைந்து நலன் நுகர்ந்தும் நுகர்வித்தும் மகிழ்ந்து மலர்விப்பான். இறுதியில், நலனுகர்ந்த தலைவியின் மலர்ந்த முகமலர்ச்சி கண்டு, 'என் காதற் களஞ்சியமே! இந் நள்ளிராப் போதில் நீ குமுத மலராகின்றனை? யான் அதனை மலர்த் தும் வெண்மதியமாகின்றனன்,' என்று நலம்புனைந் துரைப்பான். இதனைத் திருச்சிற்றம்பலக் கோவையாரில் மாணிக்கவாசகப் பெருமான்,

*"அழுந்தே னரகத் தியானென் றிருப்பவந் தாண்டுகொண்ட
செழுந்தேன் திகழ்பொழிற் றில்லைப் புறவிச் செறுவகத்த
கொழுந்தேன் மலர்வாய்க் குமுதம் இவள்யான் குரூஉச்சுடர்
[கொண்டு
எழுந்தாங்கு அதுமலர்த் தும்உயர் வானத்து இளமதியே†

என்று மிகவும் விளக்கமாகக் கூறுகின்றார்.

இங்ஙனம் கூறி மகிழ்ந்த தலைமகன் உடனே அவளைத் 'தோழியோடு சேர்ந்து ஆயஞ்சென்று பள்ளியிடத்தே துயில்வாயாக; இராநேர மாதலால் இங்கு நெடிது பொழுது இராதே,' என்று கூறிப் பிரிந்தான்.

தோழி அவனை எதிர்ப்பட்டு முன்னே பகற்குறியிடத் தில் வரைவுகடாவியவாறே இங்குக்கடாவுவள். கடாவு

---

* செறுவகத்த-வயலின் உற்றனவாகிய. † திருச்சிற். கககூ.

கின்றவள், 'இம் மலையிடைக் கடுவழி உங்கட்கு இவள் பொருட்டாக எளிதாயிற்றாயினும், இவ்வாறு இனியும் இரவில் வரலாகா,'தென்று வரவு விலக்குவள். இங்ஙனம் இவள் இராவரல் விலக்குகின்றமை அவன் விரைவில் வரைந்துகோடல் வேண்டுமென்னுங் கருத்துப்பற்றியே யாம். ஆனல் தலைவனே, 'எவ்வகையான இடையூறுகளே யாயினும் என் ஆருயிர்க்கு நிலைக்களனை அருமைத் தலைவியை யான் திருமணஞ் செய்துகொள்ளும் வரையில் இக் களவு நிகழ்த்துவதேயல்லது அவளைக் காணுதுங் கண்டு கலவாதும் எங்ஙனமிருப்பேன்?' என்று ஆற்ருமைப்படுவான். அவனுற்ருமைக்கிரங்கிய தோழி, தலைவனை விளித்து நீங்கள் ஆற்ருமைப்படுதல்போலவே, நீங்கள் இவ்விரா வழிவரற்கு என் தலைவியும் ஆற்ருது, உங்கட்கு எங்கு எப்போது என்ன நிகழுமோவென்று இரங்குகின்றனளே!' யென்று இரக்கங்கூறி வரைவுகடாவுவள். தலைவன் அதனை உண்ணினைந்துகொண்டே தன்னூர்சென்றனனாகத் தோழியுந் தலைமகளைக் கூட்டிக்கொண்டு செல்ல அவள் பள்ளி சேர்ந்து துயில்கொள்வாளாயினள்.

## இரவு வருதலை மறுத்தல் :

இனி, அடுத்த முறையிலே இராக்குறி வந்த தலைமகனுக்குச் சிறைப்புறமாக விருந்து தோழி, நிலவு வெளிப்பட்டுவிட்டமைக்கு வருந்தி 'எங்கள் தலைவனோடு யாங்கள் கூடவொட்டாதவாறு நீ ஏனே செவ்வி பார்த்து வெளிப்பட்டனை,' என்று மதியொடு புலந்து கூறுவாள். எதிர் பார்த்த களவு கிட்டப்பெருமையறிந்த தலைவன் அன்று போய்ப் பின்னொருநாள் அவ்விராக்குறி வந்தானாக, அப்பொழுதுந் தோழி சிறைப்புறமாக இருந்து தலைமகளுக்கு உரைப்பாள்போலச் 'சற்று முன்னே தான் வேங்கைப் பொழிலிடத்தே மயில் அகவுதல் கண்டு நம் தலைவன்ருன் வந்தானென்று வறிதே குறியிடஞ்சென்று ஏமாந்து திரும்பினேம், குறியல்லாத குறியைக் குறியென்று கொள்ளலும் நேர்கின்றதே,' என்று அல்லகுறி அறிவிப்பாள்.

இங்ஙனமே நாய் குரைக்கின்றமையாற் காப்புச் சிறைமிக்குக் கையறுகின்றோமாதலின், இன்றிரா எப்படி நம் தலைவனை யெதிர்ப்படுவோமென் றொருகாலும், குறியிடத்துச் சோலையில் தெய்வமுண்டாதலால் அவண் வருவதற்கு ஆறுபார்த்துற்ற அச்சத்தால் அஞ்சுகின்றோமென்று மற்றொருகாலும், இவற்றையெல்லாங் கேட்ட தலைவன் தலைவியின் வீட்டெல்லைக்கு உள்ளிடத்திலேயே வந்து நின்றனனாக, இங்கெல்லாம் நீங்கள் வருவதானால் தீய சொற்களுண்டாகுமாதலால், இவண் வரலாகாதென்று இன்னொருகாலுமாகத் தோழி இராக்குறி மறுத்தலுமுண்டு. மேலும் தலைமகற்கு இராக்குறி எப்பொழுதும் நேராமை கூறி இனித், தலைவியை வரைந்து கொள்ளாமையால் அவள்படுந் துயரத்தையுந் தெரிவித்துத் தோழி தலைவனை மறுத்துக் கூறுவாள். அது, கடலொடு புலந்து கூறுதல் முதலிய பொருள்களில் வரும் 'கடலிடை வைத்துத் துயரறிவித்தல்' முதலியன.

இனித் தன் தலைவனை நெடிது நாளாகக் காணவுங் கண்டு கவினவும் இடம்பெறாத தலைவி, காமம் தலைக்கு மேலேறி அவ்வாற்றாற் கழிபெருந் துன்பம் படரப்பெற்று அதற்கு ஆற்றமாட்டாளாய், ஒருகால் தலைவன் இராப்பொழுது வந்தனனொன்று, கேட்குந்தன்மையில்லாத உயிரில் பொருள்களையெல்லாங் கேட்பனபோலக் கருதி, 'நீ எதற்காக இவ்வாறு நெஞ்சழிகின்றனை என்று கேட்கின்றீர்கள்; இதுதானோ நீங்கள் என்பாற் செலுத்தும் அன்பு,' என்று தனது 'காமம் மிக்க கழிபடர் கிளவி'யினை முன்னிலைப் புறமொழியாக உரைப்பதுஞ் செய்வள். இங்ஙனமே இன்னும் இவள் தனக்குள்ளே நாளுங் கையற்று வருந்து தலைத் 'தன்னுட் கையாறெய்திடு கிளவி'யாகவும் 'இரவுறு துயரங் கடலொடு சேர்த்தற்' கிளவியாகவும் தலைவன் இரவில் வருங் காலங்களிலெல்லாம் முன்னிலைப் புறமொழியாகவே வைத்து உரைத்து நிற்பள்.

இவ்வாறெல்லாந் தோழி, இராப்பொழுது தலைவன் வந்துங்கூடத் தாங்கள் இரவுக்குறி நேராமைக்குரிய ஏனை

இடர்ப்பாடுகளை அவனுக்கு எடுத்துக்கூறுதலும், இன்னும், என் தலைவனை நெடிது கண்டிலனேயென்று கையற்று வருந்துந் தலைவியினுடைய மீக்கூர் துயரத்தை எடுத்துக் கூறுதலும், தலைவியே தனது ஆற்றலாகாத் துயரத்தை முன்வந்து கூறுதலுமான இவையே ஆற்றிடைப் பல இடர்ப்பாடுகளுடன் இராவந்த தலைமகன் உடனே மணஞ் செய்து கொள்ளல் வேண்டுமென்று துணிந்தெண்ணு தற்குப் போதுமான ஏதுக்களாம். இவ்வளவும் நேரே கண்டுங் கேட்டும் வந்த தலைமகன் சிறிதும் வரைதற்குத் தெளியானாய்ப் பின்னும் பின்னுங் களவொழுக்கத்திலேயே நிற்ப, தோழி அவன் நிலைக்கு வருத்தமும் இரக்கமும் உற்று, எப்படியாயினும் அவன் களவினை நீக்குதற்கு எண்ணி, 'ஐய, இரவிலே நமது கூட்டத்திற்கு எண்ணில் லாத இடையூறுகள் விளைந்து வருதலால் இனிப் பகல் நேரத்திலேயே நீங்கள் குறியிடம் வரலா'மென்று கூறி இரா விலக்குவள். இது,

*"இரவின் வாரல் ஐய விரவுவீ
யகலறை வரிக்குஞ் சாரற்
பகலும் பெறுவையிவள் தடமென் றோளே"†

என்னுங் குறிஞ்சிக்கலியினால் விளங்கும். அங்ஙனங் கூறியுந் தலைவன் இராக்குறியையே விரும்பியொழுகுவானாதலின், அதுகாணுந் தோழி செய்வதின்னதென்றறியாளாய்த் தலைவனை நோக்கி 'ஊர் முழுதும் இச்செய்கை தெரிந்து அலராய்விட்டது; ஆதலால், இனி நீங்கள் இக்களவில் வருதல் ஒருபோதுமாகாது,' என்று வற்புறுத்திக் கூறிவிடு வாள். தலைமகன் ஏதுஞ் செய்தற்கு வழிகாணானாய் அவ் வலரடங்குமாறு சிலநாள் களவு நிகழ்த்தாதிருப்பன். இவன் இவ்வாறிருத்தலை அகப்பொருளாசிரியன்மார் ஒருவழித்தணத்த லென்ப.

இனி இவ்வியல்பினதான இராக்குறி நிகழ்ச்சியே அது நிகழ்த்துங் காதன்மக்கட்குப் பகற்குறி நிகழ்ச்சியை விடப் பெரிதும் விருப்பந் தருவதாகும்; முதன்மையுமாகு

* வீ - மலர். அறை - பாறையில். † குறிஞ்சிக்கலி, சக.

மென்க. ஆதலாலன்றோ 'இராவரல் நீங்கிப் பகல்வரல் நன்'றென்று தோழி வேண்டியபோது, தலைமகன் அதனை எடுத்துக்கொள்ளானாய் இராவரலையே மேற்கொள்வானாயினானென்பது. அங்ஙனமானால், இவ் விரா நிகழ்ச்சி மட்டும் அக் காதன்மக்கட்கு அத்துணை விருப்பமும் இன்பமுந் தருவதேனென்றால்; நன்று,

## காதலும் காமமும்

மக்களுடைய செயல்களெல்லாம் அவர்கள் உயிரியல்பினை ஒத்திருக்கின்றன. உலகத்திலே பிறந்துவிட்ட பிறகு அம்மக்களின் உயிர் அருள் விளக்க வியல்பினையும் மல மயக்க வியல்பினையும் ஏற்றுக்கொண்டு அவற்றின் அளவுக்கு ஏற்றபடி அவ்வீரியல்புகளாலும் ஆகும் இருவகைச் செயல்களையுஞ் செய்யா நிற்கும். இவ்வாறு இருவகைப் பட்டுச் செய்யப்படும் உயிர்ச்செயலை ஆண்பெண் இணை விழைவின்பாற் கொணர்ந்து பார்க்கும்பொழுது அவ் விழைவு அருள் விளக்க வியல்பினால் நிகழுமாயின், அப்போதது காதலொழுக்கமென்றும், அவ்வாறன்றி மல மயக்க வியல்பினால் நிகழுமாயின், காமவொழுக்கமென்றுங் கொள்ளப்படும். அருள் விளக்க வியல்பினால் நிகழும் பொழுது அறிவின் விரிவும் இன்பப் பெருக்கும் உண்டாதலால், காதலொழுக்கமென்பது மக்களால் ஏற்றுக் கொள்ளற்பாலது. மலமயக்க வியல்பினால் நிகழும்பொழுது அறிவின் மறைப்பும் துன்பப் பெருக்கும் விளைதலால், காமவொழுக்கமென்பது அறிஞர்களால் இகழ்ந்து ஒதுக் கற்பாலதாயுள்ளது. பண்டைக் காலங்களிலெல்லாம் இறைவன் அருள்வழி நின்று ஆண்பெண் விழைவும் இயற்கைக் கூட்டமும் நிகழ்ந்து வந்தமையால், ஆண்டு மலமயக்க வியல்பினால் அவைகள் நிகழ்தலென்பதே இல்லாமலிருந்தது.

அக்காலத்திற் 'காமம்' 'காதல்' என்னும் இரண்டு சொற்களும் இவ்வருள் விளக்க வியல்பினால் நிகழும் ஆண் பெண் விழைச்சு குறித்து ஒரே பொருளில் வழங்கி

வந்தனவே யல்லாமல் ஒன்றற்கொன்று தம்முண் மாறு பட்ட கருத்துக்கொண்டு வேறு வேறு உணர்ச்சியினை உணர்த்தினவல்ல.

"அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு"*

என்னுந் திருக்குறளில் வரும் 'காமம்' என்னுஞ் சொல்லுக்கு உரையாசிரியர் பரிமேலழகர் 'காத'லென்றே பொருளுரைத்தமையானும், திருவருள் விளக்க வியல்பினால் நிகழும் இயற்கைக் களவின் காதற்புணர்ச்சியை விளக்கும்பொழுது இறையனாரகப்பொருளுரையாசிரியர் நக்கீரனார்,

'இனிக் காமப் புணர்ச்சி' யென்பது தலைமகனுந் தலைமகளுந் தமியராய் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுத் தம் முணர்வின்றி வேட்கை மிகவினாற் புணர்வது'†

என்று அதனைக் "காமப்புணர்ச்சி" விளக்கமாகவே உரை கூறினமையானும் பண்டைக் காலத்தில் இக் 'காமம்' 'காதல்' என்னும் இரண்டு சொற்களும் தம்முள் ஏதும் மாறுபடாவாய் அருள்விளக்க வியல்பினால் நிகழும் ஆண் பெண் களவினையே உணர்த்தி வந்திருக்கின்றமை சிறிதையத்திற்கும் இடமில்லாத வகையிற் செவ்வே தெளியப் படுகின்றது. ஆனால், அக்காலத்திற் பெருவரவினதாய் இருவகை வழக்கிலும் இக் களவு நல்லொழுக்கத்துக்கு வழங்கிவரப்பெற்றது 'காமம்' என்னும் பெயரேயாம்.

திருவருள் விளக்கத்தினால் இயற்கை யெண்ணத்தின் வழி நின்று நிகழ்ந்த களவொழுக்கம் நல்லொழுக்கமே யாமென்பது, தலைவன் இராக்குறிப் புணர்ச்சி நிகழ்ந்த பிறகு மேலொரு நாள் ஊரிலே அலர் மிகுகின்ற தென்பதுணர்ந்து, தன் தலைவியை வேறெவர்க்குந் தெரியாதபடி உடனழைத்துக்கொண்டு உடன் போகியதை வழி யெதிரிற் கண்ட அறிஞர் சிலர், அங்ஙனமவர் உடன் போக்குக்கு வருந்திய தலைவியின் தாய் தம்மை எதிர்ப்பட்டு வருந்திக் கேட்டபோது, 'அது முறையே யாகுமன்றித் தவறாத

* குறள், புணர்ச்சிமகிழ்தல்: ௧0.
† இறையனா. உ

வில்லை' யென்று மறுமொழி பகர்ந்தமையானும், அங்ஙன மவர் விடை பகர்ந்தமையை,

*"ஏழ்புண ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே;

என வாங்கு,

†இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்;
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே"‡

என்று கலித்தொகை நூலும் எடுத்துக் கூறுகின்றமை யானும் செவ்விதின் விளங்காநிற்கும். இவ்வாறெல்லாம் பண்டைக் காலத்தில் அறிவின் விரிவும் இன்பமும் பயக்க வல்ல களவொழுக்கமான காம ஒழுக்கமே நல்லொழுக்க மென்று பாராட்டப்பட்டு நிகழ்ந்துவந்தது.

ஆனால், இக்காலத்திற் பண்டு நிகழ்ந்த களவொழுக்க நிகழ்ச்சியினால் திருமணம் நடைபெறாமல், பிறர் முன்னிருந்து கூட்டுவிக்கின்ற முறையினால் அது நடைபெறுகின்றது. ஆகவே, இக்காலத்தில் திருவருள் முனைப்புச் செல்லும் வழியே மணவினைகள் நடைபெறாமல், மக்கள் முனைப்பின் வழியேதான் அவைகள் நடைபெறுகின்றன. எனவே அருள்விளக்க வியல்பினால் அவ் வாண் பெண் விழைவு நிகழ்தலின்றி, மக்கள் மலமயக்க வியல்பினாற்றான் இக்காலத்தில் அது நிகழ்ந்துவருகின்றதெனத் துணியப்படும். இங்ஙனம் மலமயக்க வியல்பினால் நிகழ்கின்றமையின் இப் பிற்கால வழக்கத்துத் திருமணக் கூட்டத்தால் அறியாமையுந் துன்பமுமே பெருகுகின்றன. பிறகு காலஞ் செல்லச் செல்ல, முன்பு அறிவும் இன்பமும் விளைவித்து அருள்விளக்க வியல்பினால் நிகழ்ந்துவந்த களவு, நல்லொழுக்கத்தின் பெருவழக்கான காமப் பெயரையே, மக்

---

* சூழுங்கால் - ஆராயுங்கால்.

† இறந்த - மிகுந்த. எவ்வம் படரன்மின் - துன்பம் நினையன்மின். அறம் தலை - அறம் முதன்மை.

‡ பாலைக்கலி. ௯.

கள் பின்னர் நடைபெறத் தொடங்கிய செயற்கைத் திருமண விழைவுக்கும் பெயராய் வழங்கலாயினர். களவு நல்லொழுக்கத்தின் காமப்பெயர் தன்னின் வேறான பிற்கால இணைவிழைச்சினைக் குறிக்கலானமை தெரிந்திரங்கிய பெரியார், அஃது யாண்டும் பரவி மக்களின் வழக்கத்தில் அழுந்திவிட்டமையால், அதனை அது வழங்கியவாறே விடுத்து, இப்பிற்கால இணைவிழைச்சுக்கும் முற்கால இணைவிழைச்சுக்கும் வேற்றுமை தெரித்தல் வேண்டி, களவொழுக்க நிகழ்ச்சிக்கு முன்னர்ச் சிறுபான்மையாய் வழங்கி வந்த வேறொரு பெயரான 'காதல்' என்பதை அம் முற்கால இணைவிழைச்சுக்கே பெயராய் வழங்கி, வேற்றுமை தெரித்தனர். எனவே 'காத'லென்பதுமட்டும் அருள்விளக்க வியல்பினால் நிகழும் ஆண் பெண் விழைவுக்கு வழங்குகின்றமை பிற்கால வழக்கென்றும், 'காதல்' 'காம'மென்னும் இருவகைப் பெயர்களுங் களவு நல்லொழுக்கத்தையே உணர்த்தி வந்தமை முற்கால வழக்கமென்றும் அறியலாம். முன்னரெல்லாங் காதற் களவு நல்லொழுக்கத்தையே உணர்த்தி வந்த இக் 'காமம்' என்னுஞ் சொல், தன் உண்மைப் பொருள் வழக்குக்கு மாறாய் நின்று மலமயக்க விழைவுகளை யெல்லாம் பிற்காலத்தே உணர்த்த வந்துவிட்டமையை,

"காம மென்பன மனைவியர் மக்கள்
பொன்னணி யிருக்கை பூண்முதற் பலவாம்"*

என்னுங் காஞ்சிப்புராணத் தொடரிற் கண்டுகொள்க.

ஆகவே, இதுகாறுங் கூறியவாற்றாற் 'காதல்' என்னும் பெயரினாலும் 'காமம்' என்னும் பெயரினாலும் பண்டைக் காலத்தில் அருள்வழி நின்று நிகழ்த்தப்பட்டு வந்த களவொழுக்கம், அறிவினை விரிவடையச் செய்து இன்பம் விளைத்தற்பொருட்டு மக்கட்கு ஒரு கருவியாக இறைவனால் ஒழுங்கு செய்யப்பட்ட நல்லொழுக்க மென்பது விளங்காநிற்கும்.

---

* காஞ்சிப். வீராட்ட. ௩௫.

## இராக்குறிச் சிறப்பு :

இனி அறிவென்பது விரிதல் பெற்று இன்பத்தைத் தேடிக்கொள்ள வேண்டுமாயின், அதற்கு அறியாமைத் தடைகளும் இக்கட்டுகளும் எதிர்ந்து நிற்றல் வேண்டும். ஆகவே அவ்வகையான அறியாமைத் தடைகட்கும் இக்கட்டுகட்கும் இடம்பெற்றிருப்பது இராப்போதாதலால், அதுவே பகற்போதினைவிடக் காதன் மக்களின் குறியிடச் சேர்க்கைக்குப் பெரிது பொருந்துவதாயிற்றென்க.

மேலும், மக்களின் நெஞ்சறிவினை அதுவெளிப்படுதற்குரிய வாயில்களாயுள்ள ஐம்பொறிகளுள்ளும், கட்பொறியொன்றே மிகுதியும் இழுத்து வெளிப்படுத்துவதாகும். எனவே கட்பொறியொன்று அவ்வைம்பொறிகளுள்ளும் அடங்கிநிற்குமானல், மக்கட்குப் புறப்பொருள் வாயிலாய்க் கழியும் நெஞ்சறிவு ஒரு பெரிது புறம்படாது உள்ளடங்கும். கட்புலன் அடங்க அடங்க உள்ளுணர்ச்சியும் மிகுந்துகொண்டேயிருக்கும். மிகுதலோடமையாமல், அது செறிதலுஞ் செய்யும். செய்யவே, இவ்வாற்ருல் கட்புலன் அடங்கிப் புறப்பொருளுணர்ச்சி ஒடுங்கி அகமடங்குங் காலம், பொழுதுசாய்ந்து மாலைகவியும் இராக்காலமே யாதலால், அவ்விராக் காலமே அகப்பொருளுணர்ச்சி மக்களுள்ளத்தில் உதித்தெழுந்து செறியுங் காலமாகுமென்க. இவ்வுண்மையினைத் தெளியவைத்தற்கே மக்களுள்ளத்தெழும் அகப்பொருளுணர்ச்சி யென்னும் மலர் காலை நேரத்தில் மொட்டாயிருந்து நடுப்பகலெல்லாம் மலருந் தகுதிபெற்று மாலைப்பொழுதில் முழுதும் மலர்ந்து மலராகுமென்னும் அரும்பொருள் செறிந்து நஞ் செந்நாப்போதார்,

> "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
> மாலை மலருமிந் நோய்"*

என்று உருவக முறையிற் செவ்வையாய் விளக்கினரென்க. ஆகவேதான் அகப்பொருளுணர்ச்சி இயற்கையாகவே

* குறள், பொழுது கண்டிரங்கல்: எ.

மிக்கெழுந்து விம்மும் இராக்காலம் குறிப்புணர்ச்சி விழைவுக்குக் காதன் மக்களால் விரும்பப்படுகின்றதென்றுணர்க.

இவ்வாறெல்லாம் இராப்பொழுதே அகப்பொருளுணர்சிக்குச் சிறப்பிடம் பெற்று அவ்வுணர்ச்சி மேலீட்டால் விரும்பப்படுதலாற்றான், இறையனாரகப்பொருளுரையாசிரியர் 'இரவுக்குறி பொருந்திய துணைப் பகற்குறி பொருந்திற்றன்று'* என்று உரை கிறுவினாரென்க.

இடம் :

இனி, இறையனாரகப்பொருள்,

"இரவுக் குறியே இல்வரை யிகவாது"†

"இரவுமனை யிகந்த குறியிடத் தல்லது
கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை"‡

என்று கூறுதலால், இராக்குறி நிகழும் இடம் தலைவியின் வீட்டெல்லைக்கு உள்ளிடத்தேயாம் என்பதும், ஆனால் அவள் வீட்டினுள்ளேயே அன்றி அவ்வீட்டின் எல்லைக்கு உட்பட்டிருக்குஞ் செய்குன்றும் இளமரக்காவும் பூம்பந்தரும் விளையாட்டிடமும் போல்வனவற்றுள் ஏதேனும் ஒன்றிலேயாம் என்பதும் அறிந்து கொள்ளப்படும்.

---

* இறைய. கஅ. † இறைய. கக. ‡ இறைய. உக.

# அ. ஒருவழித் தணத்தல்

[அலர் வெளிப்பட்டு அதனுற் காவற் கடுமைகள் உண்டாதலின், தலைவியின் நலங்கருதித் தலைமகன் சிலகாலம் அவளை நீங்கியிருத்தல்.]

பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
எழுதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே.

—சிலப்பதிகாரம், எ : கஅ.

'சோலையிலுள்ள நல்ல மலரும், அம்மலர்களினுடைய புதுமணம் விரிந்த மணலிடமும், ஆங்குக் கண்ட என் அருமைத் தலைவியின் தீங்கில்லாத இன்சொல்லும், பருத்த இளைய அழகிய கொங்கைகளும், முழுமதிக்கு நிகரான திருமுகமும், வளைந்து நெளிகின்ற வில் போன்ற இரண்டு புருவங்களும், எழுத இயலாத அரிய மின்னலை யொத்த இடையுமே என்னை மயங்க வைத்து இவ்வாறு இடர் செய்தவையாகும்,' என்பது.

'புதுமணம்' என்று மேலே வருதலின், 'நறுமல'ரென்பதற்கு நல்ல மலரென்று பொருளுரைக்கப்பட்டது. நறுமை, நன்மை; 'நல்ல' வென்பது இங்கு நிறமமைந்த அழகின்மே னின்றது. புதுமணம்-அன்று பூத்த பூவின் நறுமணம். மணல், மணலுள்ள இடத்திற்கு ஆகுபெயர். திருமொழி-அழகிய மொழி; மொழிக்கு அழகாவது இனிமை யாதலின், அஃது 'இன்சொல்' என்னும் பொருளுணர்த்திற்று. முரிதல்-வளைதல்; நெளிதலுமாம். எனவே இவ் விரண்டினையுமே சேர்த்து 'வளைந்து நெளித'லென்று பொருளுரைத்துக் கொள்க. தலைவன் தலைவியர் கூடும் போது தலைவிக்கு இவ்வாறு புருவ வில் வளைந்து நெளிதலுண்மை,

"முழுதும் மெய்ந்நலம் மூழ்கலின் நீர்சுமந்து
எழுதரு கண்இரங் கப்புரு வக்கோடி
தொழுவ போன்றழி ய"*

என்று சீவக சிந்தாமணியினும் வரும். புரு - கடைக்குறை. 'எழுதரு' என்பதை 'எழுத அரு' என்று பிரிக்க. இவ்வாறே பிரித்துத் 'தெரிதற்கு அரிய' வென்று உரை கூறலு மொன்று. எழுதல்-தோன்றுதல்.

மின்னல், மாதரிடைக்குத் தொழிலுவமம்; அஃதாவது வளைதலும், தோன்றி உடனே மறைதலுமாம்; ஏகாரங்கள், எண்.

எனவே 'மலரே மணலே மொழியே முலையே முகமே இணையே இடையே எனை இடர்செய்தவையே' என்று தலைவன் தன்னை இடர் செய்தவற்றை நீடு நினைந்து ஒருவழித் தணந்து ஓரிடத்திருக்கின்றானென்று இதனைக் கொள்க வென்பது. மலரே மணலே யென்று இங்ஙன மிவண் எடுத்துக்கொள்ளப்பட்ட கருத்துக்களும் அவற்றின் இசைகளும்

† "வளைவளர் தருதுறையே மணம்விரி தருபொழிலே
தளையவிழ் நறுமலரே தனியவள் திரியிடமே
முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே
இளையவ ளிணைமுலையே யெனையிடர் செய்தவையே"‡

என்று முரித்து முரித்துப் பாடப்படு மியல்பினவாமாதலின், இவ்வகை வரிப்பாட்டுகள் முரிவரி யெனப்படும். இதுவே,

"எடுத்த இயலும் இசையும் தம்மின்
முரித்துப் பாடுதல் முரியெனப் படுமே"§

என்று முன்னையாசிரியன்மாரால் கூறப்படுவதாயிற் றென்க.

---

* சிந். முத்தியி. எஉ. † வளை - சங்கு.

‡ சிலப். கானல்வரி. கசு.

§ சிலப். எ: கக—அ. ப. உ. மேற்கோள்.

மூவகை நிகழ்ச்சி:

இனி, களவு நல்லொழுக்கத்திலேயே கருத்தீர்க்கப் பட்டுப் பகலும் இரவுமாகத் தலைமகன் குறியிடம் போந்து தலைமகளோடு பலகாலுங் கூட்டம் நிகழ்த்தி வந்தமையால் அவன்றன் மறைவொழுக்கம் வெளிப்பட்டு அலராக, அஃதறிந்த தலைமகன் தோழியின் விருப்பத்துக் கிணங்கச் சில காலம் அவ்வலரடங்குமாறு கூட்டம் நீங்கி ஒருவழி நிற்பானென்றும், அவ்வாறு நீங்கிநிற்றல் 'ஒருவழித் தணத்தலா' மென்றும் அகப்பொருணூல்கள் கூறுகிற்கும்.

அலரறிந்த தலைமகன் இவ்வாறு ஒருவழித்தணந்து நில்லானுனல், அவன் தன் தலைவியை ஆங்கு நின்றும் பெயர்த்துத் தோழியின் உதவியைக் கொண்டு யார்க்குந் தெரியாமல் நள்ளிராப்போதில் தன் மனையிடத்துக்கு உடன் கூட்டிக்கொண்டு செல்வான். இங்ஙனவன் செல்லுமாறு 'உடன் போக்கு' எனப்படும்.

இவ் வுடன்போக்கும் அவனுக்கு நிகழாதாயின், தோழியினல் அவன் வரைவு முடுக்கப்பட்டுத் திருமணஞ் செய்துகொள்வான். இதுவே 'வரைந்து கோட'லென்பது.

எனவே இராக்குறி நிகழ்ந்த பின்னர் 'ஒருவழித் தணத்தல்' 'உடன் போக்கு' 'வரைந்து கோடல்' என்னும் இம்மூன்றனுள்ளும் ஏதானுமொன்று தலைவற்கு நிகழுமென்று கொள்ளப்படும். பேராசிரியரும் இவ்வுண்மையைத் திருக்கோவையாருரையிலே 'ஒருவழித் தணத்தல், உடன் கொண்டுபோதல், தோழியான் வரைவு முடுக்கப்பட்டு அருங்கலம் விடுத்து வரைந்து கோடல் இம்மூன்றினு ளொன்று முறைமை'* யென்று உரைத்தனர்.

உடன் போக்கின் இயல்பு:

இராக்குறி நிகழ்ச்சிக்குப் பின் ஊரிலே அலர் வெளிப் பட்டதென்று தலைவன் தோழியின்வாய்க் கேட்ட உடனேயே அவன் தன் தலைவியைத் திருமணஞ் செய்துகொள்

* திருச்சிற். ஒருவழித் தணத்தல்.

ஸல் முறை. அது செய்யானுனல், அவனுக்கு ஒருவழித் தணத்தலாவது உடன் போக்காவது நிகழுமென்ப. இவ் விரண்டனுள்ளும் உடன் போக்கென்பது தலைமகன் தன் தலைவியைத் திருமணஞ் செய்துகொள்ளாமலேயே அவளை ஊரவர் அலர்மொழிக்கு அஞ்சிய தோழியினுல் தான் வற் புறுத்தப்பட்டுத் தன்னூர்க்கு உடனழைத்துச் செல்வதா கும். எனவே தலைவனுக்கு இவ் வுடன்போக்கென்பதே ஒருவகையான திருமண நிகழ்ச்சியாயிற்று.

திருமணமென்பது தலைவனுந் தலைவியுந் தமக்குண் மறைவாய்க் காதலித்து வந்த உண்மையை வெளிப்படை யான ஒருவகை நிகழ்ச்சி நன் முறையினுல் எல்லார்க்குந் தெரியச் செய்தலாகும். அங்ஙனமே இவ் வுடன்போக் கென்பதும் இன்னுனை இன்னுள் காதலித்தனள் என்பதை வெளிப்படுத்துகின்றமையின் இஃதும் ஒருவகைத் திரு மணமேயாகும். இங்ஙனம் இவ் வுடன்போக் கென்பதே ஒரு திருமண நிகழ்ச்சியாய் முடிந்தமையாற்றுன் அகப் பொருளாசிரியன்மார் இதனைக் கற்பியலுட்படுத்து அங்கங்கும் உரைப்பாராயின ரென்க. ஆசிரியர் தொல்காப்பியனுர் கருத்தும் அஃதாதல் 'கரணத்தினமைந்து முடிந்த காலை' *யென் றவரியற்றிய கற்பிய னூற்பாவி னுலும் வெளிப்படும். இவரோ டொப்பவே ஆசிரியர் நக்கீரனுரும் இவ் வுடன்போக்கு நிகழ்ச்சியைப்பற்றிக் கூறவந்த விடத்து,

'இனித் தலைமகளை வரைந்தெய்தினுனல்லன்; அறத் தொடு நின்றவாறே பிரிந்தான்; ஆகலான் அன்னுள் கற் பினுளோ களவினுளோ வென்ற மாணுக்கற்கு இவள் கற் பினுளே யெனப்படும்,' † என்று தெளியக்கூறித் தடை விடைகளான் நன்கு விளக்கினுர். 'கற்பிய' லென்பது தலை வன் தலைவியர் திருமணஞ் செய்துகொண்ட பின்னர் அவர் தாம் நெஞ்சொத்து ஒழுகும் ஒழுக்கமாதலின், அவ் வகையதான கற்பிய லொழுக்கத்தை அத் தலைவன் தலைவி யர்க்கு உடன்போக்கு நிகழ்ந்த அத்துணையானே ஆசிரியன்

---

* தொல், கற்பு. ௫. † இறைய, உ௫.

மார் கொள்வாராயின், அவ் வுடன்போக் கென்பதுந் திருமண மென்பதும் ஒரு வகையில் ஒன்றேயாமென்பது செவ்விதின் தெளியப்படுகின்றதன்றோ? எனவே, உடன்போகிய தலைவன் தலைவியர்க்கு அவ் வுடன்போக்கினும் வேறாகத் திருமண மென்ப தொன்று நிகழற்பாலதான கட்டாயம் முதன்மையில்லை யென்பதும் உடன் தெளியப்படும். இதனை, 'வரைவாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைமகளுந் தோழியும் அவ்வலரை யவன்றனக் கறிவுறுத்தலுமாம்.' என்று ஆசிரியர் பரிமேலழகர் கூறுகின்ற உரையிலும் நன்னுணர்ந்து பின்னுந் தெளியப்படும்.* மறைந்த நிலையில் நிகழ்த்திவந்த களவொழுக்கம் அலராகப் பிறர்க்கு வெளிப்பட்டுவிட்ட அந்த நிலையே கற்பியற் பகுதிக்குத் தொடக்கமாம் என்பது பட "வெளிப்படை தானே கற்பு"† என்று ஆசிரியர் தொல்காப்பியனுர் கிறுத்துக் கூறிய நூற்பாக் கூற்றும் இதனை நன்கு வற்புறுத்தாநிற்கும்.

இனி அலர் வெளிப்பட்டமையைத் தோழி கூறி இவ் வுடன்போக்குக்குந் தன்னை வலித்தபோது தலைமகன் உடன்போக்குமுறை அத்துணை முறைமையன்றென்று மறுக்கின்றமை,

"உடன்சேறல் செய்கையோ டன்னவை பிறவும்
மடம்பட வந்த தோழிக் கண்ணும்"‡

என்னுந் தொல்காப்பியர் நூற்பாவானும்,

'உடன்கொண்டு சென்மினெனத் தோழி கூறியது கேட்ட தலைவன், இவளை உடன்கொண்டு போதல் எல்லாவாற்றானும் முறைமையன்றென்று தோழிக்குக் கூறுவன்'§

என்னும் நச்சினர்க்கினியர் உரையானும் நன்கு தெளியப்படுகின்றமையால், தலைவனுக்கு அவ்வுடன்போக்கு நிகழ்ச்சியில் எண்ணமும் விருப்பமு மில்லையென்பது வெளிப்படும். மேலும், தலைவியை உடன் கூட்டிச் செல்லல் வேண்டு

* திருக்குறள், ககரு-ம் அதி. விளக்கம். † தொல். கற்பு. ௫.
‡ தொல். கள. ௫0. § தொல். கற்பு. ௫.

மென்ற தோழியை 'மடம்பட வந்த தோழி' என்னுஞ் சொற்ஞெடரால், 'அறியா' னென்று தொல்காப்பியனர் மேல் நூற்பாவிற் குறித்துரைக்கின்றமையாலும், இதனை ஆசிரியர் நச்சினர்க்கினியர் 'உடன்கொண்டு போதன் முறைமையன் றென்று அறியாமற் கூறலின், மடம்பட வென்ருர்' என்று எடுத்துக் காட்டுகின்றமையாலும் இவ் வுடன் போக்கு நிகழ்ச்சி அத்துணைத் தகவுடைய தன்றென்பதும் பெறப்படுகின்றது. அற்றன்று, ஈங்கு உடன்போக்கு முறைமையன்றென்று உரை கூறிய நச்சினர்க்கினியரே அகத்திணையியலில்,

> "அறநெறி இதுவெனத் தெளிந்த என் மகளென்று தாய் கூறவே உடன்போக்குத் தருமமென்று மகிழ்ந்துகூறி அங்ஙனம் கூட்டிய நல்வினையைத் தன் நெஞ்சிற்கு விளக்கிப் புலம்பியவாறு காண்க"*

என்றும்,

> 'தந்தை தன்னையர் இஃதறனென்னுது தீங்குசெய்கின்ருரோ என்று அஞ்சும் அச்சமுமென'*

என்றும் ஒரு நூற்பாவுரையிற் கூறுகின்றமையாலும் இங்ஙன மிவர் கூறுமாறே,

> † "மன்னர் கொட்டின் மஞ்ஞை யாலும்
> உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
> சுரநனி இனிய வாகுக தில்ல ;
> அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
> பிறைநுதற் குறுமகள் போகிய கானே"‡

என்று ஐங்குறுநூறும் உரைக்கின்றமையாலும் உடன்போக் கென்பது அறநெறியே யாகுமெனின், அறியாது கூறிஞய் ஈங்குக் கூறிய நச்சினர்க்கினிய ருரையும், ஐங்குறுநூற்றுச் செய்யுளும் உடன்போகிய தலைவியின் தாயினது கூற்ருக

* தொல். அகத்திணை. ௩௬.

† கொட்டின் - முழக்குதலுக்கேற்ப. தலைஇ-சொரிந்து.

‡ ஐங்குறு, மகட்போக்கியவழித் தாயிரங்குபத்து : க.

வருதலானும், அவளும் தன் புதல்வியின் செய்கையையே கூறுகின்றமையானும், புதல்வியாவாரெல்லாரும் தனக்குரிய மணாளனை இயற்கைக் களவுவழியில் முதன் முதற் காண்டற்குக் கடமைப்பட்டிருக்கின்றன ராதலானும், களவொழுக்கத்தினாலே தனக்கு மணாளனென்று துணிந்து கொண்ட பிறகு அவன் இன்பத்திலேயே கருத்து வைத்து அவனைப் பிரியாதுறைதலும், அவன் அலர் மிகுந்து பிரிய நேர்ந்துழி அவனையே பின்பற்றிச்சேறலுந் தலைவியெனப் படுவாட்கு உரியதொன் றாதலானும் மேற்போந்த நூற் சான்றுகளால் அறநெறியெனப் பெறப்பட்டது, தலைவியின் கற்புநெறி வழுவாமை கருதியதனால் என்று கொள்க. இதனால் அது தலைமகனுக்கு அறநெறியாதல் செல்லாது.

ஆகவே இவ்வாறெல்லாம் உடன்போக்கு நிகழ்ச்சி தலைமகனுக்கு அறிநெறியாகாதென்று பேராசிரியன்மாரால் ஓதுக்கப்படுகின்றமையானும், அதனை அத் தலைமகனுந் தானே யறிந்து அது செய்வலென்று வலித்த தோழியையும் மறுத்து அருவருக்கின்றானாதலானும், தோழியை மறுப்பதோ டமையாமல் அத் தோழியைப்போலவே அவள் உரைகேட்டுத் தன்னைக் குறையிரந்து வேண்டிய தன் தலைவியையும்,

* "எல்வளை யெம்மொடு நீவரின் யாழநின்
மெல்லியன் மேவந்த சீறடித் தாமரை
அல்லிசே ராயிதழ் அரக்குத்தோய்ந் தவைபோலக்
கல்லுறின் அவ்வடி கறுக்குந வல்லவோ"†

என்று 'பாலை நிலத்தின் பருக்கைக் கற்கள் நின் சிறு மலரடியைச் சிவக்கச்செய்யு' மென நீரில்லாத ஆற்றிடைக் கொடுமை கூறி உடன்போக்கு மறுக்கின்றானாதலானும் அவ் வுடன்போக்கென்பது தலைமகனுக்குப் பெரும்பாலும் நிகழமாட்டாதென் றறிதல் வேண்டும். ஆகவேதான் அலர் வெளிப்பட்டுத் தோழி அறத்தொடுபட்டதன் பின்னர்த் தலைவனுக்கு நிகழு நிலைகளைக் கூறவந்த,

---

* எல்வளை-பெண்ணே என்னும் பொருட்டு. எல்-ஒளி பொருந்திய. யாழ:அசை. † கலி. கஉ.

* "பட்ட பின்றை வரையாக் கிழவன்
நெட்டிடை கழிந்து பொருள்வயிற் பிரிதலும்,
பொருள்வயிற் பிரியா தொருவழித் தணத்தலும்
புரைவ தென்ப கற்பா லான" †

என்னும் இறையனாரகப்பொருள் நூற்பா, 'ஒருவழித் தணத்தல்' 'உடன் போக்கு' 'வரைந்து கோடல்' என்று இராக்குறி நிகழ்ச்சிக்குப் பின்னர்த் தலைவனுக்கு நிகழு நிலையவாயிருக்கும் மூன்றனுள்ளும் 'உடன் போக்' கென்பதை ஒரு முதன்மையாக வெடுத்துக் கூறாமல், ஒருவழித் தணத்தலும், வரைந்துகோடற் கேதுவாகிய பொருள்வயிற் பிரிதலுமான ஏனை யிரண்டனையுமட்டும் எடுத்துக் கூறுவதாயிற்றென்க. இங்ஙனமே அதன் உரையாசிரியரும் "வெளிப்பட்ட பின்றையும் உரிய களவி" என்னும் அதன் வேறொரு நூற்பா உரையில் "உம்மையால் உடன் போக்கும் உரித்தாமாறு" என்று அவ் வுடன்போக்கினை யொரு முதன்மைப் பொருளாக எடாது உம்மையினாற் றழுவினமையுங் காண்க.

அங்ஙனமானல் அகப்பொரு ணூல்களெல்லாம் ஒருவழித் தணத்தலைப்பற்றி மிகச் சிறுபான்மையாகவும், இவ் வுடன் போக்கினைப்பற்றி மட்டும் மிகப் பெரும்பான்மையாகவும் உரை தருதல் என்னையோவெனின், நன்கு வினயிைய், ஒருவழித் தணத்தலைப் பற்றிய துறைகளும், துறைச் செய்திகளும் மிகக் குறைந்தனவாக, உடன்போக்கைப் பற்றிய துறைகளுந் துறைச் செய்திகளும் மிகப் பெருகியவாதலால் அம் முறையேபற்றி அகப்பொருணூல்களில் ஒருவழித்தணத்தல் மிகச் சிறுபான்மையாகவும் உடன்போக்கு மிகப் பெரும்பான்மையாகவுங் காணப்படுதல் கொண்டு, இவ்வாறு நூற்களிற் காணப்படுஞ் சிறுபான்மை பெரும்பான்மைகட் கேற்ப, எடுத்துக்கொண்ட பொருள்களின் நன்மை தீமைகளையும் முதன்மை கடமைகளையுந் தேர்ந்து துணிதல் பொருந்துமோவென்பது. எனவே இதுகாறுங் கூறியவாற்றால், இராக்குறி நிகழ்ச்

* புரைவது - ஒப்பது. † இறைய : உ௯.

சிக்குப்பின் அலரெழுந்தமை யறிந்த தலைமகன் ஆண்டும் வரைதல் தெளியானாயின், அவற்கு 'ஒருவழித் தணத்தல்' நிகழ்வதே பெரும்பான்மையும் அறநெறியுமாமன்றி, உடன்போக்கு நிகழ்தல் ஆகாதென்பது தெற்றெனப் பெறப்படும்.

## ஒருவழித் தணத்தலின் இன்றியமையாமை :

இனி இவ்வாறு முடிக்கப்பட்ட முடிபுக்குச் சான்றாய் நின்று வலிவு தருவதான வேறொரேதுவும் இறையனாரகப் பொருளுரையிற் கூறப்படுகின்றது. அது,

"இங்ஙனமே இவள் (தலைவன் உடன்பட்டது போலவே உடன்போக்குக்கு) உடன்படும். உடன்பட்டது உணர்ந்துவைத்துத் (தோழி) தாயுழைச் செல்லும். தாயும் மகளது வேறுபாடு கண்டு உற்றதறியாது*நற்றிறம் படர்ந்துசெல்கின்ற காலமன்றே! ஆதலாற் கண்டவாறே, அன்னாய்! என் மகட்கு இவ் வேறுபாடு எற்றினாயிற்று? எனக்குச் சொல்லா யென்னும்...(அதற்குத் தோழி) அறத்தொடு நிற்கும். நிற்க, செவிலித்தாய் இன்புற்ற மனத்தளாய் என் மகள் பெரிது அறிவு உடையளேகா ணென்று அவ்வாறு நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும். நற்றாயும் இன்புற்ற மனத்தாளாய்த் தந்தைக்குந் தன்னையன்மார்க்கும் அறத்தொடு நிற்கும். நிற்க, அவரும் அவளது அறிவும் ஆசாரமுங்கேட்டு இன்புற்ற மனத்தராய்ச்சொன் மறுத்துத் தலையிறைஞ்சி நிற்பர். இங்ஙனஞ் சென்று மாட்சிமைப்பட்டுக் காட்டுமேயெனின், பெரிதும் மாட்சிமைப்பட்டுக் காட்டிற்று. காட்ட இவள் நீர்இல் ஆற்றிடைப்போய் வருந்துங் துறை யென்னை யென்று தலைமகனைச் செலவழுங்குவிக்கும். இதுகேட்ட தலைமகன் செலவழுங்கும். அழுங்க, நாளை நீ வரைந்து புகுத நினக்கு வரைவு மாட்சிமைப்படுமென்று தலைமகனைத் தவிர்த்துப் பெயர்ந்து தலைமகளுழை வந்து, நிழலும் நீரும் உடையவாய்க் கானந் தண்ணியவானற் சேறுமென்று உடன்போக்கு அழுங்குவித்தவிடத்துத் தலைமகனும் அந்நாள் வரைவொடு விரைந்து புகுவானும். இது வெளிப்பட்ட பின்றைக் கிளவியும் உரியவாயினவாறு"†

என்பது.

அலரறிந்த தலைமகட்கு வேறுபாடென்பது எவ்வாற்றானும் விளைந்தே தீருதலானும், அதனை அவள் எவ்வளவு

---

* நற்றிறம் - நன்மைக்குரிய வகையில். படர்ந்து - தாவி.

† இறைய: உ௩.

தான் உள்ளடக்கி வைத்திருந்தாளாயினும் அஃது எஞ்ஞான்றும் அவளைச் சூழ்ந்துகொண்டேயிருக்குஞ் செவிலித்தாய் முதலியோர்க்கு என்றொரு நாளாதல் எவ்வாறேனும் புலப்பட்டே யொழிதலானும், ஒழியவே அப் 'புலப்பாடு காணுஞ் செவிலித்தாய் முதலியோர் கட்டாயம் அவள் பருவத்திற்கு ஐயுறாதிராராதலானும், ஐயுற்றவர் உடனே அவள் காதற்றோழியை வினவாதுமிராராதலானும், வினவுவார்க்கு அத் தோழியாவாளும் உண்மையே பேசும் அறநெறி வழாதவளாதலின், அவள் தன் தலைவிக்கு நிகழ்ந்த வேறுபாட்டுண்மையை எவ்வகையிலேனும் எடுத்துரைப்பதே செய்வளாதலானும், எனவே இவ்வுண்மையை வாயில் வழியேயுணர்ந்த தலைவியின் பெற்றோரும் அவளை அவள் காதற்றலைவனுக்கு எவ்வாற்றானுந் திருமணம் செய்விக்கவே முயல்வராதலானும் தலைமகன் உடன் போக்கு நிகழ்ச்சியை மேற்கொள்ளுதற்குச் சிறிதுமே இடமில்லையென்பது எட்டுணையும் ஐயுறவின்றித் துணியப்படுகின்றது. தலைவியின் பெற்றோர் முதலியோரும், தலைவனும், தலைவி தோழியரும் நுண்ணுணர்வு சாலாராயிருந்தவிடத்துத்தான் எங்கோ மிகச் சிறுபான்மையேயாய் உடன்போக்கு நிகழுமென்க. எனவே, அலருணர்ந்த தலைமகற்கு உடன்போக்கு இஃநிலையேயாய் மேற்கொள்ளப்படாது கழிந்தொழிய, இனி அவனாற் கட்டாயமாய் மேற்கொள்ளற்பாலதாயுள்ளது 'ஒருவழித் தணத்த' லாமன்றோ?

**அதன் மேன்மை :**

இனி இவ் 'வொருவழித் தணத்தல்' அவனுக்கு அறநெறியேயாய் நின்று நன்மை பயக்குமாறும் ஆராயற்பாலது. ஊரிலே அலர் மிகுந்ததென்ற அளவானே அவ் வலரடங்குமாறு தலைவன் ஒருவழித் தணந்து நிற்கின்றானென்பதொன்றே அஃது அறநெறியாகு மென்பதனை நன்கு விளங்கவைக்கும். மேலும், 'நிழலருமை வெயிலில்

தெரியு'மென்னும் பழமொழியினை யொப்ப, உழுவலன்பு பாராட்டி உலவா வின்பந்தருந் தன் தலைவி யாவாளின் காதற்கூட்டமேன்மை, அதனை எளிதிற் பெறமாட்டாது தனித்திருந்து வருந்துந் தலைமகனொருவனுக்கே செவ்வை யாய்ப் புலப்பட்டு விளங்கும். இன்னும் அலரெழுந்த தென்று கேட்டுத் தன் தலைவியைக் குறியிடம் பெற்றுக் கூடல்பெறாத தலைவனேவெனின், இனித் திருமணஞ் செய்துகொள்ளு நிலையினனாய் இருக்கின்றான். எனவே அவன் தனது திருமண நிகழ்ச்சியினாற் பெறப்போவதோ ரின்பத்தைச் சிறப்பப்பெறல் வேண்டுகின்றானாதலின், அவ னதனைப் பெறுதற்கு முன் அத் தலைவியைக் கூடல் பெறா னாய்ப் பிரிந்து வருந்துநிலையினனாயும் இருக்கின்றான். தலைவன் இவ்வாறு பிரிந்து வருந்த வருந்த அவன்றன் உள்ளம் துன்ப வண்ணமாய் மாறிவிடுதலின், அதன் பின் அவன் அத் துன்பத்திற்கு மாறான இன்பமென்பதில் ஒரு சிறிதே தோன்றப்பெறுவனாயினும் அதனை மிகப்பேரின்ப மாய் நுகர்ந்துணருஞ் சுவைத்த நிலை அவனுக்கு உண்டா கின்றது. இதனையே நாயனார் காதன் மக்களின் காதலுணர்ச் சியைப் பயிரெனக் கொண்டு, அவ்வுணர்ச்சியை அதற்குரி யாரொடு கூடி நுகர்தற்குப் பேரிடையூறுகளாயிருக்கும் ஊரவர் அலர்மொழியையுந் தமர்களின் கொடுமொழியை யும் முறையே அவ்வுணர்ச்சிப் பயிரை வளர்க்கும் எருவாக வும் நீராகவும் எடுத்துக் காட்டி,

* "ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்" †

என்று உரைத்தார். காதலுணர்ச்சியை நுகர்தற்கு இடை யூறாயிருக்கும் அலர் பிரிவு முதலியவைகளால், அவ் வுணர்ச்சி மேன்மேலும் பெருக்கெடுக்கின்ற தென்னும் உண்மையை வேறோர் உவமைவாயிலாகவும் வள்ளுவனார்,

‡ "நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காமம் நுதுப்பே மெனல்" §

---

* கவ்வை-அலர்மொழி. ‡ திருக்குறள், அலரறிவுறுத்தல்: எ.
† நுதுப்பேம்-அவிப்பேம். § ,, ,, அ.

என்று விளக்கினர். பொருளுந் திறமும் வாய்ந்த இவ்விரண்டு வளவிய குறட்பாக்களினலும் பிரிவு முதலியவைகள் எவ்வளவுக் கெவ்வளவு மிகுதியாய் உண்டாகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு தலைவன் தலைவியர்க்கு அன்பும் வேட்கையும் முன்னிலையினும் பெருகி யுண்டாமென்பது நன்கு விளங்காநிற்கின்றது. ஆதலால் திருமண இன்பம் சிறந்து தோன்றல் வேண்டுமானல், அத் திருமணத்துக்கு முன்னர்த் தலைவனுந் தலைவியும் அலர் ஏதுவாக ஒருவழித் தணந்து நிற்றலும் முறையேயாகின்றது. இனி அவர்கட்கு அவ்வாறு இடையீடு நேர்தல் இயல்புமாகுமென்பதுங் கருத்திருத்தற்பாலது.

அது தலைவி காரணமாக நிகழ்தல் :

இனிக் களவுகாலத்துத் தலைமகன் இவ்வாறு ஒருவழித் தணந்து நிற்கின்றமையால் அவனுற் கூட்டத்திற்கு இடையீடு விளைவதாக, இறையனரகப்பொருள்,

"களவினுள் தவிர்ச்சி கிழவோர்க்கு இல்லை" *

யென்று கூறியதன் கருத்துத்தான் யாதோவெனின், தலைவன் ஒருவழித் தணந்து நிற்கின்றமைக்கு, ஊரவர் அலர் மொழிக்கஞ்சிக் குறியிடத்திற்கு வரமாட்டாத தலைவியே ஏதுவாவதன்றித் தலைவன் ஏதுவாவதில்லை. தோழியுந் தலைவியுங் குறியிடத்திற்கு வரக்கூடுமானல், தலைவன் யாதொரு தடையும் அச்சமும் இல்லானய்க் கட்டாயங் களவு நிகழ்த்திக்கொண்டே யிருப்பான். திருமணம் முடியுமளவும் உள்ள களவு காலத்தில் அவன் எஞ்ஞான்றும் பிரிதலே செய்யான். இதனையே ஆசிரியர் தொல்காப்பியனரும்,

†"வெளிப்படை தானே கற்பினே டொப்பினும்
ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக
வரையாது பிரிதல் கிழவோர்க் கில்லை" ‡

* இறைய: ௩௩.

† ஞாங்கர்-முன்பு. மூன்று என்றது, ஓதல், பகை, தூது காரணமாகப் பிரியும் பிரிவுகளை.

‡ தொல். களவு: ௰.

என்று திட்டமாய் எடுத்துக் கூறினர். ஆகவே தலைவன் களவு காலத்தில் ஒருவழித்தணந்து நின்றமை தலைவியி னாலேயாமல்லது தலைவனாலன்று. எனவே, 'களவினுள் தவிர்ச்சி கிழவோர்க்கு இல்லை' யென்னும் இறையனாரகப் பொருள் நூற்பாவின் கருத்து, 'களவொழுக்கம் நிகழும் வரையில் இடையீடென்பது தலைமகன் ஏதுவாக நிகழ்த லில்லை; ஆனால் தலைமகள் ஏதுவாக நிகழ்தலுண்டு' என்பதே யாமென் றறிதல்வேண்டும்.

ஆகவே இக் கூற்றுகளால், அலரெழுந்த காலத்தில் வரைந்துகோடலில்லாத தலைவற்கு நிகழு நிலையவாயுள்ள 'ஒருவழித்தணத்தல்' 'உடன் போக்கு' என்னும் இரண்ட னுள்ளும் 'ஒருவழித்தணத்த' லென்பதே அறநெறிக்கும், ஆன்றோர்தம் புலனெறி வழக்கிற்கும், முறைக்கும், இயல் புக்கும் மாறாகாதவகையில் அவற்கு நிகழ்தற் சிறப்புடைய தென்பது தெள்ளிதின் விளங்கிற்று.

## களவொழுக்கத்தின் சிறந்த பிரிவுநிலை :

இனி, ஒருவழித்தணந்து தன் அரண்மனைக்கண் தனி யிருந்துறையுந் தலைவன், இப் பிரிவென்பது அவற்கு மிகக் கொடியதாதலின் மிகவும் வருந்து நிலையினனாய், தன் தலை வியையும் அவளை ஏதோரிடையூறுமின்றிக் கூடுதற்கான வழியினையும் நினைந்த வண்ணமாய் இருப்பான். தலைவி யின் கூட்டச் சிறப்பினை நினைந்து பார்க்குங்கால் அவ னுக்கு ஆராத பேரன்பு கொப்புளித்தெழும். இனி அவளை அலர் முதலான இடையூறுகளின்றிக் கூடு நெறியினை நினைந்து பார்க்குங்கால் ஆராய்ச்சியுண்டாக, அதன்வழி அறிவும் விரிவடையும். இவ்வாறே தலைவிக்குங் கொள்க. தலைவனுக்குத் தலைவியும், தலைவிக்குத் தலைவனும் நீங்க லாக அவர்கட்கு உலகத்திலுள்ள வேறு எந்தப் பொருளை யெடுத்துக்கொண்டாலும் அவற்றால் இத்துணைப் பேரன்பும் பேரறிவும் விளைந்திடுமென்று கருதுதற்கில்லை. ஆகவேதான் இக் காதற் களவொழுக்கமும், அதன் முகத் தால் எய்தப் பெறுங் கற்புவாழ்க்கையும் இறைவனடி

யினை அணைதற்குரிய அறிவு அன்பு இன்பங்களைப் பயக்கும் இணையற்ற கருவிகளாய் மக்கட்கு அமைந்திருக்கின்றனவென்பது தலைவன் தலைவியர்க்கு முதல் நிகழ்ச்சியாய் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சியிலிருந்து இவ்வொருவழித் தணத்தல்காறும் பகற்குறி இராக்குறி முதலியவற்றால் நேர்ந்த பிரிவுகளைவிட இவ்வொருவழித் தணத்தலானுண்டான பிரிவே அன்பையும் அறிவையுந் தக்காங்கு நிரம்ப விளைத்தற்குரிய அருமைக் கருவியாயுள்ள தென்பது கருத்திருத்தற்பாலது. வரைந்துகோடலை எல்லையாக உடைய களவொழுக்கம் முழுமையிலுமே இவ்வொருவழித்தணத்தலென்பதுதான் தக்க பயன்றரவல்ல உண்மைப் பிரிவிலக்கணத்தை யுடையதாகும். ஏனென்றால், திருமணத்திற்கு முன்னால் நிகழ்வதாயுள்ள 'வரைபொருட்பிரித'லெனும் மற்றொரு பிரிவு 'திருமணம் செய்துகொள்ளப் போகின்றோம்' என்னுந் திருமண நோக்கத்துடன் தலைவன் தலைவியர்க்கு நிகழ்தலின், அஃதவர்கட்கு ஒருவகையான அமைதியையே தந்தொழிவதாமன்றி, இவ்வொருவழித் தணத்தலைப்போல முன்னாற் றுன்பமும் பின்னாலதன் பயனான பெரிய இன்பமுந் தருதற்குரிய பேரன்பும் பேராராய்ச்சியும் பேறறிவும் முறைமுறையே விளைக்கும் அத்துணை உண்மையான பிரிவிலக்கணத்தை யுடையதன்றாதலினென்க.

## கூடலிழைத்தல் :

இங்ஙனமெல்லாந் தலைவன் தன் தலைவியை நீங்கித் தனியேயிருந்து, இரங்கத் தக்கவாறு வருந்து நிலைமை அவனுக்கோர் எய்ப்பில் வைப்பாயிற்று. இவ்வாறே தலைவியும் அந்நேரத்திற் றனியிருந்து வருந்திப் பின் வருவதொரு பேரின்பத்தை நுகர்தற்குத் தக்கவாறு தனது உணர்ச்சியை ஒழுங்கு செய்துகொள்வா ளாகின்றனள். தலைவன் ஒருவழித் தணந்திருந்தபோது தலைவி வருந்து நிலைகளையெல்லாந் திருச்சிற்றம்பலக்கோவை யாசிரியர் மிகவும் விளக்கமாக அருளிச் செய்கின்றனர். 'அகன்றணைவுகூறல்' 'கட

லொடு வரவு கேட்டல்' 'கடலொடு புலத்தல்' 'அன்னமோ டாய்தல்' 'தேர்வழி நோக்கிக் கடலொடு கூறல்' 'கூட லிழைத்தல்' 'சுடரோடு புலம்பல்' 'பொழுதுகண்டு மயங் கல்' 'பறவையொடு வருந்தல்' 'பங்கயத்தோடு பரிவுற் றுரைத்தல்' 'அன்னமோ டழிதல்' 'வரவுணர்ந்துரைத் தல்' 'வருத்த மிகுதி கூறல்' என்று பதின்மூன்று துறை கள் திருக்கோவையாரில் ஒருவழித் தணத்தலுக்குக் கூறப்படுகின்றன. இவற்றுள், ஊரவர் அலர் கண்ட உடனே இராக்குறிப்போதில் தலைவனை அண்மி, 'நீங்கள் சில காலந் தலைவியை அகன்று பின்னர் அணைதல் நன்' றென்று கூறலாயுள்ள 'அகன்றணைவு கூற'லும், தலைவன் ஒருவழித் தணந்துவந்த பிறகு அவன் வரவினை யுணர்ந்து தலைவியின் நிலையினை அவனுக்கு நிலவுக்குரைப்பாள் போல உரைத்தலான 'வரவுணர்ந்துரைத்த'லும், பின் னர்த் தணந்து வந்த தலைவனை நேராய் எதிர்ப்பட்டுத் தலைவியின் 'வருத்த மிகுதிகூற'லுந் தோழியின் கூற்றுக் களாகும். எனவே இம்மூன்று துறைகளும் நீங்கலாகக் 'கடலொடு வரவு கேட்டல்' முதலான ஏனைப் பத்துத் துறைகளும் ஒருவழித் தணத்தலின்கண் தலைவி யெய்திய உள்ளநிலையினை நன்கு புலப்படுத்துவனவேயாம். அவற் றுள் ஒன்றுமட்டும் இங்குக் குறிக்கப்படுஞ் சிறப்புடை யது. அது 'கூடலிழைத்த' லென்பது.

அஃதாவது, தலைவன் பிரிவினுக்கு ஆற்றாது வருந்துந் தலைவி அவன் வருகின்ற நாளை அறிய நினைந்து அதற் கொரு குறி பார்ப்பாள். அதனைப் பிறரிடம் பார்ப்பாளா யின் தனது களவொழுக்கத்தைத் தானே புலப்படுத்தின ளாம். அன்றித் தன் தோழியின் மாட்டுப் பார்ப்பாளா யின், அவள் தன் தலைவியின் ஆற்றாமையைத் தணித்தற் காக உண்மையல்லாத வொன்றையுங் கூறிவிடுவள். ஆத லால் தலைவி தானே அக் குறியினைப் பார்க்க எண்ணித் தன் தோழியோடு விளையாடுமிடஞ் சென்று ஆங்கோர் பாங்கர், மணலாயுள்ள இடத்தை மேடுபள்ள மில்லாமல் நேராய்ப் பரப்பி அம் மணல் பரப்பின் மேலே தான்

இருந்துகொண்டு தன்னைச் சுற்றியொரு கோடு கிழித்து முதலில் ஒரு பெரிய வட்டம் அமைப்பள். அதன் பிறகு தலைவி தன் கண்களைக் கட்டிக் கொண்டு தனக்கெதிரி லுள்ள அப் பெரிய வட்டக் கோட்டில் ஓரிடத்தைக் குறி யிடமாக வைத்து அங்கிருந்து தொடங்கி அவ் வட்டக் கோட்டின் மேலேயே அக் கோடு முழுமையுஞ் சிறு சிறு வட்டங்களாக ஒன்றையொன்று தொடுமாறும், முதலில் தொடங்கிய குறியிடத்தில் வந்து முடியுமாறும் கோடு சுழித்துக்கொண்டே வருவாள். தொடங்கிய இடத்தில் அச் சிறு வட்டத்தொடர் வந்து கூடாமற் பிறழ்ந்து விட்டால், எப்படியாயினும் அது தலைக்கூடுமாறு மீண்டுந் திருத் தித் திருத்திச் செய்வாள். இங்ஙனமாக முதலுங் கடையுங் கூடுமாறு செய்தலைத்தான் 'கூடலிழைத்த' லென்ப. இக் கூடல் இழைத்த பின்பு தலைவி தன் கண்களைத் திறந்து பார்த்து அப் பெருவட்டக் கோட்டின் மேலுள்ள சிறிய சுழிகளை எண்ணிப்பார்ப்பாள். அச் சுழிகள் இரட்டைப் படையாய் வந்தால் தலைவன் அன்று வருவானென்பதும், ஒற்றைப்படையாக வந்தால் அன்று வாரானென்பதுங் கருத்து. அதற்காக, முதலில் எண்ணிப் பார்க்கும்போது சுழிகள் ஒற்றைப்படையாக வந்துவிட்டால், தலைவி தான் எண்ணியதுதான் ஒரு கால் தவறுயிற்றேவென்று மீண் டும் மீண்டும் எண்ணுவாள். இரண்டு மூன்று முறை எண்ணிப் பார்த்தும் அவ்வொற்றைப்படை யெண்ணே வருமானல் அவள் நெஞ்சம் நைந்து வருந்துவாள். இத னையே,

* "ஆழி திருத்திச் சுழிக்கணக் கோதிநை யாமலைய
வாழி திருத்தித் தரக்கிற்றி யோவுள்ளம் வள்ளலையே"†

என்று கோவையாசிரியரும்,

'கூடலை யிழைத்துச் சுழிக்கணக்கைச் சொல்லி யான் வருந்தாமல்'† என்று அதன் உரையாசிரியர் பேராசிரியரும்

---

* ஆழி-வட்டம்.

† திருச்சிற். க௮௬.

தெளியக் கூறினர். தலைவனைப் பிரிந்த தலைவியர்க்கு இவ் வழக்க முண்மையை,

* "வீங்கிழை நெகிழ விம்மி ஈங்கே
எறிகண் பேதுறல் ஆய்கோ டிட்டு
சுவர்வாய் பற்றுநின் படர்சேண் நீங்க
வருவே மென்ற பருவம் உதுக்காண்" †

என்று குறுந்தொகைச் செய்யுளும் எடுத்துக் கூறுதல் காண்க.

---

## ௬௨. அறத்தொடு நிற்றல்

[ஊழின் வழியாக நிகழ்ந்த இயற்கைக் கூட்டத்தைக் குற்ற மில்லாதவகையாய்த் தலைவி தோழிமுதலியோர், தோழி செவிலி முதலியோர்க்கு எடுத்துக் காட்டிக் கற்பு வழுவாது நிற்றல்.]

காமர் கடும்புனல் கலந்துஎம்மோடு ஆடுவாள்
தாமரைக் கண்புதைத்து அஞ்சித் தளர்ந்ததனோடு
[ஒழுகலான்,
நீள்நாக நறுந்தண்தார் தயங்கப்பாய்ந்து அருளினாற்
பூண்ஆகம் உறத்தழீஇப் போதந்தான் அகன்அகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனால், என்தோழி
அருமழை தரவேண்டின் தருகிற்கும் பெருமையளே.

—கலித்தொகை; குறிஞ்சி: ௩.

'தாயே! எங்களோடு கூடி விருப்பந்தரற்குரிய நிரம் பிய நீரையுடைய மணிச்சுனை யொன்றில் நீராடுகின்ற வள், திடீரென்று கால் தளர்ந்து அஞ்சித் தாமரை போலுந் தன் மலர்க்கண்களை மூடி அந்நீரொழுக்கினோடு அடித்துச் செல்லுகையினாலே, அஞ்ஞான்றொரு தோன்றல் ஆங்குத் தோன்றிப் புன்னைப் பூவினாலான மணம் பொருந்

---

* பேதுறல் - மயங்கற்க. படர் - துன்பம்.

† குறுந். ௩௫௮.

திய குளிர்ந்த தனது நீண்ட மலர்மாலை அசையும்படி இவள் மார்பு தன் மார்பினோடு அழுந்திப் பொருந்த அணைத்தெடுத்துக் கொண்டு கரையிலே போந்தான்; ஆகவே அவன்றன் அகன்ற மார்பினை இவளுடைய எழுகின்ற கொங்கைகள் அணைந்தன வென்னுங் கருத்தால் பெயற்கரிய மழையினைப் பெய்விக்கும்படி நாம் விரும்பினாலும் அங்ஙனமே அதனைப் பெய்வித்துத் தரவல்ல கற்பொழுக்கப் பெருமையினை என் தோழி உடையளாயினள்' என்பது.

கடும்புனல் - இங்குக் கடுமை மிகுதிப் பொருளது. ஆசிரியர் இளம்பூரணரும் 'கடும்புனல்' என்பதனை 'மிக்க புனல்' என்றே தொல்காப்பிய உரியியலில்* உரை கூறினர். ஆடுவாள்: வினையாலணையும் பெயர். போதந்தான்; போதரு: பகுதி. 'அகன் அகலம்' என்பதில் 'அகலம்' என்பது இருமுறை வருதலின், அதற்கு 'மிகவும் அகன்ற மார்பு' என்று பொருள் கொள்க. இறைவன் செயலினால் அவன் ஆகமும் இவள் மார்பும் ஊழ்வினை யிருந்தவாறே ஒன்றோடொன்று பொருந்திவிட்டன வென்னுங் கருத்தால், இவள், கற்பொழுக்கப் பெருமையை மேற்கொள்ள வேண்டியதாயிற் றென்றாள். எனவே, 'என்பதனால்' என்பது 'என்னுங் கருத்தால்' என்று இங்குப் பொருள் தராநின்றது. ஆனால் ஆசிரியர் நச்சினார்க்கினியர் அதற்கு 'என்று பிறர் கூறுகின்ற கூற்றாலே', யென்று உரை யெழுதுகின்றார். சுனைக்கண் நிகழ்ந்த இவ் வியற்கைப் புணர்ச்சி நிகழ்ச்சி பிறர்க்குத் தெரியுமியல்பிற்றன் றாகைமையாலும், செவிலிக்கு அறத்தொடு நிற்கும் இத் தோழிக்குக் கூடத் தலைவி அறத்தொடு நின்ற பின்னரே அது தெரியுமானமையாலும், அங்ஙனம் தலைவி தனக்கு அறத்தொடு நிற்குமாற்றால் தோழி உண்மையறியும் வகையை இறையனார் களவியல் கிளந்தோதுமானமையாலும்† பிறர் கூறுகின்றாரென்பதற்கன்றிப் பிறவி யுணர்ச்சியினாற் கற்பொழுக்கம் மேற்கொள்ளலே நற்பெண்டிர்க்குச் சிறந்த

* தொல். உரி. அ0.  † இறை. உக.

ஒழுக்கமாமானமையாலும் அவருரை ஈண்டுச் சிறந்து தோன்றுமாறில்லை. தலைவியின் கற்பினை, மழையைவேண்டி னும் அதனைத் தரவல்ல கற்பு என்று சிறப்பித்தாள், பெண்டிர்தங் கற்புக்கு நினைந்தாங்கு மழைபெய்வித்தலை ஓரடையாளமாகப் பழந்தமிழ் நூல்களெல்லாம் ஒருங்கே கூறுகின்றன.

"மண்டிணி ஞாலத்து மழைவளர் தரூஉம்
பெண்டி ராயிற் பிறர்நெஞ்சு புகாஅர்" *

என்று மணிமேகலை கூறுதலுங் காண்க. 'பாடின்றிப் பசந்தகண்' என்னும் பாலைக்கலி யுள்ளும் 'வான் தருங் கற் பினள்'† என்று வருதல் நினைவுகூரற்பாலது.

தலைவியின் ஆற்ருமை யுணர்ச்சி:

தலைவன், தோழி தலைவியரின் வேண்டுகோட்கிணங்கி ஊரவர் அலர்மொழி அடங்குதற்பொருட்டு ஒருவழித் தணந்து தனது இல்லகத்தே இருந்தமையின், தலைவி ஆற்ருளாய் வேறுபட்டாள். கற்புடைப் பெண்டிர்க்குக் கணவனைப் பிரியும் ஒவ்வொரு நொடியும் ஒவ்வோரூழியாய் நின்று மிக்க வருத்தத்தினை விளைத்தலால், அவர்க்கு அவ் வருத்தத்தாலான வேறுபாடு உடனே பொள்ளெனப் புலப்பட்டுத் தோன்றிவிடும்.

"தன்வயிற் காத்தலும் அவன்வயின் வேட்டலும்
அன்ன இடங்கள் அல்வழி யெல்லாம்
மடனொடு நிற்றல் கடனென மொழிப" ‡

என்னுந் தொல்காப்பியப் பொருளியனூற்பாவிலே தலைவன் பரத்தையர்மாட்டுச் சென்றொழுகும் புறத்தொழுக்கத் தைக் கரந்து கூறுங் காலத்திலல்லாமல் மற்றக் காலங் களில் அவன்பாலுற்ற தனது வேட்கை நிலையினைப் புறத் துக் காட்டாது நிற்றலே தலைவிக்குக் கடனென்று ஆசிரி யர் தொல்காப்பியனூர் கட்டளையிட்டுரைத்தலின், ஈங்குத்

* மணி. உஉ : சுடு-சு. † பாலைக் கலி. கடு.

‡ தொல். பொருளியல். கக.

தலைவன் ஒருவழித் தணந்து நிற்றலாற் காப்புக் கைம்மிக்குத் தன்னகம் நிற்குந் தலைவி தன் காதல் வேட்கையினைப் பிறர்க்குப் புலப்படுத்திக் காட்டினுளென்றல் என்னை யெனின், அவள் தன்னாற்றலுக்குள் அடங்கி நின்று அங்ஙனம் புறத்தார்க்குப் புலப்படுத்திக் காட்டினுள் அல்லள். ஆசிரியர் தொல்காப்பியனார் மேல் நூற்பாவிற் கூறினமையெல்லாம் தலைவி தன்னுணர்ச்சியோடு நின்று மகிழ்ச்சியின்கண்ணளாய்த் தன் தலைவனை மணந்து கற்பொழுக்கத்தில் நின்றஞான்று நேர்வனவே யல்லாமல், அவள் தன் தலைவன் பிரிவாற்றாமையினால் தன்னுணர்ச்சி யிழந்து துன்பத்தின்கண்ணளாய் நாண் கெட்டு நிறை யழிந்து மணம்பெறவியலாது மயங்கிக் களவொழுக்கத்தில் நிற்குஞான்று நேர்வனவல்ல. ஆதலால் பிரிவு காலத்தில் தலைவியை யறியாமலே அவள் களவொழுக்கத்தினாலான காதலன்றன் ஆற்றாமையுணர்ச்சி,

> "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
> கடுத்தது காட்டும் முகம்"*

என்னுந் திருவள்ளுவர்தம் திருவாய்மொழிக் கருத்தினோடொப்ப வெளிப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாவதாயிற் றென்க.

இங்ஙனம் புலனாயது கண்ட தோழி, 'எனக்கிவ்வாறு புலப்பட்டாற்போலவே இனித் தாய்மார்க்கும் இது புலப்பட்டொழியு மாதலானும், அவர்க்குப் புலப்படு மாயின் அவர் மிகவும் வருந்தி, உண்மை யறியாமையான் அந் நோட்டந் தெரியும் பிறரை வினவத் தொடங்கி அங் ஙனம் வினவுமுன் யான் எப்போதுந் தலைவியின்பொறுப்பு மேற்கொண்டு அணுக்கமாய் நிற்றலால் என்னை வினவுவா ராதலானும், அதற்கு யான் தக்காங்கு மறுமொழி பகருங் கடப்பாடுடையே னாதலானும், அற்றாயின் அஞ்ஞான்று என்னை மறுமொழி பகர்வேன்' என்று இங்ஙனம் நினைந்து, அவள், ஆராய்ச்சி மிக்க நுணுகிய நல்லறிவுடைய ளாத

* திருக்குறள், குறிப்பறிதல். கூ.

லால் ஆராய்ந்துகொண்டிருப்பாள். இருந்த நிலையில், அவள் நினைந்தவண்ணமே அவட்குத் தாயான செவிலியும் ஒரு வேலை மேற்கொண்டு ஆண்டுப் போந்து தலைவியை நோக்கிச் சிறிது வேறுபாடுணர்ந்தாளாய் ஐயுற்றுப் பின்னும் அவளை அடிமுதல் முடிகாறும் உற்றுநோக்கி வேறுபாட்டுண்மையை முற்றுமுணர்ந்து அருகுநின்ற தோழியை விளித்து, 'என்னே இவட்குற்ற வேறுபாடு?' என்று கேட்பாள். தோழி மிக்க ஆராய்ச்சியோடும் விழிப்போடுங் கெடுதியுந் துன்பமும் எவர்க்கும் நேராதபடி மேலே தலைப்பிலெடுத்துக் கொண்ட செய்யுட் கருத்தை அச் செவிலிக்கு உரைதருவாள். இங்ஙனம் இவள் உரைதருதலையே 'தோழி செவிலிக்கு அறத்தொடுநிற்ற'லென்ப.

புரைதீர் கிளவி:

இனித் தோழி இவ்வாறு உரைதரற்கு 'அறத்தொடு நிற்ற'லென்பது என்னையென ஆராய்தல் வேண்டும். 'அறத்தொடு நிற்ற'லென்பது தானுந் தன் தலைவியும் இதுகாறும் அறத்தொடு பொருந்தவே நடந்திருப்பதாகத் தோழி காட்டி நிற்றலென்று பொருள்படும். அறம் என்பதை இங்கு முறை, தக்கது என்று கொள்ளல் வேண்டும். இறையனாரகப்பொருளுரையாசிரியரும்'அறமென்பது தக்கது, தக்கதனைச் சொல்லி நிற்றல் தோழிக்கும் உரித்தென்றவாறு; அல்லதூஉம், பெண்டிர்க்கு அறமென்பது கற்பு, கற்பின் றலைநிற்ற லென்பதூஉமாம்'* என்று இவ்வாறே உரைகிளந்தா ரென்க. தலைவனுந் தலைவியும் முதன் முதல் இயற்கைப் புணர்ச்சி ஞான்று ஒருவரையொருவர் தலைப்பட்டுப் புணர்ந்த களவொழுக்கச் செய்தி தம்மேற் குற்றந் தீர்ந்த அறச்செய்கையே யாகுமென்று இவ்வாறு தோழி கூறுதலே அறத்தொடு நிற்றலா மென்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துமாம். அவர்க்கு இக் கருத்துண்மை, தோழியின் கூற்றுகளையெல்லாந் தொகுத்துக்கூறுமிடத்து

"முன்னிலை அறன்எனப் படுதலென்று இருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"†

---

* இறைய. ௩௧.  † தொல். களு. உ௩.

என்று அவள் அறத்தொடு நிற்குங்காற் கூறுங் கூற்றினையும் எடுத்து அவர் கூறுதற்கண் மிகவும் தெளிவாய்ப் பெறப்படுகின்றது. இந்த நூற்பாத் தொடரினை ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'அறனெனப் படுதல் இருவகைப் புரைதீர் முன்னிலையென்று கிளவி தாயிடைப் புகுப்பினும்' என்று உரைநடைப்படுத்தி, 'அறனென்று சொல்லப்படுந் தன்மை இருவர்கண்ணுங் குற்றந் தீர்ந்த எதிர்ப்பாடு என்று செவிலியிடத்தே கூறி அக் கிளவியை நற்றாயிடத்துஞ் செலுத்தினும்' என்று அதற்கு விளக்கமான உரையுங் கூறுமாற்றான், தலைவிக்கு நிகழ்ந்த களவொழுக்கம் அவள்மேற் குற்றந் தருவதன்று என்று குற்றமில் வகையாய்க் கூறுதலே அறத்தொடு நிற்றலாம் என்னும் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்து இனிது புலப்படுதல் காண்க.

## மாறுகோளில்லா மொழி:

தொல்காப்பியனார் அறத்தொடு நிற்றலைக் குற்றமில் வகையாய்க் கூறும் 'புரைதீர் கிளவி' யென்று கூறியதனையே இறையனாரும் மாறில் வகையாய்க் கூறும் 'மாறுகோளில்லா மொழி' யென்று,

> *"தோழிக் குரியவை கோடாய் தேஎத்து
> மாறுகோ ளில்லா மொழியுமா ருளவே"†

என்று தமது களவியலுட் கூறினார். ஈங்குப் போந்த இம் 'மாறுகோளில்லா மொழி' யென்பதற்கு அதன் உரையாசிரியர் நக்கீரனார் மிக அழகான விளக்க வுரையினைத் தந்திடுகின்றார். அது: 'எற்றினொடு மாறுகொள்ளாமையோ வெனின், தாயறிவினொடு மாறுகொள்ளாமையுந் தலைமகன் பெருமையொடு மாறுகொள்ளாமையுந் தலைமகளது கற்பினொடு மாறுகொள்ளாமையுந் தோழி தனது காவலொடு மாறுகொள்ளாமையும் நாணினொடு மாறுகொள்ளாமையும் உலகினொடு மாறுகொள்ளாமையுமெனக்

---

* கோடாய் - செவிலித்தாய்; கொள் தாய் எனப் பிரிந்து தாயாகக் கொள்ளப்படுவோள் எனப் பொருள்படும்.

† இறைய. கச.

கொள்க' என்பது தலைவிக்கு வாய்ந்த களவொழுக்க நிகழ்ச்சியினால் தம்மேற் படுவதான குற்றம் ஏதுமில்லை யென்று இவ்வாறெல்லாம் இவையனைத்திற்கும் மாறுகோளில்லாத வகையாய் அஃதாவது குற்றமில்லாத வகையாய்த் தோழி ஆராய்ந்து கூறுமாற்றை அவள் அறத்தொடு நின்று கூறிய கூற்றின்கண் வைத்து உற்று நோக்கினாலுந் தெள்ளிதின் விளங்கும்.

தோழி, செவிலிக்கு அறத்தொடு நின்று கூறுஞ் செய்தி முதன்முதலில் தலைவியால் தோழிக்கு அறத்தொடு நின்று கூறப்படுதலால், அவள் கூறுமாறே வைத்து இவ் வுண்மையைக் காண்பாம். தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்குங் கூற்றினை இறையனாரகப்பொரு ளுரையாசிரியர் தமது அழகுவாய்ந்த இனிய உரைநடையிற் செவ்விதின் இயம்புகின்றமையால், அவர் நடையுரையினையே இங்கு எடுத்துக்கொண்டு தாயறிவினொடு மாறுகொள்ளாமை முதலிய மேலுண்மை முடிபினை ஆராய்ந்து தெளிதல் நன்று. அது பின்வருமாறு:

புனல் தரு புணர்ச்சி:

'இன்னவிடத்து ஒருஞான்று நீயும் ஆயங்களுந் தழை யுங் கண்ணியுங் கோடற்கு எண்ணிச் சிறிது நீங்கினாய்; யான் நின்று ஒரு மணிச்சுனை கண்டேன்; கண்ட அம் மணிச்சுனைதான் ஆம்பலே குவளையே நெய்தலே தாமரையே என்றிப் பூக்களால் மயங்கி மேதக்கது கண்டு வேட்கையான் ஆடுவான் இழிந்தேன்: இழுக்கிக் குட்டம் புக்கேன்; புக்குத் தோழியோவென, நீ அங்ஙனங் கேளா யாயினையாக, ஒரு தோன்றல் தோன்றி வந்து எனது துயர் நீக்குதற்காகத் தன் கை நீட்டினவிடத்து மலக்கத்தான் நின் கையெனப் பற்றினேன்; பற்ற வாங்கிக் கரை மேனிறீஇ நீங்கினான்; நீ அன்று கவலுதியெனச் சொல்லே னாயினேன்; நீ எவ்வெல்லைக்கண்ணுங் கைவிடாதாய் அஞ்ஞான்று கைவிடலினையாக்கிற்று விதியாகாதே; இனிப் பிறிதொன்றுங் கொல்லோவெனக் கலங்கி வேறு

பட்டேனென்று தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நிற்கும்' என்பது.

இவ்விளக்க உரையின்கட் போந்த கருத்துரைப் பொருளையே தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்குமிடத்து மேலே தலைப்பிலெடுத்துக் காட்டியவாறு கூறுவாளாயினள். புனலின்கண் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டமையின் இதனைப் புனல்தரு புணர்ச்சியென்று அகப்பொருணூல்கள் கூறுநிற்கும். இங்ஙனமே பூத்தருகின்ற ஏதுவால் முதன்முதல் அவர் தமக்குள் எதிர்ப்பாடு நேருமாயின், அதனைப் பூத்தரு புணர்ச்சி யென்றும், தலைமகள்மேற் சினந்தேறி வந்த களிற்றினைக் கொன்றுநீக்கி அவளை அவ் விடுக்கணினின்று பாதுகாக்கும் ஏதுவால் முதன்முதல் அவர்தமக்குட் கூட்டம் நிகழ்வதாயின், அதனைக் களிறுதரு புணர்ச்சி யென்றும் ஆசிரியன்மார் கூறுவர். இன்னும் பிறபல ஏதுக்களால் அம் முதற்புணர்ச்சி நிகழுமாயின், அவையெல்லாம் அவ்வவ்வேதுக்களால் நிகழும் புணர்ச்சிகள் என்று கூறப்படும். இவற்றையும், இவற்றிற்கெல்லாம் 'ஏதீடு' என்னும் பெயருண்மையையுந் தொல்காப்பியப் பொருளிய லுரையுள்* ஆசிரியர் நச்சினார்க்கினியர் தெளிவாக எழுதியிருக்கின்றார்.

இனிப் புனல்தரு புணர்ச்சியை அறத்தொடு நின்று கூறும் வகையில், தாயின் விருப்பத்துக் கிணங்கவே தோழியுந் தலைவியும் பொழிற்கண்சென்று விளையாடச் சென்றாராதலின், அப் புனல்தரு புணர்ச்சி நிகழ்ச்சித் தாயறிவினொடு மாறுகொள்ளாதாயிற்று. 'புக்குத் தோழியோ' வென்றமையால் தலைமகள் பெருமையொடு மாறுகொள்ளாதாயிற்று. 'நீட்டினவிடத்து மலக்கத்தான் நின் கையெனப் பற்றினேன்' என்றமையால், தலைமகள் கற்பினொடு மாறுகொள்ளாதாயிற்று. 'நீ எவ்வெல்லைக்கண்ணுங் கைவிடாதாய் அஞ்ஞான்று கைவிடலினையாக்கிற்று விதியாகாதே' யென்றமையால் தோழி காவலொடு மாறுகொள்ளா

* தொல். பொருளியல், கந.

தாயிற்று. 'நீ அன்று கவலுதியெனச் சொல்லேனுயி னேன்' என்றமையால் தலைமகள் நாணினொடு மாறு கொள்ளாதாயிற்று. இனிப் பிறிதொன்றுங் கொல்லோ வெனக் கலங்கி வேறுபட்டே' னென்றமையால் உலகினொடு மாறுகொள்ளாதாயிற்று. எனவே, மறைவில் நிகழ்ந்த களவு நிகழ்ச்சியை அறமெனக் காட்டுமாறும் அங்ஙனங் காட்டி நிற்றலே அறத்தொடு நிற்றலாமாறும் இதனுல் நன்கு விளங்கும்.

இறையனாரகப்பொருளுரையிற் கூறப்படும் இப் புனல்தரு புணர்ச்சியைவிட,

*"வண்டலுற் றேம்எங்கண் வந்தொரு தோன்றல் வரிவளையீர்
உண்டலுற் றேம்என்று நின்றதொர் போழ்துடை யான்புலியூர்க்
கொண்டலுற் றேறுங் கடல்வர எம்முயிர் கொண்டுதந்து
கண்டலுற் றேநின்ற சேரிச்சென் றானூர் கழலவனே."†

என்று திருச்சிற்றம்பலக்கோவையாரிற் கூறப்படும் புனல்தரு புணர்ச்சி, தலைவி தானே நீர்க்கண் இறங்காது வாளா கரைக்கண் நின்றிருந்தபோதே திடீரென்று கடல்நீர் அலை பெருகி மேல்வந்தமையால் ஆங்கு நின்ற தோன்றலொரு வன் கைப்பிடித்துத் தொட்டெடுக்க நேர்ந்ததென்று விளக்குதலின், அது தலைவியின் களவு நிகழ்ச்சிக்கட் சிறிதுமே பிழைதரா வகையாய் நிற்கின்றது.

இன்னும் இவ்வறத்தொடு நிற்குமாறு பலப்பல வகை யாகவும் அகப்பொருணூல்களிற் கூறப்படுகின்றன. அவற்றையெல்லாம் ஈங்கெடுத்துக் காட்டி ஒவ்வொன்றும் மாறுபடாத குற்றமில் வகையாய் நிற்குமாற்றை விளக்கப் புகின் இது மிக விரியுமாதலால், அவற்றையெல்லாம் விரிந்த நூல்களிற் கண்டு அவை அறத்தொடு பொருந்து மாற்றைக் கண்டுகொள்ளல் வேண்டும். அவ்வாறு அறத் தொடு நின்று கூறும் உரைகளிலெல்லாம், இக் கள

* வண்டலுற்றேம் - விளையாடலுற்றேம். கொண்டல் - கீழ் காற்று. கண்டல் உற்று ஏர் நின்ற - தாழைமரம் மிக்கு அழகு நின்ற.

† திருச்சிற். உகO.

வொழுக்க நிகழ்ச்சியினால் எவரும் எவரிடத்துங் குற்றங் காணு வகையாகவும், இவ்வாறு நிகழ்ந்ததும் ஒரு நல்வினைப் பயனேயாமென்று மகிழ்ந்தேற்றுக் கொள்ளும் வகை யாகவும் படைத்து மொழியுந்திறம் அறிந்து வியத்தற் பாலது.

அறத்தோடு நிற்றலின் வாய்மை :

அற்றாயினும், இவ்வகையாலெல்லாம் அறத்தொடு நின்று கூறுங் கூற்றுகள் உண்மைக் கூற்றுகளாயிராமல், தலைவியாலுந் தோழியாலும் படைத்து மொழிவதான வெறும் பொய்மொழிகளா யிருக்கின்றமையின், அங் ஙனமுமவர் பொய்புணர்ந்துக் கூறுதல் அறத்தொடு பொருந்துவதோவென்றால், இறைவன் றிருக்குறிப்போடு முழுதொத்து நிற்கும் இந் நிகழ்ச்சியினை நிகழ்ந்தவாறே வெளிப்படையாய்க் கூறப்புகுந்தால் நற்றாய் முதலிய சுற்றத்தார் அதனை மாறுகொள நினைந்து கடைப்பிடி யாது விடுத்து, கூறுவாரையும் உண்மையறியாமையான் வெகுள்வராதலாலும், இறைவன் அருட் குறிப்புக்கு இயைந்து எவர்க்குங் கெடுதி பயவாத நிலையில் நன்மையே பயக்கும் நற்செய்கையாமாதல் அதனை ஒளித்துரைத் தேனும் பாதுகாத்துநிற்பது நன்றேயாமாதலாலும் அறத் தொடு நிற்குங் கூற்றுக்கள் அவை உண்மையல்லாவிடி னும் பொய்யுரைகளாக மாட்டாவென் றறிதல் வேண்டும். இதுவே ஆசிரியன்மார்க்குங் கருத்தாதல், 'அஃதே யெனின் நிகழ்ந்த ஒழுக்கம் மறைத்துக் களைந்து படைத்து மொழிந்தமையாற் பொய்யுரைத்தவாறும் பிறவெனிற், பொய்யுரைக்கப்பட்ட தாகாது; என்னை? பழியும் பாவமும் அதனால் வாராமையின்; என்னை?

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"*

என்றாராகலிற் குற்றமன்றென்பது' என்று தெய்வப் புலமை வாய்ந்தாரென்று பெரிது பாராட்டப்படும் ஆசிரியர்

* திருக்குறள், வாய்மை : உ.

நக்கீரனரே கிறுத்துரைக்கு மாற்றல் தெளியப்படும். ஆனல் தலைவியின் களவொழுக்க நிகழ்ச்சி இறைவன் திருக்குறிப் போடு முழுதொத்துத் தீமை பயவாத நிலையில் நிகழ்வதா யிருந்தால் மட்டுமே, அஃதிவ்வாறு 'வாய்மையிடத்த' தென்று பாராட்டி யெடுத்துக் கொள்ளப்படுமென்றும், இன்றேல் 'பொய்ம்மை' யென்று பழித்துரைக்கப்படுமென் றும் நன்ருய்க் கருத்திருத்தல் வேண்டும்.

அதன் வகை :

இனி,

*" காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்,
நொதுமலர் வரையும் பருவ மாயினும்,
வரைவெதிர் கொள்ளாது தமரவண் மறுப்பினும்,
அவனூ றஞ்சுங் கால மாயினும்
அந்நா லிடத்தும் மெய்ந்நா ணொரீஇ,
அறத்தொடு நிற்றல் தோழிக்கு முரித்தே "†

என்னும் இறையனூரகப்பொரு ணூற்பாக் கொண்டு இவ் வறத்தொடு நிற்றலென்பது நான்கிடங்களில் நிகழு மென்பதும்,

‡" எளித்தல், ஏத்தல், வேட்கை யுரைத்தல்,
கூறுதல் உசாதல், ஏதீடு, தலைப்பாடு,
உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனூர் புலவர் "§

என்னுந் தொல்காப்பியப் பொருளிய ணூற்பாக்கொண்டு அஃது ஏழு வகைகளாய் நிகழுமென்பதும் அறியப்படும். இவற்றுள், நிகழுமிடங்கள் நான்கனுள்ளும், ஒருவழித் தணத்தலால் நேர்ந்த ஆற்ருமையினல் நிகழும் இவ் வறத் தொடு நிற்றலென்பது 'காப்புக் கைம்மிக்குக் காமம் பெரு

---

* நொதுமலர்-அயலார். † இறைய. உகூ.

‡ எளித்தல் - எளியனென்று கூறுதல். கூறுதல் உசாதல் - சொல்லும் முறைமையிலேயே வினவிப் பேசுதல்.

§ தொல். பொருளியல் : கரு

கினும்' என்பதன்கண் அடங்குமென்றும், புனல்தரு புணர்ச்சி முதலான ஏதுக்கள் காட்டித் தன் தலைவிக்கு நிகழ்ந்த களவொழுக்கத்தினைத் தாய்மார்க்குப் புலப்படுத்துக் காட்டுவதான இவ்வறத்தொடு நிற்றல், நிகழும் வகைகள் ஏழனுள்ளும் 'ஏதீடு' என்னும் வகையுள் அடங்குமென்றுந் தெளிதல் வேண்டும். இவற்றை அவைதம்மின் உரைகளைவைத்துக் கண்டுகொள்க.

முறை :

இனி மேற்காட்டியவாறே,

"தோழி செவிலிக் கறத்தொடு நிற்றல்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்றல்
நற்றாய் தந்தை தனையர்க் கறத்தொடு
நிற்ற லென்ப நெறியுணர்ந் தோரே"

என்னும் விதிப்படி, செவிலி நற்றாய்க்கும் நற்றாய் தந்தை தமையன்மார்க்கும் அறத்தொடு நின்று தலைவியின் திருமணத்தை முடித்துவைப்ப ரென்க.

---

## கo. திருப்பொன்னூசல்

[தலைமகனுக்கு உறவினரும் சான்றோர் சிலரும் தலைவியின் இல்லத்தாருடன் திருமணம் பற்றிப் பேசி முடிவு செய்யத் தலைவியின் இல்லத்தில் அனைவரும் ஒற்றுமைப்பட்டுத் திருமணம் நிகழ்த்துதல்.]

சீர்ஆர் பவளம்கால் முத்தம் கயிறாக
ஏர்ஆரும் பொற்பலகை ஏறி இனிது அமர்ந்து
நாராயணன் அறியா நாள்மலர்த்தாள் நாய் அடியேற்கு
ஊராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா அமுதின் அருள்தாள் இணைபாடிப்
போர்ஆர்வேல் கண்மடவீர் பொன்னூசல் ஆடாமோ.

—திருவாசகம், திருப்பொன்னூசல்: க.

'சிறப்புப் பொருந்திய பவளத்தூண்களே கால்களாக வும், முத்துக்கோவைகளே கயிறுகளாகவும் அமையப் பெற்ற அழகு நிறைந்த பொன்னாலான இவ்வூஞ்சற் பலகைமேல் ஏறி இனிமையா யமர்ந்து, திருமால்தேவனும் அறியமாட்டாத புத்தம் புதிய தாமரைமலரை யொத்த திருவடியை நாய்போன்ற அடியேனுக்கு இருப்பிடமாகக் கொடுத்தருள்கின்ற திருவுத்தரகோசமங்கைக்கண் எழுந் தருளியிருக்குந் தெவிட்டாத தெள்ளமுதமாகிய சிவ பிரான்றன் அருண்மிக்க இரண்டு திருவடிகளையுங் குழைந்து பாடிப் போர்த்தொழில் வாய்ந்த வேல்போலுங் கண்களையுடைய இளநலம் வாய்ந்த பெண்களே! நாம் பொன்னூஞ்சல் ஆடுவாம்' என்பது.

சீர்-பவளத்துக்கும் முத்துக்கும் உள்ள ஒளிச்சிறப்பு. பவளமும் முத்தமும் ஆகுபெயர்களாய் முறையே அவற்றா லான தூணையுங் கோவையையும் உணர்த்தாநின்றன. இங் கிவர் கூறினாற்போலவே சிலப்பதிகார ஆசிரியரும் "வயிர மணித் தூண்"* என்று தூணினைச் சிறப்பித்தல் காண்க. 'பவளம் கால் ஆக' வென்று கூட்டிக்கொள்க. இங்குக் கூறப்பட்ட முத்துக்கள் பெருமுத்துக்கள். இனிது அமர் தல் - மகிழ்ச்சியுடன் அழகுந் தோன்றும்படி அமர்தல். நாள்மலர்த் தாள்-அன்று பூத்த புதுப்பூவைப்போலுந் திரு வடி; அஃதாவது மலர்ச்சியுங் கிளர்ச்சியும் அழகும் மண மும் நறவும் மிக்க தாமரைப் பூவையொத்த திருவடி; அவற் றைத் திருவடிக்குக்கொண்டு கூட்டும்போது அழகும் அரு ளின்பங்களுமுடைய திருவடியென்று உரைக்க. ஊர்-ஆகு பெயராய் இங்கு இருப்பிடத்தை யுணர்த்திற்று. நாண் மலர்த்தாள் நாயடியேற்குத் தந்தருளினமையால், அவன் அருட்டாளிணை பாடிப் பொன்னூசலாடுவாமென்பது. பெண்களென்பார், தோழிகளென்று கொள்க. 'ஊசல்' என்பதே பின்பு 'ஊஞ்ச'லென்று விரிந்தது. 'ஆடுவா' மென்பது 'ஆடா'மென நின்றது. ஓ: அசை.

தலைவனுக்குந் தலைவிக்கும் நிகழ்ந்த திருமண நிகழ்ச்சி யினால், தலைவன் தனது திருவடி நிலையை இருப்பிடமாகத்

* சிலப். மங்கல: சஅ

தலைவிக்குக் கொடுத்து ஆண்டுகொண்டானென்பது பெறப் படுதலால், அவ்வுண்மை யுணர்ந்த தலைவி அங்ஙனந் தன் தலைவன் தனக்கு வாழ்விடமென் றளித்த அருளும் அருமை யும் நிறைந்த அவன்றன் றிருவடியிணைகளைத் தன் தோழி யருடன் பாடி அவனோடிருந்து பொன்னூசலாடுகின்றா ளென்க. பெரியார் திருவடி யென்பது அப் பெரியார் தம் அருளேயா மாதலாலும், அதனையே மேலுள்ள பொன் னூசற் பாட்டில் 'அருள் தாள்' என்று மாணிக்கவாசகப் பெரு மான் குறித்திருக்கின்றாராதலாலும் ஈண்டுத் தலைவிக்கு வாழ்நாளிருப்பிடமென்று கூறப்படுந் தலைவன் றிருவடி, அவன்றன் அருளியல்பே யாகுமென்று அறிந்துகொள்க. என்னை? தலைவனது அருளியல்பே தலைவியின் வாழ்நா ளின்பத்துக்கு ஏதுவாதலி னென்பது.

## உறவினர் இசைவு:

இனித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்ற தலைவி யின் களவொழுக்கச் செய்தி, நற்றாய்க்கும் தந்தை தமை யன்மார்க்கும் மெல்ல மெல்ல எட்டினமையின், அவரெல் லாம் அதனைப் பொறுமையுடன் ஆழமாக நினைந்து பார்த் துத் தலைவியின் ஒழுகலாறு குற்றமில்லதென்றும், அற நெறியே யென்றும், அந்தமட்டும் அஃதவட்கு நேர்ந்தது நன்றேயாமென்றும், தீங்கு பயவாது நன்மைக்கே ஏது வான இச்செய்தி திருவருட்குறிப்பின்றி நிகழ்ந்திருக்க மாட்டாதென்றும் ஆகவே நாமெல்லோமும் அவள் செய்கையோடு ஒன்றுபட்டு அவள் விரும்பியவாறு அவள் தன் காதலனுக்கே அவளை மணஞ்செய்து காணற்பால மென்றும் பொருத்தமான முடிவுக்கு வந்து அதற்கேற்ற முறையிற் றிருமணத்தினை நடத்திவைப்பார். செவிலி நற் றாய் முதலியோர் நுண்ணுணர்வு சாலாராயிருந்தவிடத் துத் தலைவியின் றிருமணம் நிகழ்தற்குச் சிறிது காலந் தாழும். தோழி தான் அறத்தொடு நின்றமையால் நற்றாய் முதலியோர் என்ன முடிவுக்கு வருகின்றார்களென்பதை மிக்க வேட்கையுடன் உற்றுநோக்கி யிருந்து, அவரெல்லா ரும் மேற்காட்டியவாறு திருமணம் நிகழ்த்துதற்கே எண்

ணித் துணிந்த முடிவினைச் செவிலியால் அறிந்து அம் முடிவு தனதெண்ணத்துக்கு மாறுபடாமைமுடிந்தமைக்கு மகிழ்ந்து திருவருளை வாயார வாழ்த்தியபடியாய்த் தலைவியிடம் வந்து நிகழ்ந்ததனைக் கூறி உளந்துளும்பிய மகிழ்ச்சியிற் றிளைப்பாள். நற்றாய் முதலியோர்க்கு எட்டிய தனது களவுச் செய்தி ஏதாய் முடியுமோவென்று ஆலைபாய்ந்த நெஞ்சத்தோடு அமைதியின்றி மறுகிக் கிடந்த தலைவியும் அதுகேட்டுத் திருவருளால் தனதெண்ணம் பலித்தமைக்கு வியந்து ஆராத பேரின்பப் பெருக்கினிற் றேக்கினாள். இவரெல்லாரும் இவ்வாறொரு முடிவுக்கு வந்து உவகைக் கடலிற் படிந்திருக்குஞ் செய்தியினை ஒருவழித் தணந்து வந்த தலைவன் தோழியாற் கேட்டு இதுகாறுந் தான் தலைவியைப் பிரிந்து கூட்டமின்றி ஒருவழித் தணந்து நின்றமையாலான பிரிவுத்துன்பமெல்லாம் முற்றும் அற்றுப் போகத் தன்னை மறந்த உள்ளக் களிப்பெனும் பேராற்று வெள்ளத்தில் நீராடலானான்.

## திருமண ஏற்பாடு:

இங்ஙனமாகத் தலைவன் உளப்படப் பெண்வீட்டாரெல்லாருந் தலைவிக்கு நிகழவிருக்குந் திருமண நிகழ்ச்சியின் பொருட்டுப் பெரிதும் மகிழ்ச்சியுடையராய் அதனை அவாவியிருக்கையில், அந்தத் திருமண ஏற்பாட்டை நிறைவேற்றுவித்தற்குத் தான் செய்யவேண்டும் முன் முயற்சிக்காகத் தலைவன் தன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடிச் செல்வான். வரைதற் பொருட்டுப் பொருள் தேடக் கருதித் தலைவன் தன் தலைவியைப் பிரிந்து செல்லுதலால் இப் பிரிவு 'வரைபொருட் பிரிவு' என்று கூறப்படும். பிரிந்து சென்று வேண்டும் பொருளை ஈட்டிக்கொண்டு மீளுந் தலைவன் தன் சுற்றத்தாரை முற்கொண்டு தலைவியின் இல்லம் அண்மி மணமுரசு ஒலித்துப் பெண் பேசுவிப்பான்.

அஃதறிந்த தலைவியின் சுற்றத்தார் தமது இல்லத்தை நிறந் தீட்டித் தோரண முதலியன நாற்றிக் கவின்படுத்திப்

பொற்குடங்களும் ஐந்தலை விளக்குகளும் பிறவும் நிரல் பட வமைத்துத் தலைவன்றன் சுற்றத்தாரைத் தாமும் எதிர்மண முரசு ஒலித்து அன்புடன் வரவேற்று, அவர் விரும்புமாறு பணிந்தொழுகி அவரவர்க்கு வேண்டும் இருக்கையுஞ் சிற்றுண்டி முதலாயினவும் இனிது கொடுத் தூட்டி அளவளாவி, இவ்வளவும் இனிமையாய் நடந் தேறியபின், ஓரழகிய கூடத்தில் எல்லோருமாய் ஒருங் கமர்ந்து எல்லாம் வல்ல தம் வழிபடு கடவுளை அன்பி னால் உருகி வழுத்தி, வந்தவர் கருத்தறிந்து இருந்தவர் பெண் கொடுத்துத் திருமணம் நடப்பித்தற்கு ஒரே நினை வாய் உளம் நேர்வர். உடனே திருமணம் நிகழ்தற்குரிய நாளும் நாழிகையும் ஆங்குள்ள அருட் பெரியாரാற் குறிக் கப்படும். அந்நாளும் நாழிகையும் நேர்படுங்காறுந் தலைவி தலைவன் சுற்றத்தவரெல்லாரும் ஒரே நெஞ்சாய் ஒரு பெரிய மகிழ்ச்சிப் பெருக்கிற் றிளைப்பவர்போல இருந்து திருமணவினைக்கு வேண்டிய எல்லா முன் முயற்சிகளை யும் ஒழுங்குபட முடித்துக்கொண்டிருப்பர். அந்நாட் பொழுதுகளெல்லாம் அவரெல்லார்க்கும் இன்பத் தேறலைச் சொட்டிக்கொண்டிருக்கும் நற்பொழுதுகளாகத் தோற்றும்.

## திருமண நிகழ்ச்சி:

இனி, எதிர் நோக்கிய நாளும் நாழிகையும் நெருங்க நெருங்கத் தலைவியின் வீடு ஓரழகிய திருமணக்கூடமாக ஒளியும் மணமும் பெற்று இனிதாய்த் திகழும். இன் னிசை மிக்க மணமுரசொலிகள் பலப்பலவாய் நின்று ஓயாது இசைக்கும். மணநாட்கு முன் நாள், தலைவியின் இல்லத்தார், மணமிக்க பூந்தொடைகளுஞ் செண்டுகளும், சுவைமிக்க பழங்களுந் தின்பண்டங்களும், நறுமணக் கலவைகளும் பிறவும் இளநல மிக்க மங்கைப் பெண்கள் ஏந்தி எதிர்கொள்ள, தாமும் எதிர்கொண்டு, தலைவனை யும் அவன் சுற்றத்தாரையுங் கலந்து வரவேற்றுப் பெரிது மகிழ்வர்.

திருமண நாட் காலையில் தலைவனையுந் தலைவியையுங் கண்டார்தங் கண்ணையுங் கருத்தையுங் கவருமாறு மணக் கோலஞ்செய்து திருமணக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு வந்து ஒருவர் பக்கம் ஒருவராக அவரை அமர்த்து வர்; இவ்வாறிவர்தாங் கூடுமாறு முதலிலிருந்தே உறு பெருந் துணையாய் நின்று உதவி வந்த எல்லாம் வல்ல ஆண்டவன் றிருவருளை எண்ணி நெஞ்சுருகி வழுத்துவர். பின்பு, 'அம் மணமக்களின் கூட்டம் மேன்மேலுஞ் சிறந்து, பழமும் அதன் சுவையும் கதிரும் அதன் ஒளியும்போல, அவர்கள் ஒத்தொழுகி அறிவிலும் ஒழுக்கத்திலும் ஆன் றோர் பணியிலும் மேம்பட்டு இல்லறம் நிகழ்த்தி, அங்ஙனம் நிகழ்த்துமாற்றால் இறைவனை வழிபடுமுறை யுணர்ந்து, உள்ளந் துறந்து வழிபட்டு அவ்வாண்டவன் திருவருளை முற்றப் பெற்றிடுக'வென ஆங்குக் குழுமியிருந்த அருட் சான்றோரெல்லாரும் முறைமுறையும் ஒருங்குமாக வாழ்த் துக் கூற, அம் மணமக்கட்குத் திருமணஞ் செய்விக்கப் பெறும். செய்வித்து, அவர்களை ஊஞ்சலிலமர்த்தி அவர் தாம் ஒருங்கிருக்கும் கூட்ட வழகினையும் அவர் தம் திரு வுருவக் கட்டழகினையுங் கண்களிப்பக் கண்டு, அவ்வுறவி னர் ஆரா மகிழ்ச்சியிற் றோய்ந்து அயர்ந்தனராய்ப் பின் பொருவாறு ஒருணர்வு நிலைக்கு வரப்பெறுவர்.

தலைவியின் இல்லத்தார், மணநாட்கள் கழிந்ததும் அம் மக்கள் தமது இல்லத்திலேயே இருத்தற் கில்லா மையை யெண்ணிப் பொதுவாக அவர்தம் பிரிவுக்குஞ் சிறப்பாகத் தலைவியின் பிரிவுக்கும் இனைந்து உள்வருந்தி ஆற்றாராய், பின்னர் அதன்கணின்று ஒருவாறு தேறி, தலைவி தன் காதலனோடு கலந்து மகிழ்தற்கும் இல்லறம் நிகழ்த்தற்கும் உதவியாகுமாறு சில பொருள்களையுந் தட்டுமுட்டுகளையுந் தின்பண்டங்களையும் உடைமணி முதலியவற்றையும் அன்பின் அளித்துத் தலைவியை அவள் தலைவனோடு அவன் சுற்றத்தவருந் தம்மவரிற் சிலருஞ் சூழ அவனூர்க்கு அனுப்பிவிடுவர்.

திருமணநிகழ்ச்சி என்று நேருமோ, எவ்வாறு நேருமோ வென்று ஏங்கி எதிர்நோக்கியிருந்த தலைவி,

தான் பெற்ற திருமணக் களிப்பினால் தன் பெற்றோரின் பிரிவுத்துன்பமும் ஒருவாறு ஆறுதலடையப் பெற்றுத் தலைவனோடு அவனில்லம் போந்து அவன் மகிழுமாறு இசைந்தொழுகிக் காதலன்பிற் சிறந்து இல்லற நிகழ்த்தித் திருவருள் காணத் தொடங்குவள்.

என்று இதுகாறுங் கூறிய இம்மணமக்களின் திருமண நிகழ்ச்சி யுரைப்பொருள் கொண்டு, அரும்பெறன் மணிகள்போல ஆங்காங்கு மிளிரும் அரும்பெருங் கருத்து நுட்பங்களைப் பகுத்தெடுத்துப் பின்னவற்றை விளக்கி நிறுத்துங் கட்டாயம் இக்கட்டுரைக்கு உண்மையால், அவைதாமும் இனி ஆராயற்பாலன. அவற்றை ஆராயு முன்னர் மேற்கூறிய பண்டைத் திருமணநிகழ்ச்சிப் பழக்க வழக்கங்கட்கெல்லாம் பழைய நூற்சான்றுகள் காட்டி நிறுத்திக்கொள்ளல் நன்றாம்.

## தலைமகன் இல்லத்தாரும் தலைவியின் இல்லத்தாரும் :

தலைவன் திருமணத்திற்காக வரைபொருட் பிரிந்து பொருள் திரட்டிக்கொண்டு மீளும்போது தன் சுற்றத்தவர்களை முன்கொண்டு தலைவியில்லம்போந்து பெண் பேசுவிப்பா னென்பதும், அவன் சுற்றத்தவர்கள் தாமேயல்லாமல் தம்மோடு அறநிலைசான்ற வேறு சான்றோர்களை வைத்தும் பெண்பேசுத லுண்டென்பதும் 'தலைமகன் றமர் பார்ப்பார் சான்றோரை முன்னிட்டு அருங்கலங்களொடு வரைதற்குப் புகுவார்'* என்னும் இறையனாரகப் பொருளுரையினாற் றுணியக்கிடக்கின்றன. அங்ஙனந் தலைவன்றன் சுற்றத்தார் அறநெறிச் சான்றோரையும் உடன்கொண்டு சென்று தலைவியில்லம் அண்மி மணமுரசொலித்துப் பெண் பேசும்போது தலைவியின் சுற்றத்தார் தமதில்லத்தைத் தோரண முதலியன நாற்றிக் கவின்படுத்திப் பொற்குட முதலாயினவும் நிரல்பட வமைத்து எதிர்கொள்ளும் வழக்கம் 'தேர்வரவு கூறுநின்ற நிலைமைக்கண் மணமுரசு கேட்டு மனையிலுள்ளார், இஃதிவளை நோக்கி

* இறைய. உக.

யொலியாநின்றது மணமுரசென உட்கொண்டு யாம் பூரண பொற்குடந் தோரண முதலாயினவற்றான் மனையை யலங்கரிப்போமென மகிழ்வொடு கூறுநிற்றல்'* என்னுந் திருக்கோவையாருரையினுற் பெறப்படுகின்றது. தலைவியின் வீடு அழகுபடுத்தப்படும் இச்செய்தி ஒரு துறைப்பொரு ளாகவே எடுக்கப்பட்டு,

"பூரண பொற்குடம் வைக்க மணிமுத்தம் பொன்பொதிந்த
தோரண நீடுக தூரியம் ஆர்க்கதொன் மாலயற்குங்
காரணன் ஏரணி கண்ணுத லோன்கடற் றில்லையன்ன
வாரண வும்முலை மன்றலென் றேங்கு மணமுரசே"

என்று அதற்கோர் அழகிய செய்யுளும் அருளிச்செய்யப் படுகின்றது.

இனி இவ்வாறு தலைமகன் இல்லத்தார் பெண்பேசச் சென்ற ஞான்று தலைவியின் இல்லத்தார், உண்மைக் களவொழுக்கத்தின் நன்மைப்பேற்றையும், தலைவன் தலைவியரின் ஒருமைப்பாட்டையும், எவராலுந் தடுக்கப்படாது அவ்வெல்லார் தடையினும் மீறிச் செல்லும் அவர்தம் ஒழுகலாற்று நுட்பத்தையும், அவ்வொழுகலாறு தலைவன் றலைவியரின் ஆற்றலுக்கும் அடங்காது திருவருட் கடலில் அவரைக் கொண்டு சேர்க்கும் ஒரு பெரும் புணையாங் காழ்ப்புத் தன்மையையும், அது திருவருளியலாலும் ஊழ் வலியாலுமே நடை பெறுமாற்றையும் நுணுகியறிந்து அவர் தம் வாழ்க்கையைத் தாமே முன்னின்று செம்மைப்படுத்தித் திருவருட் போக்குக்கு இசைந்து நிற்றற்குரிய ஒள்ளறிவு சாலா வெள்ளறிவினராயின், 'பரியம்' வேண்டு மென்றும், தலைமகன் அதனைத் தருமிடத்து, நிரம்பக் கொடுத்தல் வேண்டுமென்றும், அவர் விரும்பியவாறே அவன் நிரம்பக் கொடுத்தவிடத்தும் 'நாள் பார்த்து வரல் வேண்டும்' 'புள்திருத்தி (சகுனம் பார்த்து) வரல்வேண்டு' மென்றும், இங்ஙனமே இன்னும் பிறவாறுங் கூறிப் பெண் கொடுக்க இசையார். இன்னும் நாங்கள் எங்கள் மகட்கு

* திருச்சிற். உகக.

இவ்வாண்டிற்றிருமணஞ் செய்ய வியலாது; இனி வரும் யாண்டிற்றான் செய்தல் வேண்டுமென்று கூறியும் மறுப்பர். இவ்வுண்மைகளெல்லாமும்,

"வரைவெதிர் கொள்ளாது தமரவண் மறுப்பினும்"*

என்னும் இறையனார் நூற்பாவானும், 'பரியஞ் சிறியதென் றயினும், இளையளாலோ வென்றானும், நாளும் புள்ளுந் திருத்தி வாரீரோ வென்றானும் அங்ஙனம் மறுத்தாரென்ப' என்னும் அதன் உரையானும் அறியக்கிடக்கின்றன. இவ்வாற்றாற் காதற் களவொழுக்கம் இத் தமிழ்நாட்டில் யாண்டும் பரவி நன்முறையில் நடைபெற்று வந்த காலத்தினும், ஒருசாரிருந்த அறியாமை விஞ்சிய கீழ்மக்களிடத்தில் இவ்வாறான திருமண வாணிகமும் பிற தாழ்ந்த இயல்புகளும் இருந்தன வென்பது வெளிப்படுகின்றது. என்னை? அறியாமையும் அறிவுமே உலகமாதலின்.

இனி இம் மறுப்புரைபோல்வனவே அறிவுடைய பெருமக்கள் கூறி வரைவெதிர் கொள்ளாது மறுப்பாராயின், அவரெல்லாரும் அங்ஙனம் உண்மையிற் கூறி மறுப்பாரல்லர். மற்று அருமை புலப்படுத்தற்காகவே இங்ஙனம் மறுத்துரைத்து தலைவனையும் அவன்றன் றமரையும் அகற்றி அணுகுவிப்பரென்று அறிந்துகொள்க. தலைமகன் றமர், பார்ப்பார் சான்றோரை முன்னிட்டு அருங்கலங்களொடு வரைதற்குப் புகுவர்; புக்கவிடத்து ஒரு காலைக்கு மறுப்பர்; பிற போகாக் குமரியை யுடையார் போலக் கதுமென நேர்ந்திடாரன்றே,† என்று ஓரிடத்தும், 'தலைமகன் பார்ப்பாரை முன்னிட்டு அருங்கலங்களொடு வரைவு வேண்டிவிட்ட விடத்துத் தந்தையுந் தன்னையன்மாரும் வரைவு மறுத்தார்; மறுப்பார் சூழ்தலும் அருகுதலு முடைமையான் நூற்றியாண்டைக் கற்றவரோடு எண்ணிச் செய்யப்படுமாகலாற் சூழப்படும். இனிக் கண்டுரே தம் மகளை வேண்டுவாரைப் பார்த்திருந்தாராகாதே, நாம் இந் நூற்றிடைக் கரும நூற்றுவரே, இவர்களிடை மகட் பெறுவார் யாரெ

* இறைய. உக.  † இறைய. உக.

னவும் பெறுதற்கு அருமை யுடைத்தெனவுங் கருத அருகுப இனிக் கண்டீரே தன் மகளை வேண்டுவார் உரைப்பனவும் பொய் போலும், வேண்டுதற்கு இடையின்றியே பெற்றூராதலின், இவ்வகை விரைந்து கொடுத்தாராலென்னும் புறவுரைநோக்கியும் அருகுப இனி உலகியலானும் அருகுப,'* என்று பிறிதோரிடத்தும் இறையனுரகப்பொருளுரையாசிரியர் உரை கூறுவதும் இவ்வுண்மையைப் புலப்படுத்தும்.

பெண் வீட்டில் திருமணம் :

தலைவியின் வீட்டார் மகட்கொடைக்கு இசைந்த பின்னர், தலைவியின் வீட்டிலேயே திருமணம் நிகழு மென்பதும் மேற்காட்டிய 'பூரண பொற்குடம் வைக்க வென்னுந் திருக்கோவையார் பாட்டினுலும், அதன் விளக்க வுரையினுலும், பிற குறிப்புக்களாலும் நன்கு பெறப்படும். இதற்கு இலக்கியச் சான்றூகப் பெரியபுராண மெனப்படுந் திருத்தொண்டர் புராணத்திலுள்ள திருமணநிகழ்ச்சிக் குறிப்புக்களும், மணிமேகலை. சீவகசிந்தாமணி, நைடதம், இராமாயணம், பாரதம், திருவிளையாட்டற்புராணம் முதலிய ஏனையிலக்கியங்களிற் கூறப்படுந் திருமணநிகழ்ச்சிக் குறிப்புக்களும் பிறவும் திருமணம் பெண்வீட்டில் நடைபெறுமாற்றினையே குறித்து விளக்குவனவாய்க் காணப்படுகின்றன. இஞ்ஞான்றுங்கூட, செல்வவாழ்க்கையி லுள்ளாரிற் பெரும்பாலார் பெண்வீட்டிலேயே திருமணஞ் செய்யுமியல்பு உலகவழக்கிற் காணப்படுகின்றது.

ஆகவேதான், இவ்வாறன்றித் தலைமகன்வீட்டிலே நடைபெறுவதான திருமணத்தினை 'ஒழிந்ததிருமண' மென்றே பண்டைப் பனுவல்கள் பகராநின்றன. அங்ஙனந் தலைமகன் வீட்டில் நடப்பதுங்கூட, உடன்போக்கினை மேற்கொண்டு யார்க்குந் தெரியாமல் நடுநிசியிற் புறப்பட்டுத் தன் தலைவனோடு வெளிப்போந்த தலைமகட்கு மட்டுமே நிகழுமென்க. உடன்போகிய தலைவி மீண்டுந் தன் தலைவனோடு தன்னில்லமே புக்கு மணஞ்செய்து கோடலு முண்டு. தப்பித் தவறித் தலைவனில்லத்தே அது

* இறைய. உஅ.

நிகழ்ந்தவிடத்தும், ஆங்கு நிகழ்ந்த இவ்வொழிந்த திருமணம் எவராலும் ஒப்புக் கொள்ளப்படாமையின் மீண்டும் அம் மணமக்கட்குத் தலைவியின் இல்லத்தே தக்க திருமணஞ் செய்யவே பண்டைத்தமிழர் விரும்பி நின்றார். இவ்வுண்மைகளெல்லாம், 'இங்ஙனம் புகுந்து பெயர்ந்த பின்றைத் தலைமகன் தன்னகத்தே வதுவைக் கலியாணஞ் செய்வானெடுத்துக் கொண்டானென்பது கேட்ட நற்றாய் ஒழிந்த கலியாணஞ் செய்யினும் நம்மகத்தே வதுவைக் கலியாணஞ் செய்ய நேருங் கொல்லோ காளையைப் பயந்தாளென்னும்'* என்று தெளித்துரை நிறுத்தும் இறையனாரகப்பொருளுரையினாலும்,

"நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லி னெவனோ மற்றே வென்வேல்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே"†

என்னும் பழந்தமிழ் நூலான ஐங்குறுநூற்றின் செய்யுட் கருத்தினாலும் நன்கு பெறப்படுகின்றன. இவைதம்மின் மட்டுமன்றிப் பிற்காலத்தெழுந்த நம்பியகப்பொருள் இலக்கணத்திலும், தலைவியை உடன்போக்கிற் கூட்டிச் சென்ற தலைவன் தன் நாட்டின் கண்ணதோ ரிடத்திலேனும் அல்லது தன்மனையிலேனும் ஒழிந்த திருமணஞ் செய்துகொள்வானாயினும், அஃது ஆன்றோ ரெவராலும் ஒப்புக்கொள்ளப்படாமையின் அவன் மீண்டுந் தலைவியில்லம் போந்து அந்தணர் சான்றோரை முன்னிட்டு அருங்கலங் கொடுத்து எல்லாருமறிய விதிப்படி வதுவைத் திருமணஞ் செய்து கொள்வா னென்னுங் கருத்துடன்,

"தன்னூர் வரைதலுந் தன்மனை வரைதலும்
என்னுமிவ் விரண்டொழித் தெவற்றினுங் கிழவோன்
அந்தணர் சான்றோர் முன்னிட் டருங்கலந்
தந்து வரைதல் தகுதி யென்ப"‡

---

* இறைய. ௨௩ † ஐங்குறு. ௩௧௧.

‡ நம்பியகப்பொருள், வரைவியல்: ௨௧.

என்றொரு நூற்பா கூறப்படுகின்றமையானும், இதனே டொப்பவே, அந் நம்பியகப்பொருளிலக்கணத்துக்கு உரிய இலக்கிய நூலாகக் கருதப்படும் தஞ்சைவாணன் கோவைக்கு எழுதப்பட்டுள்ள உரைக்கண், இந் நூற்பாவினையே யெடுத்துக் காட்டி,

'தன் (தலைவ)னூர் வரைதலும் தன் (தலைவன்) மனை வரைதலும் என்னும் இவ்விரண்டொழித்து 'எவற் றினுங் கிழவோன் அந்தணர் சான்றோர் முன்னிட் டருங் கலந் தந்து வரைத றகுதியென்ப' என்னும் நூற்பா விதி யாற் சென்றோன் மீண்டு வந்து அந்தணரையுஞ் சான்றோ ரையும் முன்னிட்டு வரைந்துகொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்.'

'வரைதல் என்பது ஐம்பத்தாறு நாள் தலைவன் மீண்டு தலைவியில்லின் வாராவின்றுழி, தலைவி தம்மெதிர்கொண்டுபோ யழைத்துவந்தபின் உலக வியற்கையின்படி பலவிதமாக அருங்கல முதலிய வேண்டுவன கொடுத்து, அந்தணரை யுஞ் சான்றோரையு முன்னிட்டு, மணச்சடங்குடனே வதுவை முடித்துழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்.'

'இங்ஙனமொரு தலைவனுக்கும் தலைவிக்கும் ஒருகால் மணமுடிப்பதன்றிப் பலகால் மணமுடிந்ததாகக் கூறுதல் உலகின்கண் வழங்குவதன்றே, இவ்வாறு கூறியதென்னை? யெனின், உடன்போய்த் தன் (தலைவ)னூரின் கண்ணே வரைதலும் மீண்டுவந்து தன் மனையின் கண்ணே வரைத லும் அந்தணர் சான்றோரை முன்னிட்டுத் தாய்தமரறிய மணச்சடங்கின் முறையே முடியாமையான் அவையிரண் டும் மணமாகா; அஃதென்னையெனின், உலகியல்பின்கண் தாய்தமரறியாது மணச்சடங்குமின்றி ஒருவன் உரிமை கருதித் தாலிகட்டு மணமென்று உலகின்கண்ணுள்ளார் கைக்கொள்ளார்; அவர்க்கே மீண்டும் மணச்சடங்குடனே மணமுடிப்பர்.'*

* தஞ்சைவாணன் கோவை. ௩௯௬.

என்னும் உரைக்கூற்றுகள் உரைக்கப்படுகின்றமை யாலும் நிகழ்ச்சி முறைகளோடு கூடிய பண்டைத் திருமணங்கள் பெரும்பாலும் பெண்வீட்டின்கண்ணேயே நிகழ்த்தப்பட்டனவென்பதும், ஆங்கு நிகழ்மணங்களே முறையாகுமென்றுங் கருதப்பட்டன வென்பதுந் தெளியப் புலனாதல் காண்க.

திருமணச் சடங்குகள் :

இனித் தலைவியின் இல்லத்தே நிகழ்த்தப்படும் இத் திருமணம் எவ்வெவ்வாறெல்லாம் பண்டு நிகழ்த்தப்பட்டதென்பதற்குப் பண்டைத் தமிழ்ப்பனுவல்களில் விளக்கமான சான்றுகள் யாங் காணக் கிடைத்திலவெனினும், பொதுவான சில செய்திகள்மட்டும் ஆங்காங்குச் சில குறிப்புகளால் காணப்படுகின்றன.

* "மைப்பறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணிப்
புள்ளுப்புணர்ந் தினிய வாகத் தெள்ளொளி
யங்க ணிருவிசும்பு விளங்கத் திங்கட்
சகடம் வேண்டிய துகடீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்
படுமண முழவொடு பரூஉப்பணை யிமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று......
மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
இழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
தமர்நமக் கீந்த தலைநாள்" †

என்று வரும் மிகப் பழையதான அகநானூற்றுச் செய்யுட் பகுதியினால், அக்காலத்தில் நிகழ்ந்த திருமணநாட்களில் நெய்யுங் கனியுங் கூடிய வெள்ளிய சோறு கொண்டு உறவினர்பலரை உண்பித்துப் பின்னும் ஆங்குவரும்

* மைப்பு அற - குற்றமற. புரையோர் - உயர்ந்தோரை. புள் - புள் நிமித்தம். நகர்-மனையை. பணை-முரசு. வியர்ப்பு ஆற்றி- வியர்வையைச் சிவிறியால் விசிறி மாற்றி.

† அகம். கஙசு.

தக்கார்க்கும் ஏழைகட்கும் அவர்கள் பசியாறும்படி ஈகை யெண்ணத்தோடு உணவுபடைத்தல் நிகழ்ந்ததென்பதும், வெண்மதியம் 'சகட'* மென்னுங் விண்மீனைக் கூடும் நல்ல நாள் பார்த்து மணமக்கட்குத் திருமணம் நிகழ்த்தப் பட்டதென்பதும், திருமணநாளிலே அது நிகழும் இல்லம் காட்சிக்கினிதாம்படி அழகு செய்யப்படுமென்பதும், திரு மணம் நிகழ்த்து நேரத்திற் கடவுளை வணங்கியே அதனை நிகழ்த்துவரென்பதும், அந்நாளில் மங்கைப் பெண்களெல் லாருங் கூடி மணப்பெண்ணுக்கு அணியுடை மணியிழை முதலாயினவெல்லாம் அணிந்து அழகு செய்வதோடு சிவிறி விசிறுதல் முதலான சிறு பணிகளும் மிகச் செய்வ ரென்பதும், இங்ஙன நிகழுமித் திருமணநிகழ்ச்சி பூக்களைச் சொரியா நிற்கும் நறுமணமிக்கதொரு நற் பந்தரின்கீழ் நிகழுமென்பதும், பிறவுமான பண்டைத்தமிழரின் திருமண நிகழ்ச்சிப் பழக்கவழக்கங்கள் ஒருவாறு புலனாகின்றன.

மேற்காட்டிய பண்டைத் திருமணநிகழ்ச்சிகளில் திருமணவில்லத்தினைக் கவின்படுத்துவதும், மணநாளன்று வரையாது சோறுபடைப்பதுமான பழந்தமிழ்மக்களின் நாகரிகஉணர்ச்சி வளர்ச்சியினைக் காட்டும் இரண்டு உண்மைகளை, விளக்கந்தரும் வகையான வேறிரண்டு சான்றுகள் காட்டி இங்குத் தெளியவிளக்குதல் நன்று. திருமணம் நிகழு மில்லத்தில் மல்லிகை முல்லை முதலான நறுமணமிக்க விடுபூக்களும் அவற்றாலான மாலைகளும், சாந்து நாவி முதலான நறுமணப் பண்டங்களும், அவை கலந்த நறுமணக்கலவையும் பயிறலால் அவ்வில்லம் நிரம்பிய மணவீச்சு உடையதாய்த் திகழுமென்பது, நாலா பக்கமும் மணம்வீசும் நறும்பூஞ் செடிகள் நிரம்பி விளங்கும் மலைச்சாரலுக்குப் பண்டைத் தண்டமிழாசிரிய ரான இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார் தாமியற்றிய மலைபடுகடாத்தில் மணம் மிக்க திருமணவில்லத்தை உவமையாகக் காட்டி,

* இதனை 'உரோகிணி' யென்பர் சிலப். அரும்பதவுரை யாசிரியர், மங். ௫௦.

"மணம் இல் கமழும் மாமலைச் சாரல்"*

என்று கூறுகின்றமையானும், அதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் "மணஞ்செய்த மனைபோல மணக்கும் பெரிய மலைப் பக்கம்" என்று உரை யெழுதுகின்றமையாலும் நன்கு விளங்கும். இதனையொப்பவே மணமனை கமழுங்கானம். † என்று அகநானூற்றுள்ளும் இந் நறுமணமிக்க மணமனையினையே மணங்கமழுங் கானத்துக்குக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார் உவமையாய்க் காட்டினார். இங்ஙனமே, தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடிய மாங்குடிகிழார், அவன் அப் போரினை வென்ற மகிழ்ச்சிப் பெருக்காற் போர்க்களத்திலே ஒரு வரைதுறையில்லாமல் நிரம்பச் சோறுசமைத்து ஆங்கிருந்த வீரர்க்கும் பிறர்க்குமெல்லாம் வரையாது படைத்துக் களவேள்வி செய்தமைக்கு, திருமணவிழாநாட்களில் அங்குவரும் உற்றார் பெற்றார்க்கும் ஏழை யெளியவர்கட்கும் ஒரு வரைதுறையின்றி நெய்ச்சோறு ஆக்கிச் சலியாது தருமாற்றினை எடுத்துக்காட்டும் உவமை,

‡ "ஈனு வேண்மா ளிடந்துழந் தட்ட
மாமறி பிண்டம் வாலுவ னேந்த
வதுவை விழவின் புதுவோர்க் கெல்லாம்
வெவ்வாய்ப் பெய்த பூதநீர் சால்கெனப்
புலவுக்களம் பொலிய வேட்டோய்நின்
நிலவுத்திக ழார முகக்குவ மெனவே." §

என்று புறநானூற்றுள்ளும் வந்தது.

மேற்கூறியவாற்றால் மணமனையையும் மணமக்களையும் அழகுசெய்தலும், திருமணங் காணவந்தார்க்குச் சோறுபடைத்தலும் பிற சிறு குறிப்புக்களுமட்டும் அறியக்கிடக்கின்றனவே யன்றி, மணமக்கள் திருமணப் பந்தர்க்கீழமர்ந்து திருமணஞ் செய்துகொள்ளு முறைகள்

---

* மலைபடுகடாம்: கடுக. † அகநா: கOஎ.

‡ வாலுவன் - சமையல் ஆள். § புறநானூறு: ௩எஉ.

இனையவென்பதும் பிறவும் புலப்பட்டில. ஆயினுந் தமிழ்க்குள்ள ஐம்பெருங் காப்பியங்களுள்ளும் முதற் பெருங் காப்பியமான சிலப்பதிகாரத் தமிழின்கண் வந்த மங்கலவாழ்த்துப் பாடற்கண் அவற்றிற்குச் சில குறிப்புக்கள் காணப்படுகின்றன.

*"யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ
மாநகர்க் கீந்தார் மணம்"†

என்னும் பகுதியில் திருமணம் நிகழ்தற்கு முன்பு மங்கைப் பெண்டிர் சிலரை அழகு செய்வித்து யானைமேலேற்றி நகரெங்குந் திருமண அறிவிப்பினைத் தெரிவிப்பாரென்பது போதரும்.

‡"அல்வழி, [வெண்குடை
முரசியம்பின முருடதிர்ந்தன முறையெழுந்தன பணிலம்
யரசெழுந்ததொர் படியெழுந்தன அகலுண்மங்கல வணி
மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து [யெழுந்தது
நீல விதானத்து நித்திலப்பூம் பந்தர்க்கீழ்
வானூர் மதியஞ் சகடணைய வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்கள் நோன்பென்னை" §

என்பதனால், முரசு முதலிய பல்லியங்க ளியம்பாநிற்க, மணமக்கள் திருமணப்பந்தர்க்கீ ழமர்ந்து அறநெறியந் தணரை ஆசிரியராகக் கொண்டு அவர்கள் இறைவனை வணங்கி வழிபடுமுறையினை முன்காட்ட அவ்வாற்றால் மேலே காட்டிய 'மைப்பறப் புழுக்கி' யென்னும் அகநானூற்றுச் செய்யுளிற் போந்த 'கடவுட்பேணி' யென்னுந் தொடராற் குறிக்கப்பட்ட இறைவன் வணக்கத்தைத் தீயின்வழியாக வணங்கி வழிபடுதலும் வலம் வருதலுஞ் செய்து, அத் தீயுருவான முழுமுதற் கடவுளை உண்ணி

* எருத்தத்து - கழுத்தின்மேல்.
† முருடு - மத்தளம். அகலுள் - ஊரில்.
‡ சிலப். மங். சங-சச. § சிலப். மங். சடு-ருங.

னைந்து அந் நினைவோடு அவர் முன்பு தாலிகட்டி மணங் கூடுவரென்னும் முதன்மையான செய்தி நன்கு வெளிப்படுகின்றது. இன்னானுக்கு இன்னாள் மனைவியாவாளென்பதற்கு அடையாளமாகத் தமிழ்ப் பெண்டிர்க்கு அணியப் படுந் தாலியைப்பற்றிய குறிப்பு, ஆயை, உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாடிய

* "ஈகை அரிய இழையணி மகளிர்"†

என்னுந் தொடரிலும் அதன் உரையிலும் புறநானூற்றினுள்ளேயே வந்திருக்கின்றது.

"வால் இழை மகளிர் நால்வர் கூடி"‡

என்று நல்லாவூர்கிழார்பாடிய செய்யுட்டொடரில் அகநானூற்றுள்ளும் வருதல் காண்க. ஆகவே திருமணத்திற் றலைவி மார்க்குத் திருமணக்குறியாக ஆடவர் தாலிகட்டும வழக்கம் தமிழ் நாட்டிற் பண்டுதொட்டே நிகழ்ந்து வருகின்றதென்பது பெறப்படும்.

இன்னும்,

§"விரையினர் மலரினர் விளங்கு மேனியர்
உரையினர் பாட்டினர் ஒசிந்த நோக்கினர்
சாந்தினர் புகையினர் தயங்கு கோதையர்
ஏந்திள முலையினர் இடித்த சுண்ணத்தர்
விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர் முகிழ்த்த மூரலர்
போதொடு விரிகூந்தற் பொலனறும் கொடியன்னார்
காதலர் பிரியாமற் கவவுக்கை ஞெகிழாமல்
தீதறு கெனவேத்திச் சின்மலர் கொடுதூவி
அங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார்" $

* ஈதற்கரிய அணி : தாலி யென்றபடி.

† புறம். கஉஎ. ‡ அகம். அசு.

§ விரையினர் - நறுமணப் பூச்சினராய். ஒசிந்த - வளைந்த மக்கள்நெருக்கத்தால்வளைந்துவளைந்துநோக்கிய என்பது.

$ சிலப். மங். ருச-சுச.

என்னும் அம் மங்கலவாழ்த்தின் மேற்றொடர்ந்த பகுதியினால், திருமணப்பந்தரைச் சூழவிருக்கும் இளமகளிர், விளங்கிய மேனியராய், 'சந்தனமுங் கருப்பூர முதலியனவும் புழுகிலும் பனிநீரிலும் நனையவைத்த' நறுமணப் பண்டங்களும் மலர்களும் நெய்விளக்குகளும் அழகிய அருங்கலங்களுள் முளைப்பாலிகைகளும் தம் கைகளிலே வரிசை வரிசையாய் ஏந்திக்கொண்டு, புன்னகைவிளங்கும் முகத்தோடும் ஒதுங்கிய பார்வையோடும் உரையும் பாட்டும் இசைத்தபடியாய்ப் பந்தரைச்சுற்றிவந்து வாழ்த்தும் வழக்கம் வெளிப்படுகின்றது. மகளிராற் செய்யப்படும் இவ் வழக்கமுண்மை சிலப்பதிகாரத்துக்கு முற்பட்ட பத்துப் பாட்டினும்,

* "பிடகைப் பெய்த கமழ்நறும் பூவினர்
பலவகை விரித்த எதிர்பூங் கோதையர்
பலர்தொகு பிடித்த தாதுகு சுண்ணத்தர்" †.

என்று மதுரைக் காஞ்சியுள் வந்தது.

இனி, இப் பண்டைத் தமிழரின் திருமண நிகழ்ச்சிப் பழக்க வழக்கங்களைச் செவ்விதின் விளக்கிக் கூறுவதான மற்றோரகநானூற்றுச் செய்யுட்கண்ணும்‡

§ "உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற்று அமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரி"

எனவும்,

$ "கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கள்
கேடுஇல் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்

---

* பிடகை - பூந்தட்டில்.

† மதுரைக்காஞ்சி, ௬௬௭-௯.

‡ மிதவை - குழையல். அமலை - திறள். ஞெமிரி - பரப்பி.

§ மண்டையர் - ஏனத்தை யுடையரான. $ அகம். அசு.

* பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வால்இழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோன் பெட்கும் பிணையை ஆகென
நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றை"

எனவும்,

†"கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரில் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓர்இல் கூடிய உடன்புணர் கங்குல்"

எனவும் வருகின்ற பகுதிகளால் முறையே திருமண நாளின் முன்னுளிரவெல்லாம், உழுந்து முதலியவற்றைக் கலந்து குழையச் செய்யப்படுங் 'கூட்டு' 'குழையல்' முதலான கறிவகைகளும் பருப்புச் சிற்றுண்டிகளுங் குழம்புகளுங் கூடிய உணவுவகைகளைக் குவியல் குவியலாகச் சமைத்துச் சேர்த்தல், மனையை அழகு செய்தல் முதலான திருமணமுயற்சிகளைச் செய்துவந்து, அந்நாள் விடியற் காலையிலேயே அம் மணவினை நிகழ்ச்சியைத் தொடங்குவரென்பதும், அப்போது தக்காரான இளமகளிர் சிலர் தலையிலுங் கையிலுமாக நறுமணக் கூட்டங் கலந்த நீர்க்குடங்களை முறைமுறையாகக் கொணர்ந்து முன்னும் பின்னுமாகக் கொடுக்க மக்கட்பேறு வாய்ந்த மணவணியணிந்த மாதரார் (சுமங்கலிகள்) நால்வர் கூடி அம் மணநீரை வாங்கி அதன்கண் மணமலரும் பெய்து, 'கற்புநெறி வழுவாது காதலிற் சிறந்து கணவனுக்கும் விருந்து முதலிய பிறர்க்கும் வேண்டும் நல்லன அளித்து மக்கட்பேறு வாய்ந்து திருவருளால் காதலன் விரும்பும் நன் மனைவியாகுக'வென வாழ்த்தியபடி குளிப்பாட்டி, அதன்பின்

---

* பெட்கும் - விரும்பும் † சும்மையர் - ஒலியினராய்,

தலைவியை உடையுடீஇ மணியணீஇ மலரிரீஇ அப் பந்தரமர்த்துப் பெருமைபொருந்திய இல்லக் கிழத்தியா'கென நன் மகளிர் வாழ்த்துக் கூற முன் சிலப்பதிகார மங்கல வாழ்த்தின்கட் கூறியாங்குத் திருமணம் நிகழ்த்துவரென் பதும் நன்கு வெளிப்படுகின்றன.

மூன்றுநாள் திருமணம் :

இனி,

"ஆதிக்கரணமும் ஐயர் யாத்த கரணமுமென்னும் இருவகைச் சடங்கானும் ஓர் குறைபாடின்றாய் மூன்று இரவின் முயக்கம் இன்றி ஆன்றோர்க்கு அமைத்தவகை யாய்ப் பள்ளி செய்து ஒழுகி நான்காம் பகலெல்லை முடிந்த காலத்து, களவிற்புணர்ச்சிபோலுங் கற்பினும் மூன்று நாளுங் கூட்டமின்மையானும் நிகழ்ந்த மனக்குறை தீரக் கூடிய கூட்டத்தின் கண்ணும்; அது நாலாம் நாளை இரவின் கண்ணதாம்."* என்றும்,

"முதனாள் தண்கதிர்ச் செல்வர்க்கும், இடைநாள் கந்தருவர்க்கும், பின்னாள் அங்கியங்கடவுட்கும் அளித்து நான்கா நாள் அங்கியங்கடவுள் எனக்கு நின்னை யளிப்ப யான் நுகரவேண்டிற்று" என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப்பியக் கற்பியலுரையில் உரைகிளக்கின்றமை யால், மேற்கூறிய முறையிலே நடைபெறுந் தமிழர் திரு மணம் மூன்றுநாள் நடைபெற்று முடிய நாலாநாளிரவின் கண் மணமக்கள் கூடுதல் பெறுவரென்று அறியலாம்.

அற்றன்று, பண்டைத் திருமணம் மூன்றுநாள் விழா வாய் நடைபெற்றதென்பதற்குத் தண்கதிர்ச்செல்வர்க் கும் கந்தருவர்க்கும் அங்கியங்கடவுட்கும் மணமகளை யளித்து நான்காநாளே தலைமகன் அவர் கொடுப்பப் பெற்று நுகர்வானென்று நச்சினார்க்கினியர் காட்டும் ஏது தமிழர் கோட்பாடுகட்குங் கற்புமுறைகட்கும் மாறுமாத லின், அவ்வாற்றால் அவர் காட்டும் அவ்வேதுவும், அவ்

* தொல். கற்பு. ரு.

வேதுக்கொண்டு பண்டைக்காலத்தில் தமிழர்க்குள் மூன்று நாள் திருமணமே நடைபெற்ற தென்னும் வழக்கமும் உண்மையாகாவெனின், அஃது ஒக்கும்; எனினும், இம் மறுப்புரையினால் ஆசிரியர் நச்சினார்க்கினியர் திருமண விழாவுக்குக் காட்டிய ஏதுக்கள் பொருத்தமாகாவென்பது பெறப்படுமே யல்லாது, மற்று அவ்வேதுக்கள் பிழை யாமாறு பற்றித் திருமணவிழா மூன்றுநாள் நடைபெறு மூண்மையும் இல்லையாயொழிதல் யாண்டைய தென்க. என்னை? திருமணம் மூன்று நாள் நடைபெறும் வழக்கம் உண்மையாலன்றோ நச்சினார்க்கினியர் அதற்கோ ரேதுக் கற் பித்தனரென்பது. மூன்றுநாள் விழாவுக்கு நச்சினார்க்கினி யர் காட்டிய ஏது பொருத்தமில்லையாயின், வேறு பிற ஏதுக்கள் பொருத்தமாகலாம். மேலும், எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளுக்கு உலகத்திலுள்ள எல்லாமக்களும் உடைமைப்பொரு ளாதல்பற்றித் தலைவியின்பாற் கிழமை பாராட்டுதல் வேண்டுந் தலைமகன் அம் முழுமுதற் கடவுளை மூன்று நாளும் எரியோம்பி வழிபட்டுப் பின்னளிலே அவளை அவ்வாண்டவனிடமிருந்து பெறுதற்குரிய னென் னுந் தமிழர் கொள்கையையே நச்சினார்க்கினியர் ஆங்குக் கூறிய உரைகொண்டு யாம் தெளிதல் வேண்டும்.

தலைவன் மணமகளைத் தீக்கடவுண் மாட்டுப் பெறு தற்குரியனென்று நச்சினார்க்கினியர் கூறுதற்கு இஃது ஏற்றதோ ரேதுவேயாயினும், அங்ஙனம் அவர்மாட்டுப் பெற்றிடுஞ் செய்கையினை மணமகன் ஒரே நாளிலேயே அவரை வணங்கிப் பெறுது அதற்கு மூன்றுநாள் வணக்க மும் வேறு பிற நிகழ்ச்சிகளும் அவற்கு வேண்டப்படுங் கட்டாயம் என்னையோ வெனின், நன்று, திருமணம் முடிந்து கூடப்பெறுங் கூட்டத்துக்கு முன், அக் கூட்ட வின்பஞ் சிறத்தற் பொருட்டு இரண்டு மூன்றுநாட் பிரி வேனுந் தலைவன் தலைவியர்க்கு வேண்டப்படுதலானும், அது "மூன்று நாளுங் கூட்டமின்மையானும் நிகழ்ந்த மனக்குறை தீரக்கூடிய கூட்டத்தின்கண்ணும்; அது நாலாம் நாளை இரவின் கண்ணதாம்," என்று மேலே காட்டிய நச்

சிஞர்க்கினியருரைக் கூற்றின் பொருளுட்பத்தானுஞ் செவ்விதின் விளங்குமாதலாலும், இவைதாமு மன்றி மூன்று பகலாலும் ஐந்துவேளை தீ வளர்த்து இறைவனைத் தீயுருவின் வழிபடுதன்மேலும் அம் மூன்று நாட்களின் திருமணநிகழ்ச்சி முறைகளால் ஆசிரியர் தொல்காப்பிய ஞர் மெய்ப்பாட்டியலிற் கூறிய 'புகுமுகம் புரிதல், பொறி நுதல் வியர்த்தல், நகுநயமறைத்தல், சிதைவு பிறர்க் கின்மை, கூழைவிரித்தல், காதொன்று களைதல், ஊழணி தைவரல், உடைபெயர்த்துடுத்தல்' என்பனவும், 'அல் குல் தைவரல், அணிந்தவை திருத்தல், இல்வலியுறுத்தல், இருகையுமெடுத்தல்'* என்பனவுமான புணர்ச்சி மெய்ப் பாடுகளிலே மெய்யுறு புணர்ச்சியொன்று நீங்கலாக ஏனயவெல்லாம் ஒன்றன்பின் ஒன்ருக அம் மணமக்கட் குள் நிகழ்ந்தது. அவைதம்மால் அவர்தமக்குட் கூடுதல் உணர்ச்சி முறை முறையே வளர்ந்து நாலாநாளிரவின் கண் மெய்யுறு புணர்ச்சியின் மெய்ந்நல வேட்கை மிகல் வேண்டுங் கட்டாயம் திருமண நிகழ்ச்சிக்கு உண்டாதலா லும், அக் கட்டாயத்திற்காகவே திருமணத்திற்கு நிகழ்ச்சி முறைகள் ஏற்பட்டனவாமாதலாலும் களவொழுக்கத் தின் வழியாய் நிகழும், ஒவ்வொரு திருமணவிழாவும் மூன்றுநாள் நிகழ்ச்சிபெற்று நிகழ்தல் அவ்வியல் புணர்ந்த ஆன்ருேர்கட்கு மாறுபாடாதலில்லை யென்றும், மற்று அது கட்டாயமே யாகுமென்றும் அறிந்துகொள்க வென்பது.

இனி ஆசிரியர் நச்சிஞர்க்கினியரின் உரைக்குரிய நூற்பாத் தொடரான,

† "கரணத்தின் அமைந்து முடிந்த காலை
நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்"

என்னுந் தொல்காப்பியர்மொழியில், திருமணம் நடைபெறும் முதல்நாள் இரவே மணமக்கட்குட் புணர்ச்சி நிகழ்ந்த

* தொல். மெய்ப்பாட்டியல்: கங, கச, கரு.
† கரணத்தின் - சடங்கிஞல்.

தென்பதற்கு ஏதொரு சிறு இயையுங் காணப்பட்டிலது. அதன்கண் அவரங்ஙனங் கூறல் வேண்டினாராயின் எளிதி லேயே கூறி முடித்தற்கும் இழுக்கேதுமில்லை. ஆனால் அவர் 'அமைந்து' என்றொரு சொல்லும், 'முடிந்த காலை' என் றிரு சொற்களும் பெய்து வைத்திருக்குஞ் சொற்பொரு ளியைபுகளின் திட்ப நுட்பங்களை மெல்ல உற்றுராயின், அஞ்ஞான்று நிகழ்ந்த திருமணம் ஒரு நாளிலேயே முடிவ தன்றாய் அவ்வொருநாட்குமேலும் நிகழ்ந்து பின்னொரு கால் முடிவதாயிற்றென்பது விளங்கும். இங்ஙனமே மேலெடுத்துக் காட்டிய 'உழுந்து தலைப்பெய்த'வென்னும் அகப்பாட்டின்கண்ணும்,

> "வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
> கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
> பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
> ஓர்இல்கூடிய உடன்புணர் கங்குல்"

என்று வந்தவிடத்து, 'ஓர் இல் கூடிய உடன்புணர் கங்குல்' என்பது ஏதோ வேறோரிரவைப் புணர்ச்சிக்குக் குறித்து நின்றதேயன்றித் திருமணம் நிகழும் அந்நாட் கங்குலைக் குறித்திலது. அற்றன்று ;

> "மழைபட் டன்ன மணன்மலி பந்தர்
> இழையணி சிறப்பிற் பெயர்வியர்ப் பாற்றித்
> தமர்நமக் கீந்த தலைநா ளிரவின்"*

என்னும் அகநானூற்றின் வேறொரு செய்யுளில் திருமணம் நிகழ்ந்த முதல்நா ளிரவிலேயே மணநிகழ்ச்சி முடிந்து கூட்டம் நிகழ்ந்ததென்று கூறினராலெனின், அது பொருந் தாது ; என்னை? 'தலைநாள்' என்பதை முதல்நாளென்று உரைகூறினால், 'முதல்நாள்' என்னும் அச் சொல்லே 'இரண்டாநாள் மூன்றுநாள் நிகழ்ச்சி' யென்னும் எச்சப் பொருளைத் தந்து நிற்றலினென்பது. 'தலை'யென்று கூறிய அளவானே அச்சொல்லுண்மையினின்று 'இடை' 'கடை' என்பவைகளின் உண்மைகளும் எல்லார்க்கும் விளங்கு

---

* அகம். கநசு.

வனவேயாம். எனவே, 'தலைநா'ளென்றதற்கு அங்குச் 'சிறந்தநா'ளென்றே பொருளுரைத்தல் வேண்டும். இவ்வாற்றால் முன்னர்க் கூறிய அகநானூற்றுச் செய்யுட் கருத்துப் போக்குக்கும் அதனால் மேலெடுத்துக் காட்டிய தொல்காப்பியரின் நூற்பாப் போக்குக்கும் தலைநாளிரவின் என்னும் இவ்வகநானூற்றுச் செய்யுட்டொடர்க் கருத்து ஏதுந் தடைசெய்த லின்றென்பது. எனவே, நச்சினார்க்கினியர் கூறிய மூன்று நாட்களின் திருமணவிழவுண்மையும் பிழையாமென்று கொள்ளுதற்கில்லை யென்க.

மேலும்,

" களவினுட் டவிர்ச்சி, வரைவி னீட்டந்
திங்க ளிரண்டி னகமென மொழிப "*

என்னும் இறையனாரகப்பொருணூற்பாவானும், "இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தவிடத்துப் பிராயமும் ஈங்கே உரைக்கப் பட்டதாம்; பதினோராண்டும் பத்துத் திங்களும் புக்க தலைமகளோடும் பதினையாண்டும் பத்துத் திங்களும் புக்க தலைமகனைப்போலும் புணர்தல் வேண்டிற்றென்பது பெற்றாம். அவளும் இருதிங்களுங் களவொழுக்கொழுகப் பன்னீராட்டைப் பிராயத்தாளாம். அது மக்கட் பேற்றுக்குக் காலம்; களவொழுக்கத்திற்குப் பொருந்தாதெனை விலக்கப்பட்டதாம் ஆசிரியர்களானென்பது. இவனும் இருதிங்கள் களவொழுக்கொழுகப் பதினாறாட்டைப் பிராயத்தானும்; அஃது ஆண்மை நிலைபெறுங் காலமாகலாற் களவொழுக்கிற்கு விலக்கப்பட்டது," என்னும் அதன் உரையானும் தலைவன் தலைவியரின் களவொழுக்கம் இரண்டு 'திங்கட்கு மேல் நிகழாதென்பதும், பெரும்பாலும் அக்கால வெல்லைக்கு உள்ளாகவே அது நிகழ்தற்குரியது என்பதும், அதற்குமேல் நிகழுமாயின் திருமணஞ் செய்துகொள்ளுதற்கு முன்னரேயே தலைவிக்குப் பிள்ளைப்பேறு வாய்த்தலும் உண்டாமென்பதும், ஆகவே தலைவிக்குப் பெண்மை தோன்றும் பன்னீரியாண்டின் முடிவிலும் தலைவனுக்கு

* இறைய. கூ௨.

ஆண்மை தோன்றும் பதினாறுண்டின் முடிவிலுமே திருமணம் கட்டாயம் நிகழ்ந்து தீருமென்பதுந் தெளிவாய் அறியற்பாலன.

"அஃதேயெனின், இருதிங்களென்றது அகமென்ற தெற்றிற்கோவெனின், இருதிங்களுள் ஐந்தானும் ஆறுனும் நாள் உளவாகக் களவொழுக்கு ஒழிந்து நின்று வரைந்து புகுவதனேடும் மறுப்பதனேடும் அத்துணை நாளும் புக்கு நிறைந்து நின்றபின்னை அதுபடின்மிகுவான் புகுமென்பது," என்று மேல் நூற்பாவுக்கு மேலுந் தொடர்ந்து நக்கீரனார் உரை கூறுதலால், களவொழுக்கத்துக்கெனப் பண்டைத் தமிழர் மேற்கொண்டு வந்த காலமாகிய இரண்டு திங்கள் அல்லது அறுபது நாட்களுள் அறுபதாநாள் முடிவதற்கு ஐந்து நாட்களோ அல்லது ஆறு நாட்களோ இருக்கும் போதே தலைமகன் திருமணஞ் செய்துகொள்ளத் தொடங்குவனென்பதும், அச்சிலநாட்களாகத் திருமணம் நிகழ்ந்து கொண்டுவந்து அறுபதாநாள் முடிவதற்குள் ஒருநாள் தலைமகளோடு மெய்யுறு புணர்ச்சிக்குப் புகுவனென்பதும் உணரப்படும். இவ்வுண்மையினைத் தஞ்சைவாணன் கோவையுரையாசிரியர் இவ்விறையனாரகப்பொருள் உரைச்சான்றினையே தமதுரைக்கண்ணும் எடுத்துக்காட்டி, "இவ்வாறு நாள்முறையாகக் கூறிவந்து ஐம்பத்தாருநாள் மணமுடிந்ததென்று கூறியதென்னையெனின், 'திங்களிரண்டினகமென மொழிப' என்னும் அகப்பொருட் சூத்திரத்துரையில் இருதிங்களும் நாலுநாளுமிருக்க மணமுடிப்பதியல்பென்று இலக்கணங்கூறினமையாற் கூறியதென்றுணர்க"* என்று கூறித் திருமணம் நிகழுநாள் ஐம்பத்தாரு நாள் என்று நாள குறித்துச் சென்றார். எனவே அன்று தொடங்கி ஏனைத் திருமண நிகழ்ச்சிகளெல்லாம் ஏனையிரண்டுமூன்று நாட்களாக நிகழ்ந்து முடியுமென்க.

திருமணம் நிகழுநாட்களில் தாலிகட்டிக்கிழமைகொள்ளும் முதல்நாளே அம்மூன்று நாட்களுள்ளும் முதன்மையான நாளாக உலகத்தவர்கள் கொள்வராதலாலும், திரு

* தஞ்சைவா. ௩கூக.

மண நிகழ்ச்சிகளெல்லாம் ஒன்றுமுதற் பலநாட்களாக நிகழுமாயினும், திருமணம் என்று முடிக்கப்பட்டதென்று கேட்பார்க்கு அவற்றின் முதல் நாளையே குறிப்பிட்டுப் பின்பு பேசிக்கொள்வது உலக வழக்காதலாலும் அம் முறையில் ஐம்பத்தாறு நாள் மணமுடிந்ததென்று வந்த தஞ்சைவாணன் கோவை யுரைத்தொடரினால், அவ்வைம் பத்தாறு நாட்கு மேலும் இரண்டு மூன்று நாட்கள் விழா தொடர்ந்து நிகழ்ந்ததென்னுங் கருத்து ஏதுந் தடைப்படுத லில்லையென் றறிதல்வேண்டும்.

இங்ஙனமே திங்களளவெல்லாம் முப்பத்தொருநாளும் முப்பத்திரண்டு நாட்களுங்கூட உடைமையால் அவ்வேதுப் பற்றி இரண்டு திங்களென்று காட்டப்பட்ட களவொழுக்க நாட்களின் எல்லை அறுபதா நாளுக்குமேல் ஒன்றிரண்டு கூடி அறுபத்திரண்டு நாட்களின் முடிவாயும் நிற்குமாத லாலும், 'வரைந்து புகுவதனோடும்' என்றதன் மேலும் 'மறுப்பதனோடும்' என்றொருதொடரும் மேலிறையனாரகப் பொரு ளுரையிற் காணப்படுதலால் அவ்வரைவு மறுப்புச் செய்கைகட்கு மேலும் ஒன்றிரண்டு நாட்கள் செல்லுமாத லாலும், ஆசிரியர் நக்கீரனார் இருதிங்களுள் ஐந்தானும் ஆறானும் நாள் உளவாக வென்று கூறி நாட்களை மூன்று நாட்களுக்குமேல் மிகுதியாகக் கூட்டிக் காட்டினமையால் மேற்காட்டிய தஞ்சைவாணன் கோவையுரை காட்டிய ஐம்பத்தாறு நாள் என்னும் நாட் கணக்கும் பிறழ்தலில்லை யென்று அறிந்துகொள்ளல் வேண்டும்.

இவ்வளவும் விரித்துக் கூறியவாற்றாற் பண்டைத் தமிழர் தம் திருமணங்களை மூன்று நாள் விழாவாக நிகழ்த்திக் கொண்டாடினார்களென்பதும், அது முறையே யாகுமென்பதும் வடுப்படாவென்பதும் நன்கு விளங்கும்.

---

# கக. பொருள்வயிற் பிரிவு

[திருமணம் நடைபெற்றபின் இல்லறம் இனிது நிகழும் பொருட்டுப் பொருள் காரணமாகத் தலைமகன் தன் தலைவியைச் சிலகாலம் பிரிந்து செல்லுதல்.]

செங்கதிர்ச் செல்வன் சினங்கரந்த போழ்தினால்
பைங்கொடி முல்லை மணம்கமழ வண்டுஇமிர்
காரோடு அலமரும் கார்வானம் காண்டொறும்
நீரோடு அலமரும் கண்.

—ஐந்திணை யெழுபது முல்லை: க.

'சிவந்த கதிர்களையுடைய பகலவன் சீற்றமடங்கிய மாலைக் காலத்தில், பச்சைக் கொடியையுடைய முல்லைச் செடிகள் பூத்து மணங்கமழ்தலால் வண்டுகள் ஆலிக்க, கார்ப்பருவத்தோடு தடுமாறுகின்ற முகில்களையுடைய வானத்தைக் காணுந்தோறும் என் கண்கள் நீரோடுகூடத் தடுமாறுகின்றன.'

"இசைத்தலு முரிய வேறிடத் தான"* என்னும் தொல்காப்பிய நூற்பாவினாற் 'கதி'ரென்னுஞ் சொல் கதிர்ச் செல்வனென உயர்திணைக்கண் பால்பிரிந் திசைத்த தென்று தெளிதல் வேண்டும்; "திங்கட் செல்வனுஞ் செவ்வியனல்லன்"† என்னுஞ் சிலப்பதிகாரத் தொடரி லுள்ள 'திங்கட் செல்வன்' என்னுந் தொடருக்கு ஆசிரியர் அடியார்க்குநல்லார் உரைக்கும் விளக்க வுரையையுங் காண்க. ஞாயிற்றினை மகனாக உருவகப்படுத்தினமையின், அஞ் ஞாயிற்றுக்குள்ள வெம்மையை மகனுக்கு வெம்மையெனப் படுஞ் 'சினம்' என்னுஞ் சொல்லாற் குறித்தனர்; எனவே, சினங்கரந்த போழ்தினென்றது இங்கு 'வெம்மை யடங்கிய போழ்தி'னென்னும்பொருட்டு; அஃதாவது ஒளிமடங்கிய போழ்தினென்க. ஆல்: அசை. வண்டு இமிர் என்பதற்கு ஏதுப்பொருளதான ஈற்று அகரம் விரித்துக்கொள்க. அங்ஙனமன்றி, மணங் கமழ்தலும் வண்டு இமிர்தலும்

---

* தொல். கிளவியாக்கம். நுக. † சிலப். வேனிற். நுக.

கார்ப்பருவக் குறிகளாகாமல் மாலைப்போழ்தின் குறிகளாய் நிற்றலால் 'வண்டு இமிர் கார்' என்று இயைத்து வினைத்தொகைப் பொருள் கோடல் பிழையாய் முடிந்திடும். மணங் கமழ்தலும் வண்டிமிர்தலும் மாலைப்போழ்தி னிகழ்ச்சிகளா மென்பதை "வண்டூது மல்லிகைப்போதானும் அந்திப்பிறையானுங் கங்குற்பொழுதானும்"* என்று பேராசிரியர் திருச்சிற்றம்பலக்கோவைக்கண் உரைநிகழ்த்து மாற்றாற் றெளிந்து கொள்ளலாம். 'அலம்வரல்' ஒரு சொல். முதல் வந்த 'கார்' பருவத்தையும் பின் வந்த 'கார்' நிறத்தையும் உணர்த்தின. கார்ப்பருவத்தின் அறிகுறி மழைநீராதலால், கார்ப்பருவத்தோடு முகிற்கூட்டங்கள் தடுமாறுகின்றன வென்பது வானெங்குங் கலந்து பெய்யும் மழைநீ ரிடையே முகிற்கூட்டங்கள் தடுமாறி யலைகின்றன என்றபடி. அந்நிகழ்ச்சியினை இந்நூலாசிரியர் மூவாதியார், தலைவியின் கலங்கிய கண்ணீரிடையே அவள் கருவிழிகள் அங்குமிங்குந் தலைவன் வருகின்ற வழி கண்டு உகளும் நிகழ்ச்சியோடு சேர்த்துக் கூறுந் திறம் வியந்து மகிழற் பாலது. இங்ஙனமே இவ்வாசிரியர் ஏனை இயற்கை நிகழ்ச்சிகள் சிலவும் தலைவன் றலைவியரின் அகப்பொரு ணிகழ்ச்சிகளோடு மிகப் பொருத்தமாகச் சார்த்திக் கூறி அவற்றை விளக்குதலில் மிக வல்லுநராய்க் காணப்படு கின்றார்.

†"கல்லேர் புறவிற் கவினிப் புதன்மிசை
முல்லை தளவொடு போதவிழ—எல்லி
அலைவற்று விட்டன்று வானமும் உண்கண்
முலைவற்று விட்டன்று நீர்"‡

என்னும் இவ்வைந்திணையெழுபதின் மற்றொரு பாட்டின் கண்ணும் இவர் அம்முறையினை அழகாக இயைத்துரைக் கின்றமை காண்க.

---

* திருச்சிற். ௩௬௪.

† கல் ஏர் - கல் எழுந்து தோன்றும். எல்லி - இரவில். வானம் - மழை. ‡ ஐந்திணை யெழுபது : ௨௪.

பிரிந்து சென்ற தலைவன் திரும்பிவரும் பருவம் கார்ப் பருவமாதலால், வான்குறி வாயிலாக அப் பருவம் வரக் கண்ட தலைவி, பருவம் வந்தும் தலைவன் வந்திலனே என்று பிரிவாற்றாமையினாற் கண்ணிறை நீர்கொண்டனளாய் வருந்துங் கருத்தினை யுட்கொண்டு மேற்பாட்டு இயற்றப் பட்டிருத்தலின், 'பருவங் கண்டு ஆற்றாளாய தலைமகள் தோழியோடு கூறல்' என்று அப் பாட்டிற்குத் துறை கூறிக் கொள்க.

## பொருளின் இன்றியமையாமை :

திருவருளை முன்னிட்டுத் திருமணஞ்செய்துகொண்டு தலைவியைத் தனதில்லத்திற்கு அழைத்து வந்த தலைமகன் அத் திருமணத்தின் பயனான இல்வாழ்க்கையினை மேற் கொள்ளத் தலைப்பட்டனன். இல்வாழ்க்கையினை மேற் கொள்வா ரெல்லார்க்கும் தம்மையும் தம்மைச் சார்ந்த மனைவி மக்கள் பெற்றார் உற்றாரையும் மற்றுமுள்ள ஏனை உறவின்முறையாரையும் ஆன்றோரையும் விருந்தினரை யும் உண்டி உடை உறையுள் முதலியவற்றாற் பாதுகாக் குங் கடமையும், இவையொழிய இன்னும் ஏனையவா யமைந்துள்ள இல்வாழ்க்கைக் கடமைகளும் உண்மையால், அவ்வெல்லாக் கடமைகளையும் முறைப்படி அவ்வக்காலங் களிற் செய்வதற்குப் பொருள் இன்றியமையாததாய் வேண்டப்படுகின்றது. "பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்"* என்று தலைவந்த ஆசிரியன்மார் நிறுத்துக் கூறின மையும் இக்கருத்துப் பற்றியே யாம்.

தலைவன் திருமணஞ் செய்துகோடற்கு முன்னால் வரைதற்பொருட்டுப் பொருள் தேடினானல்லனாதலாலும், அதற்கும் முன்னால், பொருள் தேடும் ஆண்மைப் பருவமே அவன் வரப்பெற்றிலனாதலாலும் வரைதலுக்குப் பின்னால் நிகழவிருக்கும் இல்வாழ்க்கையின் பொருட்டு அவன்முன் னமேயே பொருள் தொகுத்துக் கொள்ளுதற்கு இட னில்லை. எனவே, திருமணஞ் செய்துகொண்டதன் பின்

* திருக்குறள், அருளுடைமை: சு.

னர்த்தான் தலைவன் தனது இல்வாழ்க்கைக்கு வேண்டப் படும் பொருளைத் தேடுதற்கு இடம் பெற்றான்.

## தனது பொருளால் வாழ்க்கை:

அற்றாயின், தலைவன் செல்வம் முதலியவற்றானும் நிகரற்றவனென்று இயற்கைப்புணர்ச்சிப் பகுதியில் அவற் காவதோரிலக்கணங் கூறுமிடத்து அகப்பொருணூல்கள் ஒத்துக்கூறுதல் என்னையோவெனின், தலைவன்றன் முன்னோர்களாற் றொகுத்து வைக்கப்பட்ட செல்வமெல்லாம் அவற்குண்மையின், அவ்வாறவன் கூறப்பட்டானென்க. எனினும் முதுகுரவராற் படைத்துவைக்கப்பட்ட செல்வத்தையே தலைவன் நிரம்ப உடையனானாலும் அச்செல்வங் கொண்டு அவன் தனது இல்வாழ்க்கையினை நடத்துதல் அவனது தாளாண்மைக்கு அழகாகாதாதலாலும், மேலும் அம் முன்னோரின் பெருஞ்செல்வம் தன் காலத்திற்றனக்கு உதவியானாற் போலவே தனக்குப் பிற்காலத்திலும் தன் பின்னோர்க்கு உதவியாய் நிற்றற்பொருட்டு அதனை முதலாகக் கொண்டு ஏதானுமொரு துறையிற் புகுந்து ஒரு மடங்குக்குப் பன்மடங்காகப் பெருக்கிவைக்குங் கடப்பாட்டினைத் தலைவன் உடையனாதலால் அவன் அப் பெருக்குந் தொழிலை விடுத்துக் கைகொண்டமட்டும் எடுத்துத் தனது இல்வாழ்க்கைக்குச் செலவு செய்துகொள்ளுதல் பொருத்தமாகாதாதலாலும், அம் முன்னோர் பணமென்பது தலைவனுக்குப் பொருள் தேடும் பருவமும் ஆற்றலும் வருந்துணையும் உதவியாய் நிற்றற்குரியதேயன்றி அதற்கு மேலும் அவற்கு அஃது உதவியாதற் கன்றாமாதலாலும் தலைவன் தான் மேற்கொண்ட இல்வாழ்க்கையினை நடத்துதற்குத் தானே முயன்று பொருள்தேடுதலை விரும்பினான்.

முன்னோர்படைத்த பொருள் தனக்கு நிறைய இருக்குமானாலுந் தலைவன் தன் முயற்சியினால் வரும் பொருள்கொண்டே தனது இல்வாழ்க்கையினை நடத்த விரும்பியதற்கு ஏது இதுவேயாமென்பது ஆசிரியன்மார்க்

குங் கருத்தாதல்,"இனிப் பொருள்வயிற் பிரியுமேயெனின், முன்னர்ப் பொருளிலனாயினனாம், ஆகவே எள்ளுநர்ப் பணித்தலும் இரந்தோர்க் கீதலும் என்னும் இவையெல்லாம் பொருட்குறைபாடுடையார்க்கு நிகழாமையின் இக்குறைபாடுகளெல்லாம் உடையனாம்; அவை யுடையானது பொருவிறப்பு என்னையோவென்பது........பொருட் பிணி யென்பது பொருளிலனாய்ப் பிரியுமென்பதன்று, தன் முதுகுரவரால் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாங் கிடந்ததுமன், அது கொடுதுய்ப்பது ஆண்மைத் தன்மை யன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த" பொருள் கொண்டு வழங்கி வாழ்வதற்குப் பிரியுமென்பது'* என்னும் ஆசிரியர் நக்கீரனார் உரையின்கட் பெறப்படும். இனி இதற்குப் பேராசிரியர் திருச்சிற்றம்பலக் கோவையாருரையிற் "பொருள்வயிற் பிரிதலென்பது குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ் செய்தால் அதனான் வரும் பயன் அவர்க்கா மத்துணையல்லது தமக்காகாமையால் தமது பொருள்கொண் டில்லறஞ் செய்தற்குப் பொருடேடப் பிரியாநிற்றல்"† என்று கிளந்துரைக்கும் ஏதுவும் இங்குக் குறிக்கற்பாலது.

## அறிவு முயற்சியும் உடல் முயற்சியும் :

தன் முயற்சியினாற் பொருள்தேட விரும்புந் தலைவன் இனி அதனை எவ்வகையாற் றேடுவனோவெனின்? அது பலவகைப்படுமாதலின், ஈங்கதனை இன்னதுதானென்று குறித்துக் கூறுதல் கூடாமையாகும். உலகத்திற் பொருள் தேடும் வழிகளாயுள்ள தொழில்களெல்லாம் அறிவு முயற்சியும் உடல்முயற்சியுமென இருவகைப்படும். பண்டைக்காலத்தில் அறிவு முயற்சியென்பதைப் புலவரும் அமைச்சரும் கணக்கரும் ஆசிரியன்மார் முதலான ஏனையொரு சிலரும் பயன்படுத்தி வந்தனர். இவரெல்லாரும் அக்காலத்தில் தமிழ்மொழியின் இலக்கண இலக்கிய சமயங்களென்னும் பொது நூல்களையும், அவையே

* இறைய. ௩௯.  † திருச்சிற். பொருள்வயிற்பிரிதல்.

யல்லாமல் இன்னும் அவ்வத்தொழிற்குரிய சிறப்புநூல்களையும் நன்கு கற்றுத்தேர்ந்த பெரும்புலவர்களாகவே திகழ்ந்திருந்தனர். அறிவின் முயற்சியினரான இவரெல்லாரும் தம் தலைவிமாரைப் பிரிந்து செல்வதெல்லாம் பெரும்பாலும் திங்கள் நாட் கணக்கிலேயே இருக்கும். தலைவியரைப் பிரியுந் தலைவன்மார் சில நாட்களிலேயுந் திரும்பித் தலைவியைச் சேருமுண்மை, "இன்ன நாளுள் வருதும்....என்று சொல்லிப் பிரியுமென்பது. நாட்குறித்துப் பிரியலுறுந் தலைமகன் பிரிவுணர்த்திவிட்ட தோழி சென்று தலைமகட்குச் சொல்லியதற்குச் செய்யுள் :

"கேளே பெருக்கும் அரும்பொருள் செய்தற்குக் கேடிறிங்கள்
நாளே குறித்துப் பிரியலுற் றூர்நமர் தீவிழியால்
ஆளே கனலுங்கொல் யானைச்செங் கோலரி கேசரிதன்
வாளே புரையுந் தடங்கண்ணி யென்னோ வலிக்கின்றதே"*

என்று வரும் இறையனாரகப்பொருள் உரைமேற்கோட் பகுதியினாலறியப்படும். பொருள்வயிற் பிரிவுக்கு மட்டுமே இவ்வறிவுமுயற்சி யுடையார்க்கு இவ்வாறு நாட்கணக்கிற் பிரிவு நிகழுமென்று கூறியதாகக் கொள்ளல்வேண்டும். ஏனைய பிரிவுகட்கன்றென்க. ஏனென்றால், 'வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது'† என்று ஆசிரியர் தொல்காப்பியனார் அறிவு முயற்சியின் வேறுவகைப் பிரிவுகட்கு ஆண்டளவுரைத்துக் காலம் வரையறுத்தலி னென்பது.

இங்ஙனமே அறிவுமுயற்சி உடல்முயற்சி யென்பவற்றையும் பெரும்பாலும் அறிவின் நிகழ்ச்சியே யுடையதென்றும் பெரும்பாலும் உடம்பின் நிகழ்ச்சியே யுடையதென்றும் பகுத்துணர்ந்து கொள்ளல்வேண்டும். அவ்வாறன்றி அறிவுமுயற்சிக்கண் உடம்பின் நிகழ்ச்சியே நிகழாதென்றும், உடல் முயற்சிக்கண் அறிவின் நிகழ்ச்சியே நிகழாதென்றுங் கொள்ளலாகாது. ஏனென்றால் இரண்டு முயற்சிகளுந் தம்முள் ஒன்றற்கொன்று உதவி சிறிதாயினும் இல்லாமல் நிகழமாட்டாவாதலி னென்பது.

---

* இறைய. சக. † தொல். கற்பு. சஎ.

இனி உடல்முயற்சியென்பது முற்காலத்தில் அரசரும் வணிகரும் உழவரும் மறவர் கையாள் படியாள் முதலான அவர்தம் ஏவலாளரும் மேற்கொண்டு முயன்று வந்த போரும் பண்டமாற்றும் உழவும் கைவேலையுமான செயல்களாகும். இவர் தம்முள் அரசரும் வணிகரும் அவர் தம் ஏவலாளரும் நாடுங் காடுங் கடந்து வேற்று நாடு கட்குச் சென்று எதிர்த்துப் பொருதும் கொண்டுகொடுத் தும் முயலுதலாற் பொருள் கைக்கொண்டு திரும்புவர். இனி அவரல்லாத உழவரும் அவர்தம் வேலைக்காரரும் தாமிருக்கும் ஊரல்லாத ஏனைப் பல ஊர்களையுந் தமக் குரிமையில் வைத்திருப்பராதலால், பயிர் வைக்குங் காலங் களிலும் அறுப்புக்காலங்களிலும் அவ்விடங்கட்குத் தம் தலைவிமாரைப் பிரிந்துசென்று வைகித் தம்முடைய வேலை களை முடித்துக்கொண்டு விளைபொருட் கையினராய் ஊர் திரும்புவர். உடல்முயற்சி மேற்கொண்ட இவர்தமக் கெல்லாம் பிரிவென்பது பெரும்பாலுந் திங்கட்கணக்கிலும் பருவக்(இருது) கணக்கிலுமே நிகழ்வதாகும். ஏனென்றால், அறிவுமுயற்சியினாலாராய்ந்து ஒன்றைத் துணிதலினும் உடல்முயற்சியினாற் செய்து அதனை முடித்தற்குக் காலம் மிகுதியும் வேண்டப்படுமாதலால், அறிவின் முயற்சியுடையார்க்குப் பிரிவுகள் பெரும்பாலும், நாட் கணக்கில் நிகழ்தலைப்போலன்றி உடம்பின்முயற்சியுடை யார்க்கு அவை பெரும்பாலும் திங்கட்கணக்கிலும் பருவக் கணக்கிலுமே நிகழ்வவாயின வென்க. திங்கட் கணக்கிலும் பருவக்கணக்கிலும் பிரிவுகள் நிகழுமுண்மையையும் "இன்னதிங்களுள் வருதும் இன்ன இருதுள் வருதுமென்று சொல்லிப் பிரியு மென்பது"* என்று இறையனாரகப் பொருளுரையே எடுத்துக் கூறும் உடல்முயற்சியுடைய மூவகையினருள்ளும் அரசருக்கும் வணிகருக்குமே நாடிடை யிட்டுங் காடிடையிட்டுஞ் சென்று வேற்று நாட்டின்கண் உறையுங் கட்டாயம் நேர்ந்திடுமாதலின், அவர்க்கெல்லாம் மேலே காட்டிய திங்கட்கணக்கு பருவக்கணக்குகட்கு

* இறைய. ௬௪.

மேலும் ஒரோவொருகால் பிரிவு நிகழ்தலுண்டு. என்றுலும் பண்டைக்காலத்தில் அவர்தமக்குங்கூடப் பிரிவு நிகழ்ந்ததெல்லாம் ஓராண்டுக்கு உட்பட்ட கால அளவினையுடையதே யல்லாமல் மற்றதற்கு மேற்பட்ட தன்றென்பது நினைவாய்க் கருத்தூன்றற்பாலது. இவ்வுண்மை இறையனுரகப்பொருளில்,

"பிரிவின் நீட்டம் நிலம்பெயர்ந் துறைவோர்க்
குரிய தன்றே யாண்டுவரை யறுத்தல்"

என்று வரையறுக்கப்படுகின்றது.

இனி நாளளவுப் பிரிவு திங்களளவுப் பிரிவு பருவவளவுப் பிரிவு ஆண்டளவுப் பிரிவு என்னும் இந்நான்களவுப் பிரிவுகளிலும் பெரும்பாலும் பண்டைக்காலத்தில் நிகழ்ந்து வந்ததும் நிகழ்தற்குரியதுமாயிருந்தது பருவவளவுப் பிரிவேயாம். உலகத்திலே அறிவு முயற்சியைவிட உடல்முயற்சியே வெளிப்படையாய்த் தோன்றி நிற்பதாதலாலும், அவ்வுடல் முயற்சியினுள்ளும் ஒரு நாட்டினைப் பொருது வெல்லும் போர்முயற்சியே பெருமுயற்சியாதலாலும், வேற்றுநாடு சென்று பொருது மீளற்குப் பருவவளவுப் பிரிவேனும் வேண்டப்படுமாதலாலும், பிரிவென்பதற்குத் குறைந்த அளவும் மிகுந்த அளவும் அல்லாமல் நடுநிலையளவாய்த் தேர்தற்குரியது பருவவளவேயாதலாலும், அக்கால அளவே பிரிவின் உணர்ச்சியினைத் தலைவிக்குந் தலைவனுக்குந் தக்காங்கு விளைத்தற்கேற்றதாதலாலும் மேற்காட்டிய கால அளவுகளிற் பருவவளவுப் பிரிவே பிரிவின்நிலைக்கு ஏற்றதும், பெரும்பாலும் பண்டைக்காலத்திற் பிரிவின் தோற்றத்ததாய் நிகழ்ந்ததும் ஆசிரியன்மார்களாற் பிரிவுக்கென்று ஏனையவற்றிலும் முதன்மையாய்ப் பாராட்டப்பட்டதுமாகும்.

### வேனிலிற் பிரிவு:

இனித் தலைவன் தலைவியர்க்குட் பிரிவு நிகழ்வதெல்லாம் தலைவன் நாடிடையிட்டுங் காடிடையிட்டும் வெளியே சென்று கருதிய தொழிலை முயன்று முடித்தற்கே யாத

லின், அங்ஙனமொரு போர்ச்செயல் முதலான பெருஞ் செயல்களை மேற்கொண்டு முயன்று முடித்தற்கு உரிய காலம் அவற்கு வேனிற் பருவமேயாகும். இஃதன்றி ஏனைய பருவங்களெல்லாம் கருதிய வேலையைச் செய்து முடித்தற்கு மழையாலும் பனியாலும் இடையூறு பயப்பனவேயாம். அவற்றுள்ளும் வேனிற் பருவத்தை அடுத்து வரும் கார்ப்பருவத்தில் ஏதொரு வேலையையுமே, எவர்க்குஞ் செய்ய வொட்டாதபடி அப் பருவம் தனது மழைப் பெயலினாற் றடுத்து நிற்கும். இஞ்ஞான்றுங்கூட உலகத்தில் நிகழும் புறமுயற்சிகளெல்லாம் பெரும்பாலும் வேனிற்பருவத்திலேயே நிகழ்தலும், கார்ப்பருவத்தே நிறுத்தப்படுதலுங் கண்கூடாகும். எனவே ஒரு செயலை யெடுத்து முயன்று ஆற்றவேண்டுந் தலைமகன் அது செய்தற்குரிய வேனிற்பருவத்தே பிரிந்து, அச் செயன் முயற்சி கார்காலந் தொடங்கியவுடன் நிகழமாட்டாமையின் அக் கார்காலத் தொடக்கத்தே அம் முயற்சியை முடித்துக் கொண்டோ அல்லததனை நிறுத்திக்கொண்டோ மீள்வனென்பது நன்கு பெறப்படும். பருவகாலங்களின் இயற்கை நிகழ்ச்சி இவ்வாறாய் இருத்தலாற்றான் ஆசிரியர் தொல்காப்பியனார் தலைவன் பிரிந்து செல்லும் செலவுக்கு வேனிற் பருவத்தையும் அவன் திரும்பவும் மீண்டுவரும் வருகைக்குக் கார்ப்பருவத்தையும் வரம்பறுத்த இலக்கணமாய்க் குறித்து நிறுத்தி,

> *"நடுநிலைவுத் திணையே நண்பகல் வேனிலொடு
> முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"†

எனவும்,

> "காரும் மாலையும் முல்லை"‡

எனவும் அகத்திணையியலில் நூற்பா யாத்தார். பொருளிலக்கண ஆசிரியன்மார் பொதுவாகப் பொழுதுகளைப்

---

* முடிவுநிலை-ஒத்து முடிதலாகிய நிலை. முன்னிய நெறித்து-கருதிய முறைமையினையுடையது.

† தொல். அகத்திணையியல்: ௯. ‡ தொல். அகத்திணையியல்: ௬.

பெரும்பொழுது சிறுபொழுது என்று பகுத்து, அவற்றுள் ஓராண்டுக் கால அளவினை அதன்கட் காணப்படும் பல்வேறுபட்ட இயற்கைத் தன்மைகளைக் கொண்டு அறுவேறு பருவகாலங்களாகவும், அங்ஙனமே ஒரு நாட் கால அளவினை மேற்காட்டிய அறுவேறு பருவகாலங் களின் இயற்கைத் தன்மைகளான அறிகுறிகளை அதன் கட்கண்டு அறுவேறு கூறுகளாகவும், வகுத்து, முன்ன வற்றைப் பெரும்பொழுதுகளெனவும் பின்னவற்றைச் சிறு பொழுதுகளெனவும் வழங்கி இலக்கண உரை நிறுத் திப் பொழுதுகளைக் கணக்கிட்டிருக்கின்றனராதலால், பெரும்பொழுதுகளில் வேனிற்பருவத்தையும் கார்ப்பரு வத்தையும் முறையே பிரிவின் செலவுக்கும் கூடும் வரு கைக்கும் உரிய பொழுதுகளாகக் காட்டினாற்போலவே, சிறு பொழுதுகளினும் அவ் வேனில் கார்ப்பருவங்களின் இயற்கைகளமைந்த நண்பகற்பொழுதையும் அந்திமாலைப் பொழுதையும் ஆசிரியர் மேல் நூற்பாக்களிற் பிரிவு கூட்டங்கட்கு உரிய பொழுதுகளாகக் குறித்துக் காட் டினாரென் றறிதல்வேண்டும். இங்ஙனமே வேனிற் பருவத்தில் நிகழ்வதான தலைமகனது பிரிதலொழுக்கத் தைப் பாலையொழுக்கம் அல்லது பாலைத்திணையென்றும், கார்காலந் தொடங்கிய உடனே தலைவி தன் தலைவன் வரவினை எதிர்பார்த்திருப்பளாதலால், அக் கார்ப்பரு வத்தே நிகழ்வதான தலைமகளது இருத்தலொழுக்கத்தை முல்லையொழுக்கம் அல்லது முல்லைத்திணையென்றும் பொரு ளாசிரியன்மார் வழங்குவராதலின், மேற்காட்டிய தொல் காப்பிய நூற்பாக்களிற் பிரிதலொழுக்கம் நடுவுநிலைத் திணை யென்னும் பெயரானும் இருத்தலொழுக்கம் முல்லை யென்னும் பெயரானுங் குறிக்கப்பட்டன. இனித் தொல் காப்பியத்தின்கண்,

* "அவற்றுள்
நடுவண் ஐந்திணை நடுவணது ஒழிய" †

---

* நடுவண் ஐந்திணை என்றது, கைக்கிளை குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் பெருந்திணை என்னும் எழு திணைகளுள் இடையில் நின்ற குறிஞ்சி முதலிய ஐந்து திணைகள்.

† தொல். அகத். உ

என்னும் அகத்திணையியனூற்பாவிற்கு உரை கூறும் பொழுது ஆசிரியர் நச்சினார்க்கினியர் அந் நூற்பாத் தொடர்க்கண்வந்த 'நடுவணது' என்பதைப் பாலைத்திணை யென்று கூறி, மற்று அதற்கு, "அப் பாலை ஏனையபோல ஒருபாற்படாது நால்வகை நிலத்திற்கும் உரியவாகப் புலனெறி வழக்கஞ் செய்து பாலைக்கு நடுவணதென்னும் பெயர் ஆட்சியுங் குணனுங் காரணமாகப் பெற்ற பெயர்," என்று பெயரேதுவுங் கூறி, அதன் மேலும் "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனில்" என ஆள்ப என்று முன்னர்க் காட்டிய தொல்காப்பிய நூற்பாவினையே அதன் ஆட்சிக்குக் காட்டாகவுங் காட்டி விளக்குவராதலால், 'நடுவுநிலைத் திணை' யென்னும் பெயரான் மேற்கூறப்பட்டது பாலைத் திணையாமென்பதும் இனிது தெளியப்படும்.

இனி நச்சினார்க்கினியர் இந் நூற்பாவுரையினைத் தொடர்ந்து 'நடுவணது' என்னுஞ் சொல் பாலைத்திணைக்குப் பெயராமாற்றிற்கு ஏதுக்காட்டி மேற்கூறுவதொன்றும் ஈண்டைக்கு மிக இன்றியமையாததாய் நின்று உதவுகின்றது. அஃதாவது: "உலகியற் பொருளான அறம் பொருளின்பங்களுள் நடுவணதாய பொருட்குத் தான் காரணமாகலானும் நடுவணதெனக் குணங் காரணமாயிற்று" என்பது. இதனுட் கூறப்பட்ட கருத்து, 'பாலைத்திணை பொருள் வருவாய்க்கு ஏதுவாயிருத்தலால், அது நடுவணதெனப் பட்ட' தென்பது. பாலைத்திணை யென்பது தலைமகனது பிரிதலொழுக்கமென்று மேல் விளக்கிக் காட்டினமாகலானும், நச்சினார்க்கினியரும் இங்குத் 'தலைமகன்' பிரிந்து செய்யும் முயற்சி பொருண்முயற்சியாகு மென்பது பட உரை நிகழ்த்துதலானும் பண்டைக் காலத்திற் றிருமணம் நடந்து இல்லறம் நிகழ்த்தத் தொடங்கிய பின்னர்த் தலைவனுக்கு நிகழும் பிரிவு பெரும்பாலும் பொருள்வயிற் பிரிவேயா மென்பதும், பொருள்வயிற் பிரிதலையே ஏனையெல்லாப் பிரிவுகளினும் பிரிவிலக்கணத்துக் குரியதாகப் பண்டையாசிரியன்மா ரெல்லாரும் எடுத்துப் பாராட்டினரென்பதும், இல்வாழ்க்கை யமர்ந்த திருமணமக்கட்கு

இயல்பின் நிகழ்வதான இப் பிரிவே, 'ஓதல், காவல், பகை தணிவினை, வேந்தர்க் குற்றுழி' முதலான நாடுங் காடுங் கடந்து செல்லும் ஏனைப் பிரிவுகளை யெல்லாம்* அவை தாமுங் பொருள் நோக்கங் கொண்டனவேயா மாதலின் தன்கண் ணடக்கித் தானே அவையெல்லாவற்றினும் முதன்மைத்தாய்க் கருதப்படுங் கருத்துடையதாமென்ப தும் நன்கு விளங்காநிற்கும். எனவே திருமணங்கூடி இல்வாழ்க்கையினை மேற்கொண்ட தலைமகனுக்குப் 'பிரிவு' என்று கூறிய அளவானே, அது பெரும்பாலும் பொருள் வயிற் பிரிவினையே உணர்த்துமென் றறிதல்வேண்டும். ஆகவேதான் பிரிவினிலக்கணத்தைக் கூற வந்த இக் கட்டுரை 'பொருள்வயிற் பிரிவினை'யே தனக்கு முதனோக்க மாக எடுத்துக்கொண்ட தென்பது.

வழிநிலம் :

இன்னும் ஒன்று : பிரிதலொழுக்கத்தினைப் பாலைத் திணை யென்று கூறினாற்போலவே அப் பிரிவிற்குரிய நில மும் பாலைநில மென்றே பண்டைப் பொருளிலக்கணப் பனுவல்கள் கூறுநிற்கும்.

† "கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை
வறனுற லங்கோ டுதிர வலங்கடந்து
புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை
யிரவுக்குறும் பலற நூறி நிரைபகுத்
திருங்கண் முடுக்கர்த் திற்றி கெண்டுங்
கொலைவி லாடவர் போலப் பலவுடன்
பெருந்தலை யெருவையொடு பருந்துவந் திருக்கும்
அருஞ்சுர மிறந்த கோடியோர்க்கே" ‡

---

* இறைய. கூடு.

† காட்ட-காட்டிலுள்ளனவாகிய. கோடு-மானின் கொம்பு. வலங்கடந்து என்றது, அதனை வென்று என்னும் பொருட்டு. குறும்பு - காட்டரண்களில் உள்ளவர்கள். நூறி - அவர்களைக் கொன்று. திற்றி - தின்னப்படும் இறைச்சி. கெண்டும் - கீண்டு தின்னும்.

‡ அகம். கூள.

என்று அகநானூற்றின்கண்ணும்,

* "மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறூஅத் தடுமாற் றருந்துயரங்
கண்ணீர் நனைக்குங் கடுமைய காடு." †

என்று கலித்தொகைக்கண்ணும் ஆன்றோர் செய்யுட்கள் பிரிவிற்குப் பாலைநிலங் குறித்து வந்திருத்தல் கண்டு கொள்க. அற்றாயின் இத்தகைய கொடிய பாலைவனத்திற் றலைமகன் சென்று பொருள் தேடுதற்கு அங்குள்ள வசதிகள் தாம் யாவையோ வெனின், அற்றன்று, ஈங்குக் கூறப்பட்டது பொருள் தேடும் முயற்சியன்று; அப் பொருள் தேடும் முயற்சியின் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்லும் பிரிவே ஈண்டுக் கூறப்பட்டதாம்; எனவே, பொருள்தேடுங் களம் இங்குக் கூறப்பட்டிலதென்றும், மற்றுப் பிரிந்துசெல்லுங் களமே இங்குக் கூறப்பட்டதென்றும் அறிதல் வேண்டும். ஓர் ஊரை விட்டுப் பிறிதோரூர்க்கோ அல்லது ஒரு நாட்டை விட்டுப் பிறிதொரு நாட்டிற்கோ பிரிந்து செல்கின்றவர்கள், அவற்றினிடையிடையே முள்ளுங் கல்லும் மணலும் வெளியுங் காடுஞ் செடியும் மிடைந்து எதிரும் இயற்கைநிலத்தூடு செல்லல் வேண்டும். அவ்வியற்கைநிலத்தினையே பாலை யென்ப. இதனை,

"முல்லையுங்‡ குறிஞ்சியு§ முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" $

என்னுஞ் சிலப்பதிகாரத்தானும்,

---

* மரை ஆ-மரை என்னும் மான். மரல்-அதற்கு உணவல்லாத கற்றாழைப் பூடு; அரலை என்னும் புதலுமாம்.

† கலித். பாலை. சு. ‡ காட்டு நிலம். § மலைநிலம்.

$ சிலப். கக : சூசு-சு.

"நிழலுரு விழந்த வேனிற்குன் றத்துப்
பாலை சான்ற சுரம்" *

என்னும் மதுரைக்காஞ்சி யானும் அவற்றினுரைகளானுந் தெளியக் காண்க.

பிரிவுணர்ச்சி :

தலைமகன் தன் தலைமகளைப் பிரிவதற்குமுன்பு அவன் தன்னூரின்கண் இருந்து பொருள் விருப்பத்தினால் உந்தப் படுவானாதலால், அவற்கப்போது பொருளின் மேலேயே நினைப்பிருக்கும். அப்போது தலைமகளைப் பிரிவதன் உணர்ச்சி அவனுள்ளத்தில் எழுந்து தோன்றாது. இனி, அவன் தலைமகளைப் பிரிந்து வேற்றுநாட்டிற்குச் சென்று சேர்ந்துவிட்ட பிறகு பொருள்தேடும் முயற்சியைத் தொடங்கி விடுவானாதலின் அவற்கப்போது அம்முயற்சியை முடித்தலிலேயே மிக முனைந்த நினைப்பிருக்கும். அப்போது தலைமகளைப் பிரிந்ததன் உணர்ச்சி அவனுள்ளத்தில் எழுதற்கே இடமில்லை. ஆகவே தலைவனுக்குத் தன்னூரின்கண்ணும் வேற்றூரின்கண்ணும் வெவ்வேறிரு நினைப்புக்களும் அவனுள்ளத்தைக் கௌவிக் கவர்ந்து பிரிவுணர்ச்சி மிக்கெழற்கு இடந்தாராது முனைத்து நிற்றலால், மற்று அவன் அவ்விருவேறூர்களின் இடைக் கண்ணதான சுரநெறி பற்றும்போது மட்டும் தன் தலைவியைப் பிரிந்த பிரிவுணர்ச்சி ஆங்கவனுணர்ச்சிக்குப் புலன் வழிப் போந்த இயற்கைக் காட்சிகளானும் நிகழ்ச்சிகளானும் மிக்குத் தோன்றி அவன் நெஞ்சத்தைக் கவர்ந்து நிற்குமென்க. ஆகவே தலைவனுக்குப் பிரிவினுணர்ச்சி பாலை நிலத்தேயே நிகழுமுண்மை தெளியப்பட்டது.

இனித் தலைமகளும் தலைவன் தன்னூர்க்கண் இருக்கும் போது தன்னொடு கூடியிருப்பனாதலால், அவட்கப்போது பிரிவினுணர்ச்சி மிக்கெழுமாறில்லை. மற்றுத் தன் தலைவன் தான் வேண்டும் ஊர்க்குச் சென்றுவிட்ட பின்னர் அவன் அங்குத் தொடங்கும் முயற்சி திருவருளால்

---

* மதுரைக் காஞ்சி, ௩௧௩-௪.

நன்கு நிறைவேறல் வேண்டுமென்னும் நினைப்பினளா யிருப்பளாதலால் அப்போதும் அவட்குப் பிரிவினுணர்ச்சி மிக்குத் தோன்றுமா றில்லை. ஆனால் அவன் தன் ஊரினின் றும் புறப்பட்டுப் பாலைநெறி பற்றிச் செல்லும்போது தான், 'ஆ! இங்ஙனமும் இக் கொடிய நெறியின்கட் பிரிந்து செல்ல நேர்கின்றதே' என்னும் பிரிவினினைப்பும், அவன் தன் செயல் முற்றி மீண்டும் அவ் வாரதர் பற்றும்போது கார்காலந் தொடங்கிவிடுதலால் தலைவி காமக்குறிப்பு நிகழப்பெற்றுத் தனக்கு நிகழ்ந்த அந் நிகழ்ச்சிக்குரிய இயற்கைத் தோற்றங்களையும் அத் தோற்றங்கள் ஒருங்கு புலப்பட்டு விளங்கும். இயற்கை நிலமாகிய பாலை நிலத் தினையும் அவ்வழி வாற்குரிய தலைவன் வருகையையும் நினைப்பளாதலின், 'கார்காலந் தொடங்கியும் தலைவன் இன்னும் வந்திலனே' என்னும் பிரிவினினைப்புந் தலைமகள் மிகவும் உணரப்பெறுவள். மேலுந் தலைவன் பாலைநெறி யிற் செல்லும்போதுதான் அந்நிலத்தின் கொடுமைக்கு அஞ்சி அவ்வச்ச நினைப்பின் வாயிலாகத் தன்கட் கிடந்த பிரிவுணர்ச்சியினை அவள் நெஞ்சு இடையறாது நினைத்தற் கிடம்பெறுமென்பது. எனவே, தலைமகள் தன் தலைவன் பாலைக்கண்ணனும் போதே பிரிவினுணர்ச்சி மிக்கெழப் பெற்றுத் தன் தனிமைக்கும் அவன்றன் தனிமைக்கும் எண்ணி வருந்துவளென்பது உணரப்படும். ஆகவேதான் பிரிதலொழுக்கமாகிய பாலைத் திணைக்கு அகப்பொருளிலக் கணத் தொல்லாசிரியன்மார் பாலைநிலத்தினை உரிய நில மாக நிறுத்து ஆணையிட்டுரைத்தனரென் றறிந்துகொள்க.

அறிவித்துப் பிரிதல் :

இனித் தலைமகன் பொருள்வயிற் பிரியுங்கால் தன் பிரி வினைத் தலைவிக்குந் தோழிக்கும் அறிவியாமலே பிரிந்து செல்லுதலும் உண்டென்பது,

* "நிலம்பெயர்ந் துறையும் எல்லாப் பிரிவும்
ஒழிந்தோர் அறியவும் அறியாமையும்
கழிந்துசேட் படூஉ மியற்கைய வென்ப." †

* சேட்படூஉம் - தொலைவிற் செல்லும். † இறைய. ஙஉ.

என்னும் இறையனாரகப்பொருள் நூற்பாவிற் பெறப்படும். இந் நூற்பா பண்டைக்காலத்தில் ஒருசார் நிகழ்ந்த நிகழ்ச்சியையே குறிக்கின்றதென்பது 'அறியவும் அறியாமையும்' என்று 'அறிவித்துப் பிரிதல் அறிவியாது பிரித'லென்னும் இரண்டுவகைகளேயும் எடுத்துக் கூறினமையாற் றெளியப்படும். இன்னும், அவ்விரண்டனுள்ளும் அறிவித்துப் பிரிதலேயே முன்னெடுத்துக் கூறினமையால், அதுமட்டுமே பண்டைக்காலத்திற் பெருவழக்காக நிகழ்ந்ததென்பதும், முறைக்கு ஒத்ததென்பதும் அந்நூற்பா முறையினாலேயே விளங்கிக் கிடக்கின்றன. ஆகவே அறிவியாமற் பிரிதல் அங்ஙனம் பண்டைத் தமிழரிடையே பெருவழக்கிற்றாய் நிகழாததோடு, முறையாகு மென்றுங் கருதப்படவில்லையென்பதும் அதுகொண்டே முடிக்கப்படும். இவ்வுண்மையைப், 'பிரிகின்றவன் தலைமகளேயுந் தோழியையும் அறியச் சொல்லிப் பிரிதலும் உடையன், அறியாமைப் பிரியவும் உடையன்; இரண்டும் இலக்கணமென்பது. அவற்றுள் அறியாமைப் பிரிதல் பொருத்தமின்று, அறியப்பிரிவது யான் இன்னதோர் இடத்து இன்னதொரு கருமம் முடித்து வருவேனென அவளை உடன்படுவித்துப் பிரிவதே தக்கது' என்று அந்நூற்பாவின் உரையும் நன்கெடுத்து விளக்கிற்று. மேலும், காடிடையிட்டும் நாடிடையிட்டும் நெடுந்தொலைவு சென்று நெடுநாள் தங்கி அதற்கப்பால் மீளல் வேண்டுந் தலைமகன், தன் செலவினைத் தன் நலத்தினையே பெரிது விரும்பி அதன்பொருட்டே இடையறாத நினைப்பினளாய் உயிர்தாங்கி உடன்வாழ்ந்து ஒத்துழைத்து வரும் தன் அருமைத் தலைவிக்கு அறிவியாமலே பிரிந்து செல்லல் அவள் தனக்கு ஓயாப் பெருங் கவலையை வருவித்து அதன் முகத்தால் ஒரோவொருகால் அவளுயிருக்கு இறுதியையும் விளைத்துவிடுமாதலால், அங்ஙனம் அவட்கு அறிவியாமற் பிரியுந் தலைமகனது பிரிவு முடிவில் அவன்றனக்கே கூற்றொணாப் பேரின்னலைத் தப்பாமல் விளைவித்திடும் பிழைபட்ட செயலாய் முடிந்திடுமென் றறிதல் வேண்டும்.

அற்றன்று, ஒரு நொடி நேரந்தானுந் தன் தலைவன் பிரிவுக்கு உடன்படாத் தலைவிக்கு, விரைந்துசென்று முடித்தற்குரிய ஒருமுதன்மைச் செயலின் பொருட்டாக வேனும் அல்லது தலைவிக்கு அச்சந்தரற்பாலவான போர் நிகழ்ச்சிகளைப் போன்ற கொடுநிகழ்ச்சிகளின் பொருட் டாகவேனும் தான் பிரியவிருத்தலைத் தலைவன் அறிவிப்பா னாயின் ஒரோவொருகால் அவள் பிடிவாதமாய் நின்று மறுத்து அச் செலவினைத் தடைப்படுத்துதலுஞ் செய்வ ளாதலால், அஃதவட்கு அஞ்ஞான்று அறிவிக்கப்படுதல் பிழையாய் முடியுமெனின், அறியாது கூறினாய்; பொய்யி னின்றும் மெய்யைப் பிரித்தறியவல்ல பேரறிவாற்றலும், அப் பேரறிவாற்றலால், எத்தனைதான் இடையூறு பயந்து முடிவில் உயிர்க்கிறுதியையே விளைப்பதாயினுந் தாம் மெய் யென்று காணுஞ் செயலினை அக் கொடிய இடையூறுகளி னிடையே நிறீஇ அஞ்சாது ஆற்றவல்ல பேராண்மையும் உடைய பெண்டிராயின், அவர்தாம் தம் தலைவன்மார் எத்தனை கொடுஞ்செயலையே எடுத்துரைத்து அவற்றின் பொருட்டுப் பிரிதல் வேண்டுமென்று கூறுவாராயினும் முறையென்று கண்ட அவற்றிற்காக அவரெல்லாம் உடனே இசைந்து நிற்பரல்லது தடுத்து நிற்பரல்லரென்க. இக் கருத்தினோடொப்பவே இறையனாரகப்பொருளுரை யாசிரியரும் மேற்காட்டிய உரையினைத் தொடர்ந்து "தலை மகன் பிரிந்து பொருள் முடித்துமென்றக்கால் தலைமகள் ஆற்றாளாகவே யெனின், அவரது ஆள்வினையை இடை யூறு செய்தாராவர் பிற" என்றும், "சாதலுங் கெடுதலும் எல்லா உயிரும் அறியுமேயெனினுஞ் செத்தாலோ என் பதனாற் கலங்கார் மனன்" என்றுமெல்லாங் கூறிக் கொண்டுவந்து முடிவில் 'அறியப் பிரிவதே வலிவுடைத்து' என்று தங்கோள் நிறீஇ அப் பகுதியைப்பற்றிய தமது உரையினை முடித்திடுதலுங் கண்டுகொள்க.

பண்டைத் தமிழ்ப் பெண்மணிகள் தக்கதறியும் அறி வினும் உற்றதஞ்சா ஆண்மையினும் மிக்கு விளங்கினார்கள் என்பதற்கு,

*"நெருந லுற்ற செருவிற் கிவள்கொழுநன்
பெருநிரை விலங்கி யாண்டுப்பட் டனனே;
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறுமயிர்க் குடுமி யெண்ணெய் நீவி
யொருமக னல்ல தில்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே"†

என்பது போன்ற பழம்பாட்டுகள் சான்றாய் நின்று உண்மை யறிவித்தலுங் காண்க. எனவே, தலைமகன் தனது பிரிவினைத் தன் அருமைத் தலைவிக்குத் தெரிவித்து அவள் உடன்பாடு பெற்று அப் பிரிவுக் காலங்களில் அவள் நலத்திற்கு வேண்டும் அறிவுரைகள் கூறி அவள் தன் தோழிக்கும் அவளைப் பாதுகாத்து நிற்றற்குரிய விழிப்புரைகள் கட்டளையிட்டுப் பின்பு பிரிதலே ஆசிரியன்மாராற் பாராட்டப்படும் பண்டைப் பழக்கமாம் என்பது செவ்விதின் விளங்கிற்று.

## தலைவியை விடுத்துச் செல்லுதல் :

இனிப் பொருள்வயிற் பிரியுந் தலைமகன் தன் தலைவியையும் உடன்கூட்டிச் செல்லும் வழக்கம் பண்டைக் காலத்தில் நிகழ்தலில்லை யென்பதும் அறியற்பாலது. ஏனென்றால், தலைவன் தன் தலைவியையும் உடன் கூட்டிச் சென்று பொருள்தேடுவதொன்றுண்டானால் அவர் தம்முட் பிரிவென்பது ஒன்று இல்லையாய், அவ்வாற்றாற் 'பொருள்வயிற் பிரிவு' என்னுந் தொடர்முதலாயினவும் பொருளாசிரியன்மாரால் ஓர் இலக்கணவுறுப்பாக எடுத்து விளக்கப்படுதலு மில்லையாய் ஒழியுமாதலி னென்பது. தலைவியையும் உடன்கூட்டிச் செல்லும் வழக்கம் பண்டு நிகழ்ந்ததில்லை யென்பதனை,

"முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை."‡

* விலங்கி - மாறுபட்டு. பாறு - விரிந்த.

† புறநானூறு, உஎக.  ‡ தொல். அகத். ௩௪.

என்று ஆசிரியர் தொல்காப்பியனர் அகத்திணையியலிற் கட்டளை யிட்டுரைத்திருப்பவும், அந்நூற்பாவுக்கே "தலைமகன் தன் தலைவியோடு கலத்திலேறிக் கடல் தாண்டிச் செல்வதில்லை. ஆயினுங் காலிலேறி நாட்டிடையே செல்வதுண்டு" என்று தமக்கு வேண்டிய வகையாய்ப் பொருந்தாப் பொருளுரைத்துப் 'பொருள் பொருட்டுத் தலைவன் தன் தலைவியோடு செல்லும் வழக்கமும் பண்டு நிகழ்ந்ததுண்டு,' என்று உண்மையைத் திரித்துக் கூறுவாருமுளர். ஆனல் ஆசிரியர் நச்சினார்க்கினியர் அந்நூற்பாவுக்கு உரைக்குந் தமதுரைக்கண் அவர் கோள் எடுத்து, தக்க ஏதுக்கள் காட்டுவதுடன் அதற்கு இலக்கியச் சான்று இல்லை யென்றுங் கூறித் திட்ட வட்டமாய் மறுத்திடுதலின், அது பொய்க்கோளா மென்றே கொள்ளற்பாற்று. ஆசிரியர் தொல்காப்பியனர் தலைவன் தன் தலைவியையும் உடன் கூட்டிக்கொண்டு தன்னூர் நடந்து செல்வதெல்லாம், அவளுடன் யாறுங் குளனும் படிந்து நீர் விளையாடியும், குன்றும் பொழிலுந் தங்கிப் பூ விளையாடியும் அங்கெல்லாங் காணப்படும் புது மகிழ்ச்சியினை நுகர்ந்துறைதற்கேயா மென்று,

*"யாறுங் குளனுங் காவும் ஆடிப்
பதியிகந்து நுகர்தலும் உரிய வென்ப"†

என்று கற்பியற்கண் ஒரு நூற்பா இயற்றி நிறுத்துகின்றார்.

‡"நான்மாடக் கூடன் மகளிரு மைந்தருந்
தேனிமிர் காவிற் புணர்ந்திருந் தாடுமார்
ஆறு விருப்போ டணியயர்ப காமற்கு
வேனில் விருந்தெதிர் கொண்டு,"§

என்று மற்றிதற்கே பழந்தமிழின் இலக்கியச் சான்றுகளும் உள்ளன. ஆகவே பொருள் நாடி வேற்று நாட்டிற்குச் செல்லுந் தலைமகன் தன் தலைவியையும் உடன்கூட்டிச்

* கா-சோலை. ஆடி-விளையாடி. † தொல். கற்பு. ௫௦.
‡ அணி அயர்ப-அணிகளை அணிவர். வேனில்-வேனிலில்.
§ கலித்தொகை, மருதம் ௨௭.

செல்லல் பண்டைத் தமிழ் வழக்கன்றென்றே தெற்றென உணரல் வேண்டும்.

இனி, இறையனாரகப்பொரு ளாசிரியர்,

*"கற்பினுட் டுறவே கடிவரை வின்றே"†

என்று நூற்பா யாத்துரைத்தலின், தலைமகன் பொருள் வேண்டுங்காலெல்லாம் தன் தலைவியைப் பிரிந்து அஞ்சாமை யோடும் அறிவு ஆண்மைகளோடும் நின்று போதுமான பொருட்டிரளைக் குறைவில்லாமற் றேடிக் கொணர்ந்து தான் மேற்கொண்ட இல்வாழ்க்கையினைத் தன் வாழ்க் கைத் துணையுடன் கூடியமர்ந்து ஒழுங்காய் நிகழ்த்தி வருவனென்பது மேல் நூற்பாவினுட் 'கற்பினுட் கடிவரை வின்றே'யென்றமையால், பிரிவிற்குக் களவினுட் கடிவரை வுண்டென்பது விளங்கும். அவ்வாற்றாற் களவொழுக்கம் பிரியாமைக்கும், கற்பொழுக்கம் பிரிவுக்குமே இலக் கணமா யமைந்திட்டனவென்க. ஆசிரியர் திருவள்ளுவனர் தாமெடுத்துக் கொண்ட காமத்துப்பாற் கற்பியற்கண் 'பிரிவாற்றுமை' முதல் 'ஊடலுவகை' யீருகப் பிரிவிய லுணர்த்துந் தலைப்புக்களையே கற்பியலிலக்கணமாக எடுத்து நிறீஇ விளக்குதலாலும் இவ்வுண்மை தெளியப்படும்.

---

* கடிவரைவு இன்று - கடிந்து நீக்குதல் இல்லை.

† இறைய. ௩௪.

## கஉ. இல்லற வாழ்க்கை

[அறிவு விளக்கமும் அன்பின்ப விளக்கமும் திருவருள் விளக்கமும் நமக்கும் நம் மக்கட்கும் உண்டாகும் வகையில், காதலர் ஒப்புரவு ஈகைகளுடன் விருந்தோம்பி வாழும் ஒழுங் கான வாழ்க்கை.]

வசைஇல் வான்திணைப் புரையோர் கடும்பொடு
விருந்துஉண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னேடு உண்டலும் புரைவது என்றாங்கு
அறம்புணை யாகத் தேற்றிப்....பெயர்ந்தனன்.

—குறிஞ்சிப் பாட்டு, உ0ரு-அ.

'குற்றமில்லாத உயர்ந்த வகுப்பைச் சார்ந்த பெரி யோர் தம் சுற்றத்தாரோடு வந்து விருந்துண்டு மிஞ்சிய உணவினை நீ இடுகையினுல் யான் உண்ணுதலும் உயர்ந்தது என்று பெருந்தன்மை வாய்ந்த தலைவன் தன் தலைவிக்குக் கூறி, அவ்வாற்ருல் இல்லறம் தம்மைக் கரை யேற்றுங் கருவியாவதாக அவட்குத் தெளிவித்து........ நீங்கினன்.'

'பெருந்தகை புரைவது தேற்றிப் பெயர்ந்தனன்' என முடித்துக்கொள்க. 'புரையோர்' என்னுஞ் சொல் 'உயர்ச்சி' யென்னும் பொருளைத் தரும் 'புரை' என்னும் முதனிலையினின்றுந் தோன்றி 'உயர்ந்தோர்' என்னுங் கருத்திற் பழந்தமிழிலக்கியங்களிற் பெருவரவினதாய்ப் பயின்று வந்துள்ளது. 'புரைவது' என்று பின்னும் அச் சொல் உயர்வுப் பொருளில் வந்திருத்தல் கண்டுகொள்க. உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் ஒவ்வோரினத்திலும் உண்மை யின் 'வான்றிணைப் புரையோர்' என்றிங்கு வந்தது போன்ற தொடர்க்குத் 'தமக்குள்ள ஒழுக்கத்தினுல் உயர்ந்த வகுப்பில் அடங்குதற்குரிய பெரியோர்' என்று பொருள் கூறல் வேண்டுமே யன்றி, பிறப்பினுல் உயர் குடிப் பெரியாரென்று பொருளுரைத்தல் உண்மைக்கு மாறும். திருவள்ளுவப் பெருமானும் 'குடிமை'யென்று ஒரு தன்மையாயெடுத்து விளக்கினமையும் இக்கருத்தினை உட்

கொண்டதென்க. 'வசையில்' என்றமையாற் குற்ற மின்மையும், 'வான்றிணை' யென்றமையால் நன்மை யுண்மையும் புரையோர்க் குரைத்தவாறும். கடும்பு-சுற்றம்; இதனை,

"கம்பொடுங் கடும்பொடும் பரவுதுங்
கொடும்பா டறியற்க வெம்மறி வெனவே"*

என்னும் பரிபாடலடிகளிலுங் காண்க. இங்குக் கூறப் பட்ட சுற்றங்களும் அப் பெரியார் தன்மையை ஏற்று அவர்க்குச் சூழ இருந்து தொண்டு செய்யுந் தொண்டர் குழாத்தினராவர். 'விருந்துண்டெஞ்சிய மிச்சில் உண் டலும்' என்றார், முதற்கண் நல்லராயினர்க்குப் பசி தீர்த்தலே இல்வாழ்வாரின் முதற்கடமையாமென்றற்கு 'பெரியோர்' விருந்துண்டு மிஞ்சிய உணவினை உண்டல் உயர்ந்தது; அதுவுமன்றி அம் மிச்சில் உணவினை நின்னோடு உண்டலும் உயர்ந்தது' என்னுங் கருத்துணரப் படுதலின், உண்டலும் என்பதன் உம்மை எச்சம். 'மிச்சில் உண்டலும், அதனை நின்னோடுண்டலும் புரைவது' என்று பொருள் கொள்க. பாட்டிலுள்ள சொற்றொடர் முறை புரைவது என்னும் ஒருமைவினை ஏற்றது. இல் வாழ்வார் அவர் மிச்சில் உணவினையுந் தலைவியரோடிருந்து உண்டலே சிறப்பாமென்பது கருத்து. தனது உயிரறி வினைத் தலைவி தனது இல்லறச் செய்கையினால் மலவிருள் நீக்கி விளக்கி இறைவன் திருவருளுக்கு இலக்காக்கு தலின், தலைவன் அவள் அருமை நோக்கி 'நின்னோடுண்ட லும் புரைவ' தென்றான். நின்னோடு: வேற்றுமை மயக்கம். அறம் - இல்லறம்; இதற்கு "அறு என்னும் முதனிலையிற் றோன்றி அறியாமையினையும், அது காரண மாகச் செய்யுந் தீவினையையும் அறுப்பதென்னும் பொருட்டாம்"† என்று சொற்பொருளுரைப்பர் ஆசிரியர் மறைமலையடிகள். 'புரையோர்க்கு விருந்திட்டு அதனி னின்றும் மிஞ்சிய மிச்சிற் சோற்றினை இல்வாழ்வார்

* பரிபாடல், உ: எடு-கூ.

† திருவாசக விரிவுரை, சிவபுராணம், ௫௨.

கருத்தொருமித்து உண்ணும் வாழ்க்கையினை யுடைய ராயின், அவ்வகையான இல்வாழ்க்கை அவர்தம்மை இவ் வுலகத்துன்பங்களென்னுங் கடலினின்றும் இறைவன் திரு வடியென்னும் அருட்கரைக்கு ஏற்றுகின்ற நற்புணை யாகும் என்பது இவ்வடிகளின் கருத்து.

## இல்வாழ்க்கை ஒரு தேப்பம் :

பொருள்வயிற் பிரிந்து பொருள் திரட்டி வந்த தலைவன் இனி அப் பொருள்கொண்டு தனது வாழ்க்கைத் துணையான தலைவியுடன் இல்லமர்ந்து இல்வாழ்க்கையினை நிகழ்த்துவான். இல்வாழ்க்கையென்பது, அத் தலைவன் தலைவியரின் உயிரைத் தூய்மைப்படுத்தி அவர்க்கு என்ஞான்றும் அழியாத இன்பப் பெருக்கினை விளைக்குங் கருவியாகும். எனவே தலைவன் தலைவியரின் இல்வாழ்க்கை யென்னும் உயரிய அரண்மனைக்கு அவர் தம் திருமணக் கூட்டமே வாயிற்படியா மென்க. 'இத் திருமணக் கூட்ட மென்னும் வாயிற்படியின் வாயிலாக இல்வாழ்க்கை யரண் மனையுட் செல்லலுறுந் தலைவன் தலைவியர், தமக்குத் திருமணப் பருவம் வரும் வரையில் அறியாப்பருவத்தராய் விளையாட்டியல்பினராய் இருந்துவந்ததுபோல் இனி இருத் தல் இயலாது. தொடர்பானதொரு முதல் நோக்கத்தினை அடிப்படையாக உடைய வாழ்க்கையென்பது இதுகாறும் அவர்க்கு நிகழ்ந்திலது. ஆனால் இனியோ, அவர் தம் நெஞ்சத்தையும் சொல்லையும் செயலையும் முழுதுங் கவர்ந்து நிற்க வல்லதோர் அரிய நோக்கத்தினைத் தனக்கு அடிப் படையாய்க் கொண்ட வாழ்க்கையையே அவர் உடையரா கின்றார். அவர்தம் நெஞ்சும் சொல்லும் செயலும் இனி விரிந்து செல்கின்றன; ஆழ்ந்து செல்கின்றன; நுணுகியுஞ் செல்கின்றன; ஏதொன்றையும் அமர்ந்து உற்று நுணுகி ஆராயவும், ஆராய்ந்து தெளியவும், தெளிந்து உரம்பெற வும், உரம்பெற்றுச் செய்து முடிக்கவும் அவர் இடம் பெறுகின்றனர். அங்ஙனம் ஒன்றனைச் செய்து முடிக்கும் போது எத்தனையோ இடையூறுகள் அவர்தம்மை எதிர்த்து நிற்கும். எதிர்க்குங்கால், அவ்விடையூறுகட்கு அஞ்சித்

துணையும் அஞ்சுவது செய்யாது தாமும் அவைதம்மை எதிர்த்து உடைத்தெறிந்து தாம் மேற்கொண்ட அருஞ் செயலையே எப்படியாயினும் முடிக்குங் கட்டாயத்திற்கு அவர் வருவர். இவ்வகையான முறைகளிலே இல் வாழ்க்கையை மேற்கொண்ட தலைவன் தலைவியர் தமது வாழ்நாண் முழுவதும் இடையறாது பழகுகின்றமையால், அவரது உயிரறிவு அறியாமை தேய்ந்து விளக்கமுற்று விரிந்து பேரறிவாகி இறைவன் அடியிணையை யுணரும் நிலைக்கு வந்திடும். வந்திட, அக் காதன்மக்களின் அவ் வரும்பெருந் தகுதிநிலையினையே நெடுங்காலமாய் எதிர் நோக்கி வரும் ஆண்டவன் தனது இன்னருளை அவர்க்கு வழங்கி அவரைத் தனது பேரின்ப நுகர்ச்சிக்கண் இருத் திடுவன். இல்வாழ்க்கை முறைதன்னை மேற்கொண்ட தலைவன் தலைவியரை இவ்வாறு கரையேற்றுதலாற்றான், தலைப்பி லெடுத்துக்கொண்ட மேற்பாட்டில் தலைவன் தன் தலைவிக்கு 'அறம் புணையாகத் தேற்றிப் பெயர்ந்தனன்' என்க.

இல்வாழ்க்கைமுறை தலைவன் தலைவியரைக் கரை யேற்றுமெனப்படும் இவ்வுண்மை,

*"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே."‡

என்று ஆசிரியர் தொல்காப்பியனார் இல்லறத்தின் பயன் ஈதென்று விளக்கிக் கற்பியல் இறுதியில் இயற்றி நிறுத்திய நூற்பாவினால் நன்கு பெறப்படும். இந் நூற்பாவின் கருத்து, 'தலைவனுந் தலைவியும் இவ்வுலகத்திலே ஒன்றாய்ப் பிணைந்து சுற்றத்தாரோடும் மக்களோடுங் கூடி இல்லறம்

* 'கடைக்கோட் காலை - இறுதிகொண்ட காலத்தில். துவன்றி - சேரச் சூழ்ந்திருந்து. சிறந்தது - தவத்தை, இறந்ததன் - கடந்த மனையறத்தின்.

‡ தொல். கற்பு. ருக.

நிகழ்த்தும்பொழுது, உலகத்தின்கண் நுகரவேண்டிய நுகர்ச்சிகளை யெல்லாம் ஒவ்வொன்றாய் நுகர்ந்து பார்க்கப் பார்க்க அந் நுகர்ச்சிகள்தாம் ஏதும் நிலையாதொழிதலை அறிவின் உணர்வராதலின், முடிவில் அவைதம்மிலெல் லாந் துவர்ப்பு வரப்பெற்று அம்முகத்தால் நிலையான பேரின்ப நுகர்ச்சியினை விளைக்கும் வீடுபேற்றினை விரும் பித் துறந்த உள்ளத்தராய் அந் நெறிக்கேற்றன பழகுவர். இதுவே முற்கூறிய இல்லறத்தின் பயனும்' என்பது. இக் கருத்தினைச் செவ்வையாய் உற்றுநோக்கும்போது, மக்களுயிர்களின் அறியாமைத் தேய்வுக்கும் அறிவு வளர்ச் சிக்கும் காதலுணர்ச்சிவாய்ந்த இல்லறவாழ்க்கை இன்றி யமையாத கருவியாய் முடிகின்றதென்பது தெளிவாய் விளங்கும். எனவே அறியாமையை ஒழித்து அறிவைப் பெருக்கிக் கொள்ளும் அரிய நோக்கத்தோடு பிறக்கும் ஒவ்வொருவரும் காதன் மணம் புணர்ந்து இல்லறம் நிகழ்த்துதலான பெருங் கட்டாயத்தி லிருக்கின்றா ரென் பது சொல்லாமலே பெறப்படுகின்றது. இன்றேல், அவர்க்கு அறியாமை கழலலும் அரிதாய், பின்னர் அறிவு விளங்க லும் அரிதாய், அவ்வாற்றால் இறைவன் திருவருளுற்று வீடு பெறுதலும் முற்றும் அரிதாய், முடிவில் யாதும் இல்லையாய், அவர் பிறப்பின்நோக்கம் நிறைவேறாததாய் ஒழிந்திடும்.

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்."*

என்னுந் திருக்குறண் மொழியினால் ஆசிரியர் திருவள்ளுவர் 'வையத்துள் வாழ்வாங்குவாழ்' தலை விரும்பி விளக்கினமை யுங் கண்டுகொள்க.

பசி தீர்த்தல் :

இனி, 'வையத்துள் வாழ்வாங்கு வாழும்' அவ் வாழ்க்கைதான் யாது என்று ஆராயற்பாலது. உலகத் திலே பிறந்து தனது அறியாமையைத் தேய்த்து அறிவைப்

* திருக்குறள், இல்வாழ்க்கை: ௫0.

பெருக்கிக்கொள்ள விரும்பும் ஒவ்வொருவருக்கும் இடையூறுகளோ எண்ணில்லாமற் பெருகிக்கொண் டிருக்கின்றன. அவற்றுள் தமது நோக்கத்துக்கு ஒரு பெருங்கருவியாய் நின்று உதவுவதான உடம்பிற்கு உறும் இடையூறுகளே முதன்மையாய் நினைந்து பார்க்கத்தக்கவை. உடம்பிற்கு உண்டாம் ஊறுபாடுகளிலும் இன்றியமையாதன பசி, பிணி யென்னும் இரண்டாம். இவ்விரண்டுள்ளும் பிணி பசியினால் உண்டாதலின், பசியே முதன்மையாம். எனவே, வீடுபேறடைய விரும்பும் ஒவ்வோருயிர்க்கும் எதிர்ந்து வரும் இடையூறுகள் எல்லாவற்றிலும் பசியே மிக முதன்மையான இடையூறென்பது செவ்விதின் விளங்கும். விளங்கவே பசித்துன்பம் இல்லாத வகையில் உயிர் வாழ்வதற்கு மக்கள் இடம்பெற்றால், அவர் பையப் பைய வீடுபேறடையவும் இடம்பெறுவர். இன்றேல், அவர் பிறந்தும் பிறவாதவரே யாவர். அவர்க்கு ஏதொரு முயற்சியும் நிகழமாட்டாது.

> "குடிப்பிறப் பழிக்கும், விழுப்பங் கொல்லும்,
> பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்,
> நாணணி களையும், மாணெழில் சிதைக்கும்,
> பூண்முலை மாதரொடு புறங்கடை நிறுத்தும்,
> பசிப்பிணி யென்னும் பாவி."*

என்னும் மணிமேகலை யடிகள் இங்கு உற்றுநோக்கற்பாலன. ஆகவே மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் ஆணும் பெண்ணுமாய்க் காதன்மணம் புணர்ந்து ஒருவருக்கொருவர் உதவியாய் நின்று முதலிலே தமது பசித்துன்பத்தினை நீக்கிக் கொள்ளுதற்கு வழிபார்த்தல் வேண்டும். காதன் மக்கள் தம்மை இந் நிலையில் வைத்துக்கொள்ளும் பொழுதே, பசி நீக்கிக்கொள்ளும் இச் செய்கையையே முடிந்த இன்பம் பயக்கும் முடிந்த செய்கையாய் நினைந்து அவ்வளவின் மகிழ்ந்துவிடாது, பேரறிவினைப் பெருக்கி இறைவனை யடைதல் வேண்டுமென்னும் வேறொரு முடிந்த செய்கைக்கு இதனைக் கருவியளவாய் உணர்வது அவர்

* மணிமேகலை, கக: எசு-அ0.

தமக்கு மிகவும் இன்றியமையாததாகும். இவ்வுணர்ச்சி ஆண் பெண்ணுவார் இருபாலார்க்கும் மிகத் தெளிவான முறையில் இருத்தல்வேண்டும். பின்னர், தமக்குப் பசித் துன்பம் வந்துவருத்துதல் போலவே ஏனையோர்க்கும் அத் துன்பம் விடாது பற்றி வருத்தும் என்பதனை அவர் நன்றாய் உணர்வாராதலின், தம்மை அப் பசித் துன்பத்தினின்றுங் காப்பாற்றிக் கொள்ளுதல் போலவே பிறரையும் அதனினின்றுங் காப்பாற்றுவதற்கு அவ்விருபாலாரும் விழைவர்; எனவே, அவ்வாறு விழைந்து ஏனையோரின் பசித் துன்பத்தினையும் பரிந்து நீக்குதல் பின்பு இல்வாழ்வார்க்கு இன்றிமையாத கடமையாகின்றது. அவ் வேனையோரினும், வீணே காலத்தைக் கழிக்காது பிறப்பின் நோக்கத்தைப் பின்பற்றி அறிவு பெருக்கி இறைவனையடைதற்கு முயலும் அறநெறியாளர்க்கு அவர்தம் உடம்பினால் அவர்க்கேதும் ஊறு விளைந்து கவலை நேராவண்ணம் அவரது பசித்துன்பத்தை நீக்குதல் மிகச் சிறந்ததாகும் என்க.

> "ஆறிடும் வேள்வி யருமறை நூலவர்
> கூறிடும் அந்தணர் கோடிபேர் உண்பதில்
> நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலே
> பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே."*

என்னும் திருமூலர் திருமொழியும் இதனை நன்கு விளக்கும். பசித்துன்பம் நீக்குதற்கு முன்வருவாரெவரும், இனி அவர்க்குறும் பிணி முதலியன களைதற்கு மருந்து முதலியன உதவுதலுஞ் செய்வர். இவ்வாறு இல்வாழ்வாரற் பசித்துன்பம் முதலியன நீங்கப்பெறும் அறநெறியாளர் முதலியோர் மூவகையினராவர்.

## மூவகை அறவோர்:

எல்லாமக்களும் ஆணும் பெண்ணுமாய்க் கூடியமர்ந்து இல்லறம் நிகழ்த்துங் கட்டாயம் உடையரென்று ஆசிரியன்மார்க்கும் இறைவற்கும் அது கருத்தாதல்

---

* திருமந்திரம், கஅசுக.

காட்டி மேலே விளக்கியிருக்கின்றமையால், இங்குக் கூறப் படும் மூவகையினரும் இல்வாழ்க்கையினையுடையவரே யென்பது அறியற்பாலது. அவர்தம்முள் எவரும் மனைவி மக்களையும் வீடுவாசல்களையும் விட்டு நீங்கித் தனித் திருப்பவரல்லர். இதனை மயக்கத்திற்கிடமில்லாத வகை யில் நன்றாய்க் கருத்திற் பதித்துக்கொள்ளல் வேண்டும். இனி அம் மூவகையினரென்பார் எவரோவெனின்:

இல்லற வாழ்க்கையில் நிற்பார் புதிதுமேற் கொண்டு அவ்வில்வாழ்க்கையினை மிக்க ஆவலுடன் நுகருநிலையின ரென்றும், பல்லாண்டுகளாக அதனை மேற்கொண்டு நன்கு நுகர்ந்து நுகர்ந்து அவற்றின் நிலையாமை கண்டு அம்முகத்தால் அதனைத் துறந்த உள்ளத்தினராய் இறை வன் அருட்கண்ணராய் நுகருநிலையினரென்றும் இரு வகைப்படுவர். இவ் விருவகையினரையும் இல்வாழ்க்கை யின் முன்நிலையினரென்றும் அதன் பின்நிலையினரென்றுங் கூறலாம். முன் நிலையினர் இவ் வுலக வாழ்க்கையினை ஒரு நுகர்தற்குரிய பொருளாக எடுத்து அதன்கண் முதல் நோக்கம் வைத்து நுகர்ந்துகொண்டிருப்பர். பின் நிலை யினர் அவ்வாறு நுகர்ந்துகொண்டிராமல், அதனை அத னின் வேறானதோர் இறைவனின்ப வாழ்க்கைக்குக் கருவி யாய் நினைந்து, தமது முதல்நோக்கத்தினை இறைவனின்ப வாழ்க்கைக்கண் நிறுத்தி மற்றுத் தமது துணைநோக்கத் தினையே இவ் வில்வாழ்க்கைக்கண் நிறுத்தி நுகர்ந்திடுவர். இவ் விருவேறு நிலையினரும் ஒருவரையொப்பவே ஆணும் பெண்ணுமாய்க் கூடி வெளிக்கு ஒரே நோக்கத்தினர் போல இல்வாழ்க்கையினை நிகழ்த்துவராயினும், இவர் தம்முள் ஒருவர் இல்லறத்தார்; மற்றொருவர் துறவறத்தா ராவரென்க. முன்நிலையினர் இல்லறத்தாரும் பின் நிலை யினர் துறவறத்தாருமாவரென் றுணர்தல் வேண்டும். இவ்விருவகை நிலையினரையும் ஒருவமை முகத்தால் விளக் கிக் காட்டுவதானால், முன் நிலையினர் தாமரையிலையின் அடிப்பக்கத்திற் பற்றிய நீருக்கும், பின் நிலையினர் அவ் விலையின் மேற்பக்கத்திற் பற்றியும் பற்றாமலிருக்கும்

நீருக்கும் ஒப்பாவரென்று கூறல்வேண்டும். முன் நிலை யினர் இல்வாழ்க்கையை இல்லறத்தில் நின்று நுகர்ந்து பார்த்துத் துவர்ப்புற்றுச் சில வாண்டுகளிலெல்லாம் அவ் வாழ்க்கையைத் துறவறத்தில் நின்று நுகரும் பின் நிலை யினராய் மாறுவர். திருக்குறள் முதலான தலைவந்த நூல் களிலெல்லாம் இல்லறத்தாரென்று கூறப்படுவோர் இல் வாழ்க்கையின் முன் நிலையினரென்றும், துறவறத்தா ரெனப்படுவோர் அவ் வில்வாழ்க்கையின் பின் நிலையின ரென்றும் உற்றறிந்து கொள்க. எனவே, இல்வாழ்க்கை யென்பது இல்லற வாழ்க்கையெனவும், துறவற வாழ்க்கை யெனவும் இருவகைப்பட்டு, நுண்ணிய அறிவினர்க்கு இவ் வாறு நன்றாய்ப் பிரிந்து விளங்கும்.

இல்வாழ்க்கையின் முன் நிலையினரான இல்லறத்தார் இல்வாழ்க்கையினை நுகர்ந்து பார்க்கும் பற்றுள்ள நிலையினராய் இருத்தலால், அவ் வில்வாழ்க்கையின் பின் நிலையினரான துறவறத்தார், தாம் அவ்வாழ்க்கையினை முன் சென்று நுகர்ந்து பார்த்துப் பழகிய தமது பற்றற்ற நிலையினையும் அந்நிலையின் எய்துமாற்றையும் அம் முன் நிலையினர்க்கு எடுத்துக்காட்டி அவரையும் அங்ஙனம் பற் றற்று நுகரும் துறவறநிலைக்குக் கொணரும் ஆசிரியராய்த் திகழ்வர். எனவே இல்வாழ்க்கையின் பின் நிலையினரான துறவறத்தார் முன் நிலையினர்க்கு ஆசிரியராகின்ற முறை மையால், 'அறவோ' ரெனப்படுவார். இனி அவரே தமது அருளொழுக்க நன்முறையினால் 'அந்தண' ரெனப் படுவார். தமது உள்ளத்துறவு முறையால் 'துறவோ' ரெனப்படுவார். ஆகவே, இச் சிற்சில வேறுபாடுகளோடு கூடி, 'அறவோர்' என்பாரும், 'அந்தண' ரென்பாரும், 'துறவோ'ரென்பாரும் இல்வாழ்க்கையின் பின் நிலையினர், அஃதாவது மேல் நிலையினரான ஒருவகையினரே யாவர் என்க.

இனி இல்லறத்தாரென்று இங்கெடுத்துக் கொள் ளப்பட்டவர் இல்வாழ்க்கையின் முன்னிலையினரேயாவ ராதலால், பிறர்க்குப் பசிதீர்க்கும் அறவினையைப் புரிபவ

ரும் பெரும்பாலும் அவரே யாவர். அவர் இல்வாழ்க்கை நுகர்ச்சியினைச் சுவைத்துக் காணும் நிலையினராயிருத்தலால், அவரினும் அவ் வில்வாழ்க்கைக்கண் பற்றற்ற உள்ளத்தினராயிருக்கும் துறவறத்தாரே அறியாமையைத் தேய்த்து இறைவனையறியும் அருண்முயற்சியின மிகுதியும் உடையவராவர். அங்ஙனம் உயிர்முயற்சி உடையார்க்கு உணவு முதலியவைகள் சேகரித்தலான உடம்பின் முயற்சி மிக்கிருத்தலாகாது. அதனால் அவரது அருளுடைமைப் புக் குன்றிக் குறைந்துபோம். ஆகவே, இல்லற நிலையினர் துறவறத்தார்க்கு அங்ஙனம் அவர்தம் அருள் முயற்சி குன்றிக் குறையாதவாறு அவரது பசித்துன்பம் முதலியவற்றை நீக்குதற்கு உரியவராவர். இவ்வளவுங் கூறியவாற்றால், இல்வாழ்க்கையினராற் பசித்துன்பம் முதலியன நீங்கப் பெறுதற்குரியரான இயல்புடைய மூன்று வகையினரில் துறவோர் ஒருவகையினராவர் என்பது விளங்கும்.

## இயல்புடைய மூவர் :

இங்ஙனம் துறவோர் ஒரு வகையினராக, மற்றொரு வகையினர் விருந்தினர்; இன்னொரு வகையினர் சுற்றத்தார் என்க.

விருந்தினரென்பார், முன்பின் அறியாதவராய்ப் பசித்துவரும் இல்லற நிலையினர். இவர்தாம் தாம் மேற்கொண்டதொரு நற்றொழிலை முன்னிட்டு ஊர்விட்டு ஊர் செல்பவர். செல்லுமிடங்களில், இடத்தானும் காலத்தானும் பிறவசதிகள் குறைவானும் உணவு முதலியவற்றைத் தாமே ஏற்பாடு செய்துகொள்ளல் ஏலாதாயின், ஆங்கவர் பிறர் உதவியை நாடி நிற்பர். அஞ்ஞான்று அவரைத் தமதில்லத்திற்கு விருந்தாக ஏற்றுக்கொண்டு அவர்க்கு உண்டி முதலியன உதவுதல் இல்வாழ்வார் கடனாம். சுற்றத்தாரைத் தமதில்லில் இருத்தி உணவிடுதல் விருந்தாகாதென்பது இங்கு நன்றாய்க் கருத்திருத்தற்பாலது.

இனிச் சுற்றமெனப்படுவர் உடம்பின் தொடர்பாலும் பிறவாற்றாலும் தம்மைச் சூழ்ந்து நிற்பவராவர்.

இருக்கும் இடத்தின் தொடர்பாலும் அலுவற்றொடர்பாலுந் தம்மைச் சூழ்ந்து நிற்பவரெல்லாரும் 'சுற்ற' மென்னும் இவ் வகையுள் அடங்குவர். இவர்தாம் காதலன் காதலியராக மணம்புரிந்து இல்வாழ்க்கையில் நிற்கும் பொழுது தம்முள் ஒருவரையொருவர் பொருள்வயிற் பிரிவு முதலிய ஏதுக்களாற் பிரிந்து தனியரானாலும், அல்லது தம்முள் ஒருவர் இறந்துபோகத் துணையற்றுத் தனியரானாலும் இவரெல்லாரும் அஞ்ஞான்று இல்லறநிலையில் நிற்குந் தம் சுற்றத்தவரால் உண்டிமுதலியன கொடுத்துக் காப்பாற்றப்படுதற் குரியராவர். தமது சுற்றத்தில் திருமணம் கூடாத துணையற்ற ஏழைச் சிறுவர் சிறுமிகளும் இங்ஙனங் காப்பாற்றப்படுதற்குரியர். இவ்வாறு சுற்றத்தார், அறவோர், விருந்தினர் என்னும் மூவகையினர்க்கும் இல்வாழ்வார் உண்டி முதலியன உதவுதலிற் சிறந்த துணைவராயிருத்தல் வேண்டுமென்பது,

"இல்வாழ்வா னென்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை"*

என்று நாயனாரால் நன்கெடுத்துக் காட்டப்பட்டது. இம் முத்திறத்தார்க்கும் விருந்திடும் முறைமையினால் இல்வாழ்வார்க்கு அவர்தம் உள்ளப்பான்மை மேன்மையாகிச் செம்மைப்படுதலால், அவர்க்கஃது அவர்தம் முன்னேற்றத்திற்கு உறுதுணையாகும். தலைவன் தலைவியர் இல்வாழ்க்கையை மேற்கொள்வதெல்லாம் தக்கார்க்கு விருந்தளித்தற்கேயாமென்று,

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"†

என்னுந் திருக்குறள் கொண்டு விளக்கிய நாயனார், அவ்வில்லறப் பகுதி முழுமையும் அன்புடைமை, இனியவைகூறல், செய்ந்நன்றி யறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையு

* குறள், இல்வாழ்க்கை: க. † குறள், விருந்தோம்பல்: க.

டைமை, அழுக்காறுமை, வெஃகாமை, புறங்கூறுமை, பய னிலசொல்லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை, புகழ் என்னும் செம்மைப் பண்புகளில் இல்வாழ்வார் படிப் படியாய் உயர்ந்து துறவற நிலைக்குத் தகுதியாமாறு உள் ளச்செம்மை பெறுமாற்றினை முறை முறையாய் நன்கு விளக்கிக் காட்டுதலால், விருந்திடும் நட்பமுணர்ந்து அது செய்வார்க்கு அச் செய்கைமுகத்தாலேயே அவர்தம் உள்ளம் செம்மைப்பட்டுத் திருந்தி வரவர உயர்ந்து வரு கின்றதென்பதும் வெளிப்படையாம்.

பெருந்தண் வாழ்க்கை :

இவ்வாறான திருந்திய உள்ள நிலைகளோடு கூடிய இல் வாழ்க்கையைச் சிலப்பதிகார நூலாசிரியரான ஆசிரியர் இளங்கோவடிகள், தமது வாய்குளிரப் 'பெருந்தண் வாழ்க் கை' யென்று கூறி மகிழ்ந்தார். அங்ஙனங் கூறும்பொழுதே இல்வாழ்வார் தம்மை நாடிய மூவகையினர்க்கும் மேற்காட் டியவாறு உண்டி முதலியன உதவிப் போற்றுமிடத்தே தான் அவர்தம் இல்வாழ்க்கை பெருந்தண் வாழ்க்கை யென்னும் உயர்வுக்கு வருமென்பதனையும் நன்கு தேற்றி,

*"மறப்பரும் கேண்மையோடு அறப்பரி சாரமும்
விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்."†

என்று கூறியருளினர். இவ்வரும்பெரும் அடிகட்கு நுண் ணுரை தெரிக்கும் அடியார்க்குநல்லார், "இதன் கருத்து : கேண்மையோடெனவே சுற்றந்தழாலும், அறப்பரிசாரமு மெனவே அறவோர்க்களித்தலும் அந்தணரோம்பலும் துறவோர்க்கெதிர்தலு மென்பதாயிற்று. இவற்றோடே பொருந்திய வாழ்க்கையெனவே அருளுடைமை, அன்பு டைமை, இனியவைகூறல் முதலிய இல்லறப்பகுதியெல்லா மடங்கும்" என்று மிகத் தெளிவாய் அவ்வடிகளின் கருத் துண்மையை விளக்குதலின் மேற்காட்டிய உண்மைகளெல் லாம் நன்கு விளங்குதல் காண்க.

---

* பரிசாரம் - தொண்டு. † சிலப். உ : அ௫ - கூ.

இனி, அறியாமையைத் தேய்த்து அறிவைப் பெருக்கி இறைவன் திருவருட்கு இலக்காதற் பொருட்டு இல்லறத்தை மேற்கொள்ளுதலான உண்மையும், அவ்வில்லற நிகழ்ச்சி விருந்து புறந்தரூஉம்வழி அன்புடைமை முதலான இனிய அருளியல்புகளிற் றம்மைப் பழக்குவித்து இறைவனருளை விளைவிக்குமாறும் நன்கு தெளிந்த காதன்மக்கள்தாம் அந்நோக்கத்தோடு இல்லறம் பயில்வர். நோக்கமறிந்து பயிறலால் அவ்வாண்பெண் காதன்மக்கள் இருவரும் இல்லறத்தின் உண்மைப் பயனை எளிதில் அடையப் பெறுவர். அஃதறியா மக்கள் அங்ஙனம் அதன்பயனை எளிதில் அடைதல் இயலாது. ஆதலால் அக் காதன் மக்கள் இருவருக்கும் தெளிந்த கல்வியறிவும் அதன் உணர்ச்சியும் இன்றியமையாது வேண்டற்பாலனவாம். இவற்றை இளமையிலேயே அவர்தம் பெற்றோர்கள் அவர்தம் மேல் வாழ்க்கையினைக் கருத்தூன்றி நினைந்து பார்த்து அவர்களைப் பழக்கி வந்திருத்தலும் முதன்மையானது. அன்புடைமை இனியவைகூறல் முதலான மேலெடுத்துக் காட்டிய இல்வாழ்க்கையின் மெய்த்தன்மைகளி லெல்லாமும் பெற்றோர் தம் மக்களை நன்கு ஒழுகுமாறு பயிற்றி வந்திருத்தல்வேண்டும். மக்களைப் பெற்றோர், அவர்கள் பிற்காலவாழ்க்கையைச் சிறிதேனும் நினையாமலும், நினைந்து, கல்வியறிவு, தெளிவு நலம், காதலுணர்ச்சி, கடவுளன்பு, இல்லறவாழ்வு, அன்புடைமை முதலிய நல்லொழுக்கங்கள் என்பவற்றி லெல்லாம் இளமையிலிருந்தே பயிற்றாமலும் உண்டியும் உடையும் அணியுமட்டுங் கொடுத்து அவற்றிலேயே மேன்மேலும் அவாவுடையராம்படி அவர்களைப் பழக்கி வந்தால் அம்மக்கள் ஆண்டின் முதிர்ந்து மணங்கூடி நிகழ்த்தும் இல்வாழ்க்கை சிறிதேனும் சிறப்புற்று விளங்குமோ? இல்வாழ்க்கையின் பயனை அம்மக்கள் சிறிதும் உணராரன்றோ?

இங்ஙனமே, தலைவன் தலைவியர் இருவரும் தமக்குள் விளைந்த காதலுணர்ச்சியினைத் தீதல்லாத நல்லவழியில் ஒருவர்க்கொருவர் பெருக்கியும் பெருக்குவித்துக்கொண்

டும் உண்மையான் உணர்ந்து மகிழ்தற்கான இன்னிசை மிழற்றல், அறிவுப் போரிடல், புலமையால் வெல்லல், குறிப்பறிவுறுத்தல், ஆடலமைத்தல், பாடலொடாடல், பூவிளையாடல், நீர் விளையாடல், தூய்மை விளக்கல், அழகு மிகுத்தல், நடையுடை மாற்றல், சாயல் விளைத்தல், காத லுணர்த்தல், நிறையழிதல், அழியாது நிறுத்தல், ஊடல் புணர்த்தல், அளவின் புலத்தல் முதலிய இனிய திறங்க ளெல்லாம் பயின்றும் தெளிவு மிகப் பெறுதல்வேண்டும். இவைதாம் அவர்கட்கு இயன்றமட்டும் விளக்கங் கொள் ளும் வகையில், அவர் தம் பெற்றோர் கல்வி நற்பழக்கம் முதலியவற்றில் அவர்களை இளமை தொட்டே பழக்குதல் வேண்டும். இவை தமக்கெல்லாம் அக் காதன் மக்கட்கு அறிவின் விரிவு மிக இன்றியமையாத தாகு மென்க. இத்துணைக் காதலுணர்ச்சியும், அறிவு நூலுணர்ச்சியும், அவையிரண்டின் நுகர்ச்சிப் பழக்கமும் ஆண் பெண் என் னும் இருபாலார்க்கும் சிறந்த கல்வியுணர்ச்சியோடு கூடி யிருக்குமானல், அவர்களால் நிகழ்த்தப்படும் இல்லற வாழ்க்கை, அடியார் பெருமக்கள் எல்லாம் வல்ல அன்பரு ளின்பங்களின் நிலைக்களனாக ஆண்டவனோடிருந்து நுகர்ந் துணரும் பேரின்ப வாழ்க்கைக்கு ஓர் அரிய நெறியேயாகு மென்பது மிகையாகாது.

*"அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன்?"†

என்று இல்வாழ்க்கையின் உண்மையை உண்மையான் உணர்ந்து இனிது நுகர்ந்து விளங்கிய திருவள்ளுவனர் மிகத் தெளிவாக ஆற்றலோடு புலப்படுத்துக் காட்டுதல் காண்க.

மக்கட்பேறு :

இன்ன இயல்புகளான் வாழ்க்கை நிகழ்த்தும் இல் லறத்தார்க்கு அவரது முதல் நோக்கம் காதலுணர்ச்சிக்

---

*புறத்தாற்றில்-புறம்பாகிய துறவறத்தில் என்னும்பொருட்டு.
† குறள், இல்வாழ்க்கை: சு.

கண்ணும் இறைவனருட்கண்ணுமே பயின்று கிடக்குமாதலின், அவர் தமக்குள் மெய்யுறு புணர்ச்சி மிக அரிதாகவே நிகழும். ஒரோவொருகால் மிக அரிதாய் நிகழும் அப்புணர்ச்சிதானும் இழிந்த காமத்தன்மையினால் நிகழாமல் இறைவனது அருட்குறிப்புக்கு ஆளாதல் வேண்டுமேயென்னுங் குறிப்பினால் மக்களைப் பெறுகின்ற நோக்கத்தோடுமட்டும் உயர்ந்த அருளுணர்ச்சியின் வழியதாய் நிகழாநிற்கும். அருளுருவான ஆண்டவன் உயிர்களின் மலத்தினைக் கொடுத்தற்பொருட்டு அவைதம்மை ஒவ்வோருடம்பினும் புகுத்தி உலகத்திற் பிறப்பிக்கும் முயற்சியில் முனைந்து நின்றருளுதலின், அவன் எடுத்துக் கொள்ளும் அம்முயற்சிக்கு உறுதுணையாக உலகத்தில் முன்னமேயே பிறந்து சிறிதளவு வளர்ந்துவரப்பெற்ற ஏனையுயிர்கள் தம்முண் மெய்யுற்றுப் புணர்ந்து மக்களைப் பெற்றெடுப்பாராயின், அஃதவனால் பெரிதும் போற்றித் தழுவப்படும். அவ்வாற்றால், அவரெல்லாம் இறைவனருளுக்கு இலக்காகுவர். எனவே, மக்களைப் பெற்றெடுக்கும் முயற்சியின் பொருட்டே மெய்யுறுபுணர்ச்சி நிகழ்வதாமெனவும், மற்று வேறுவகையின் இன்பம் பெறும் பொருட்டு இது நிகழ்வதன்றாமெனவும், ஏனைக் காதலின்பங்களெல்லாம் தலைவன் தலைவியருடைய அறிவாராய்ச்சிகளின் வழியதான நட்புணர்ச்சிக் கண்ணவாமென்பதும் பகுத்துணர்ந்து அவை தம்மை இறைவனருள்விளக்கத்தினால் நுகர்ந்து காணவே மெய்ம்முறையினால் வாழும் இல்லறவாழ்க்கையரின் நன்முறையாய் முடிகின்றது. இவ்வகை யுணர்ச்சிகளாற் கவ்விக் கிடக்கும் நெஞ்சப்பான்மை வாய்ந்த இல்வாழ்வார்க்குப் பிறக்கும் மக்களே தூய உடம்பும் தூய அறிவும் தூய உணர்ச்சியும் நிரம்ப உடைய நன்மக்களாய்ப் பிறங்கி, இறைவனெடுத்த முயற்சிக்கு நற்பயன் காட்டுவாராய் விளங்குவர். 'செய்வன திருந்தச் செய்' என்னும் உயர்வுரைப்படி இறைவனது நோக்கத்திற்கிணங்க மக்கட்பேற்றுக்கு உடல்புணரும் இல்வாழ்க்கை மாந்தர், முதலில் தூய உடம்பு, தூய அறிவு, தூய உணர்ச்சி முதலியவற்றில் தம்மைச் சிறப்பாக வைத்

துக்கொண்டு, அதன் பின்னர் அவ்வியல்புகள் தாம் ஒருரு வெடுத்தாலென அழகுறு மக்கள் தோன்றல் வேண்டு மென்னும் முனைந்த உணர்ச்சியுடன் இறையருள் நோக்கத் தினை முற்கொண்டு தமக்குட் கூட்டம் பெறுவராயின், அம்முறையினால் அவர் எண்ணியவாறே ஆருருண் மக்கள் பொலிந்து தோன்றுவராதலின், அவ்வாற்றால் அவர் இறை வனது நோக்கத்திற்கு முழுதும் பயன்பட்டவராவர். அஞ் ஞான்று அவர்தங் கூட்ட நிகழ்ச்சிக்கண், இழிந்த காம உணர்ச்சி யென்பது இறைவன் முயற்சிக்கிணங்க மக் களைப் பெறல்வேண்டுமென்னும் அருளுணர்ச்சிக்கு முன் தன்னாற்றல் கெட்டு அடங்கி மற்றதற்கு உதவியாய் நிற் கும். இவற்றிற்கெல்லாம் இல்வாழ்வா ரிருபாலார்க்கும் தக்க உணர்ச்சி விரிவும் அது தன்னைப் பயக்கவல்ல உயர்ந்த கல்வியறிவும் நிரம்பவும் வேண்டுமென்பது மறுக் கப்படாத உண்மையாகும்.

இன்னும், 'ஆணும் பெண்ணுமாய் இயற்கையே யமைந்து உலகத்திற் பிறத்தலின் நோக்கம் மேற்கூறியவா றெல்லாம் காதல் நுகர்ந்தும் அறநெறி யொழுகியும் அறியாமையைத் தேய்த்து அறிவைப் பெருக்கி இறைவ னருளுணர்ந்து இன்ப மெய்தற்கா' மென்னும் முதன் மையினை இல்வாழ்மக்கள் தெளிந்த அறிவுணர்ச்சி யோடு இனிதுணர்வாராயின் மட்டும், அவர் தமக்குள் ஒற்றுமைக் குறைவும், தீய ஒழுக்கமும், சண்டை சச்சரவுகளும், கொலை பழி முதலியவைகளும் சிறிதும் நேரா. அப்போது அக்காதன்மக்களின் முதல் நோக்கம் அறிவைப் பெருக்குதலிலேயே முனைத்து நிலையுமாதலின், அதன்மேற் கருத்துவைத்து முயலும் அவரெல்லாம் தமது வாழ்க்கையினிடையே வறுமையுண்டாயினும், அல்லது நகை உடை உணவு முதலியன இல்லையாய்ப் போயினும், மற்று நோயுங் கவலையும் பிரிவுந் துன்பமும் நெடுக நிகழி னும், இன்னும் இவை போன்ற இடுக்கண்கள் பல இடை யறாது நேரினும் 'காரியத்தின்மேற் கண்' என்றபடி தமக் குள் ஒற்றுமை குறைந்து நெஞ்சம் விலகித் தளர்ந்து தங்

கடமை வழுவுவாரல்லர். ஆகவே திருமணங் கூடுங் காதன் மக்கட்குச் சிறந்த காதலுணர்ச்சியும், தெளிந்த அறிவு நூற்கல்வியும், உயர்ந்த பழக்கவழக்கங்களும் இளமை தொட்டே அமைந்திருக்குமாயின், திருந்திய இல்லற வாழ்க்கை அவரிடையே நிலைபெறுஉய் நிகழப்பெறு மென்பது செவ்விதின் விளங்கிற்று.

இவ்வகைப்பட்ட திருத்தமான உள்ளத் தன்மைகளை அவ் வாண்பெண் மக்கட்கு விளைத்துத் தராது, வறிதே வெளிக் கட்டுப்பாடுகளைமட்டும் இயற்கைக்கு முரணுக ஓரளவுமின்றி நிரம்ப அமைத்து வைத்தால், அங்ஙனம் அமைத்து வைத்ததோ டமையாமல் அக் கட்டுப்பாடு களிலே கொழுந்தனைய இளம் பெண்களும் இளம் பிள்ளைகளும் மக்கள் தம்மின் வாழ்க்கை நுட்பங்களையும் இறைவனது* திருவுளப்பாங்கினையும் நுனித்தறியும் வன்மையற்ற அறிவிலாமாந்தரின் மேற்பார்வையுட் பட்டு அடக்கி யாளப்பட்டால், அம் முயற்சி வயலுக்கிறைத்த நீராகாது விழலுக்கிறைத்த நீராகவே முடிந்திடும். திருமணமக்கட்கு உள்ளச் செம்மையினை விளைத்துத்தராது புறக்கட்டுப்பாடுகளை மட்டும் பெருக்கிவைக்குஞ் செய்கை அவர்கட்கும் பிறர்க்கும் ஏதும் பயன் றருவதன்றுமென்பது தேற்றி நந்தம் பெருநாவலர்கோன்,

> "சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
> நிறைகாக்குங் காப்பே தலை."*

என்று ஆணித்தரமாக அறைந்து கூறுந் தெய்வத் திருக்குறள் இங்குக் கருத்தூன்றி நினைப்பிருத்தற்பாலது.

## கடவுள் வழிபாடு :

இனி இல்வாழ் மக்கட்கு இத்துணை இல்லற வொழுக்கங்களோடு தெய்வம் வணங்கும் முதன்மையான செயலும் தீதல்லாத நன் முறையிலே நிகழ்தற்கான உண்மையுணர்ச்சி இன்றியமையாது வேண்டற்பாலதாம். இவ்வகையான தெய்வ உணர்ச்சியும், இவ்வுணர்ச்சியினுலான

* குறள், வாழ்க்கைத்துணை நலம்: எ.

வணக்கச் செயல்களும் ஆண்பெண்ணுவா ரிருபாலார்க்கும் ஒத்த நிலையில் இருத்தல்வேண்டும். இற்றைக்கு ஐயாயி ரத்து ஐஞ்ஞூறு ஆண்டுகட்கு முற்பட்டிருந்த தொல் லாசிரியரான தொல்காப்பியனுர், "கிழவனுங் கிழத்தியுஞ் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"* என்று நூற்பா அருளி, அவர்க்கும் முன்னிருந்த மிகப் பழைய தண்டமிழ் மக்களில் ஆண் பெண் இருபாலாரும் இல்லறம் நிகழ்த்து மிடத்துத் துறந்த உள்ளத்தாராய் நின்று வீடுபேற்றின்பம் பெறற் பொருட்டு இறைவன் வணக்கத்திற் பயின்று பழகிய உண்மையைத் தெளிவாய் விளக்கியிருக்கின்ருர்.

† "கோட்டம் வழிபாடு கொண்டி ருப்பாள்...
அறுகு சிறுபூளை நெல்லொடு தூய்" ‡

என்று சிலப்பதிகாரத்தின்கண்ணும், "அஞ்சேலென் றருள் செய்வான் அமருங் கோயில் வலம்வந்த மடவார்கள்"§ என்று திருஞானசம்பந்தப் பெருமான் தேவாரத்தின்கண்ணும் இதற்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. திருத்தொண் டர் புராணத்திலுள்ள மங்கையர்க்கரசியார், பரவையார், சங்கிலியார் வரலாறுகளும் இவ்வுண்மையை விளக்கு வனவாம்.

மகளிராவார் தம் அருமைக் கணவன்மாருடன் கூடித் திருக்கோயில் சென்று வழிபடுமியல்பு, அரிவாட்டாய நாயனுர், திருநீலநக்க நாயனுர் முதலியோர் வரலாறுகளிற் பெறப்படும். மாணிக்கவாசகப் பெருமான் இல்வாழ்க்கைப் பெண்டிர்கள் இல்லத்திலுங் கோயிலிலும் இருந்து தங் கணவரொடும் ஏனைய மகளிரொடுங் கூடிக் கடவுளை வணங்கும் முறைகளெல்லாம், திருவெம்பாவை, திருவம் மானை, திருப்பொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருத்தோணேக்கம், திருப்பொன்னூசல் முதலான தலைப்புக்களில் மிக அழகாகப் பாராட்டிக் காட்டினுர். ஆகவே ஆசிரியர் நக்கீரனுர் தலைமகனுல் "தலை நின்று ஒழுகப்படுவன தருமம் அருத்தம் காமம் என

---

* தொல். கற்பு: ருக. † கோட்டம் - கோயில்.

‡ சிலப். கனுத்: ௬௦-௬௩. § சம்பந். தேவா. திருவையாறு. க

மூன்று. அம்மூன்றினையும் ஒரு பகலை மூன்று கூறிட்டு முதற்கட் பத்து நாழிகையும் அறத்தொடுபடச் செல்லும். இடையன பத்து நாழிகையும் அருத்தத்தொடுபடச் செல்லும். கடையன பத்து நாழிகையும் காமத்தொடுபடச் செல்லும். ஆதலால் தலைமகன் முதற்கண் நாழிகை தருமத்தொடுபடுவான். தலைமகளும் வேண்டவே தானும் வேண்டிப்போந்து அத்தாணி புகுந்து அறங்கேட்பதும் அறத்தொடுபடச் செல்வதுஞ் செய்யும்''* என்று கூறு இன்றமையால் இல்வாழ் மக்கள் இருபாலாரும் இடையன கடையன பப்பத்து நாழிகைகள் முறையே பொருள் சமைத்தற்கும், காதல் விளையாடுதற்கும் பகுத்துக் கொண்டாற்போலவே, தெய்வம் வணங்குதல், தெய்வ விளக்க விரிவுரைகள் கேட்டல் சொல்லல் முதலான அறநெறிப் பழக்கங்கள் பயிறற்கும் முதற் பத்து நாழிகையும் பகுத்தெடுத்துக்கொள்ளற் குரியராகின்றார்.

பொருள்வயிற் பிரிந்து பொருள் தொகுத்து வந்த தலைவனும், அவனை ஆராக்காதலாய் எதிர்கொண்டு வரவேற்று அவனுடன் அமர்ந்த அவன் அருமைத் தலைவியும் மேற்கூறியவாரெல்லாம் திருந்திய இல்லற வாழ்க்கையினை மெய்யுணர்ச்சியுடன் நிகழ்த்துகின்ற முறையாற் பேரறிவின் விளக்கமும், காதலுணர்ச்சியுடன் நிகழ்த்துகின்ற முறையால் அன்பின்ப விளக்கமும், இவ்விருவகையுணர்ச்சிகளோடு மக்கட்பேற் றுணர்ச்சியும் பெற்று அவ்வில்லற வாழ்க்கையினைத் தெய்வம் வணங்கி நிகழ்த்துகின்ற முறையால் திருவருள் விளக்கமும் முற்றப் பெற்றுத் துறவுணர்ந்து இறைவன் திருவருள் காணுந் தகுதி வாய்ந்து இன்பத்தின்கண்ணராய் நீடு வாழ்வர். இதுவே, தமிழர் நாகரிகமுற்றிருந்த பண்டைக் காலத்தில் அவர்தமக்குள் நிகழ்ந்த இனிய இல்லற வொழுக்கமாமென்பது.



---

* இறைய. ௨0.

# படங்களின் அட்டவணை

க. தலைவன் தலைவியைக் கண்ணுறுதல்.

உ. தலைவி விளையாடும் பொழிலைத் தன் பாங்கனுக்குத் தலைவன் அறிவித்தல்.

௩. தலைவன் தலைவியும் தோழியும் இருக்குமிடஞ் சென்று கையுறை ஏற்க வேண்டுதல்.

௪. தலைவியின் உருவைக் கிழியில் எழுதித் தலைவன் மடன்மா ஊர்தல்.

ரு. தலைவன் வரவைத் தோழி நீக்கி நிறுத்தல்.

௬. தோழி, தலைவியைப் பகற்குறி யிடத்திற் கொணர்ந்து நிறுத்திச் செல்லுதல்.

எ. இராக்குறியிடத்துத் தோழி தலைவியை அழைத்து வருதல்.

அ. தலைவியைப் பிரிந்து தலைவன் தனித்திருந்து வருந்துதல்.

௯. தலைவியின் களவொழுக்கத்தைத் தோழி செவி லிக்கு அறமுறை பொருந்த அறிவுறுத்துதல்.

க0. திருமண நிகழ்ச்சியில் தலைவனுந் தலைவியும் ஊச லாடுதல்.

கக. பொருள் காரணமாகத் தலைவன் பிரிந்தபின் குறித்த காலத்தில் அவன் வரவு காணாது தலைவி வருந்துதல்.

கஉ. தலைவனுந் தலைவியும் விருந்து புறந்தருதல்.

---